திருவாவடுதுறை யாதீன வெளியீடு—76.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருமூலர் - திருமந்திரம்.

## கயிலாயசித்தர் உரை.

—○—

திருக்கயிலாயபரம்பரைத்
திருவாவடுதுறைஆதீனத்து
21-வது குருமஹாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக சுவாமிகள்
கட்டளையிட்டருளியபடி

———

அவ்வாதீனவித்துவான்
த. ச. மீனுட்சிசுந்தரம்பிள்ளையால்
பரிசோதித்து நூதனமாக எழுதிய பதவுரையுடன்
பதிப்பிக்கப்பெற்றது.

———

திருமந்திரமாநாடு
1954.



திருமூலதேவநாயனர்.

உ

சிவமயம்.

# முகவுரை.

—o—

திருச்சிற்றம்பலம்.

"ஒன்றவன் தானே இரண்டவன் இன்னருள்
நின்றனன் மூன்றினுள் நான்குணர்ந் தானைந்து
வென்றனன் ஆறு விரிந்தனன் ஏழும்பர்ச்
சென்றனன் தானிருந் தானுணர்ந் தெட்டே."

திருச்சிற்றம்பலம்.

தெய்வச் செந்தண்டமிழ் மொழியிலே தமிழக மக்களுக்குப் பொதுவாக வைப்புநிதி யென அமைந்து விளங்குவன தோத்திர நூல்களும் சாத்திர நூல்களுமேயாம். சைவசமயிகளாகிய தமிழர்களுக்குச் சிறப்பாகவே அவை அமைந்துள்ளன. தோத்திர நூல்கள் 'தேவார திருவாசக' முதலிய பன்னிரு திருமுறைகளே. சாத்திர நூல்கள் 'சிவஞானபோதம்' முதலாகவுள்ள மெய்கண்டநூல்கள் பதினான்குமாம். 'திருமந்திரம்' என்பது மேலே கூறப் பட்ட தோத்திர நூல்களாகிய திருமுறைகளில் பத்தாந் திருமுறையாக வைத்து எண்ணப்படுவது. இது **திருமந்திர மாலை** எனவும் வழங்கப்படும்.

'திருமந்திரமாலை'யை அருளிச்செய்தவர்கள் திருமூல நாயனார். திருமூலர் திருநந்திதேவருடைய திருவருள் பெற்றவர். சிவயோகிகள். திருக்கயிலாயமலையில் உள்ள

தொரு சித்தர் என்பர். அகத்தியமுனிவரைக்கண்டு அளவளாவியிருக்க ஒருகாலத்து அவர் திருவுளங்கொண்டார். பொதியில் மலைக்கு வழிக்கொண்டார். வழியிலேயுள்ள பல சிவதலங்களையும் தரிசித்துத் தில்லையை அடைந்தார். திருநடங்கும்பிட்டுச் சிலநாள் அங்கே வதிந்தார். பின்பு திருவாவடுதுறையை அடைந்தார். சிவதரிசனம் செய்தார். அங்கேயே தங்கியிருக்கவேண்டும் என்னும் குறிப்பு மனத்தில் மூண்டது. எனினும், அதனை மாற்றிப் பொதியில் செல்ல முயன்றார். காவிரிக்கரையை அணுகினார். திருவருள் முன்னின்றது. பசுக்கள் கதறுவதைக்கண்டார். அவர் மனம் இரங்கியது.

சமீபத்தில் உள்ள சாத்தனூரில் பசுமேய்ப்பார் குடியில் தோன்றியவன் மூலன் என்னும் பெயருடையான். அவன் அவ்வூர் அந்தணர் வீட்டுப் பசுக்களை மேய்த்துவரும் தொழிலை மேற்கொண்டு நியமமாக மேய்த்து வருவானாயினான். ஒருநாள் அவன் வாழ்நாள் முடிந்தது: நிலத்தில் இறந்து வீழ்ந்து கிடந்தான். அவன் உடம்பைச் சூழ்ந்து சூழ்ந்து வருந்திப் பசுக்கள் கதறிய காட்சியே அது. இரக்கமுள்ள யோகியார் அப்பசுக்களுக்கு நேர்ந்த துன்பத்தை மாற்ற எண்ணினார். திருவருள் ஒருபிரகாரமாக உள்நின்று உணர்த்த உணர்ந்தார். வழிகண்டார். தமது உடம்பை ஓர் இடத்தில் பத்திரமாகச் சேமித்தார். அட்டமாசித்தி கைவந்தவர் ஆகலின், 'கூடுவிட்டுக் கூடுபாயும்' சித்தியால் (பிராகாமியம்) மூலன் உடம்பில் சிவயோகியார் புகுந்தார். தம் உயிரைப் பாய்த்தியபின் திருமூலராய் எழுந்தார். பசுக்களெல்லாம் நாத்தழும்ப நக்கின, மோந்தன அணைந்தன, கனைத்தன, அளவில்லாத மகிழ்ச்சிகொண்டன. வாலெடுத்துத்

துள்ளிச்சென்று மேயத்தலைப்பட்டன. மாலைப்பொழுது வந்தது. தத்தம் கன்றுகளை நினைந்து பசுக்கள் சாத்தை வேதியர் வீடுகளை அடைந்தன. திருமூலர் எவ்வீட்டிலும் நுழைந்திலர், வெளியே நின்றார்.

இதனைக்கண்ட மூலன் மனைவி திருமூலரைத் தன் கணவன் என்றே தொட்டழைக்கவந்தாள். மூலர் அதற்கிசைந்திலர். 'இங்கு உனக்கு என்னுடன் அணைய ஒன்றில்லை என எதிர் மறுத்தார்', பொதுமடத்துட் புகுந்தார். சிவயோகத்தில் அமர்ந்திருந்தார். மூலன் மனைவி ஊராரிடம்சொல்லி முறையிட்டாள். பயனில்லை. திருமூலர் நிட்டைவிட்டெழுந்தார் வந்தவழியே திரும்பினர் உடலைச் சேமித்துவைத்த இடத்தில் காணாரயினர். திருவருட்குறிப்பைச் சிந்தை செய்து உணர்ந்தார். சிவபெருமான் அருளிய சிவாகமப் பொருளை நிலவுலகத்தில் தமிழினல் செய்தருளவே தமது உடலை மறைத்தார் என உணர்ந்தார். திருவாவடுதுறைக்குச் சென்றார்.

ஒப்பிலாமுலையம்மையையும் கோமுத்தீசுவரரையும் வணங்கினர். மேற்குப்பக்கத்தை அடைந்தார். அரசமரத்தின்கீழ் அமர்ந்து சிவயோகம் புரிந்தார். மூவாயிரம் ஆண்டுகள் சிவயோகத்தமர்ந்திருந்து "**ஒன்றவன்றான்**" எனத் தொடங்கி ஆண்டுக்கொரு மந்திரமாக மூவாயிரம் மந்திரங்களை அருளினர் என ஸ்ரீ சேக்கிழார்சுவாமிகள் பெரியபுராணத்தில் திருமூலர் வரலாற்றை 28—பாடல்களால் அருளிச்செய்துள்ளமை காண்க. திருவாவடுதுறைப்புராணத்திலே இவ்வரலாறு திருமூலதேவரைத் தடுத்தாட்கொண்ட அத்தியாயத்தில்—76 பாடல்களால் கூறப்படுகிறது.

இனி, "தேவர் குறளும் திருநான் மறைமுடிவும், மூவர் தமிழும் முனிமொழியும்— கோவை, திருவா சகமும் திருமூலர் சொல்லும், ஒருவா சகமென் றுணர்", என்பது ஔவையார் திருவாக்கு.

திருமூலதேவர் அருளிய திருமந்திரம் மூவாயிரம் திருப்பாட்டுக்கள் அமைந்தது. "மூலன் உரைசெய்த மூவா யிரந்தமிழ்" என்னும் தொகைச்சிறப்பு இதனை விளக்கும். "முன்னியஅப் பொருண்மாலைத் தமிழ் மூவாயிரம் சாத்தி" என்னும் ஸ்ரீ சேக்கிழார்சுவாமிகள் திருவாக்கும் இதனைத் தெளிவாக்கும். அச்சிட்ட திருமந்திர நூல்களில் (3047 + 1) பாடல்கள் உள்ளன. அதிகப் பாடல்களாக 24 பாடல்கள் சமாஜப்பதிப்பில் உள. மூவாயிரம் மந்திரங்களும் ஒன்பது தந்திரங்களாகப் பகுக்கப்பட்டுள்ளன. இவை காரணம், காமிகம், வீரம், சிந்தம், வாதுளம், யாமளம், காலோத்தரம், சுப்பிரம், மகுடம் என்னும் ஒன்பது ஆகமங்களின் கருத்துக் கள் என்பர் பெரியோர். முதல் தந்திரம்:— மெய்யுணர்வுக் குச் சாதகமாக உள்ள நெறிகளைப்பேசும். பதிபசுபாசமும் விளக்கப்படும். 2-ஆம் தந்திரம்:— சைவபுராணம், இதி காசம், ஆகமம் முதலியவற்றில் உள்ள சில சரிதங்களின் மெய்ப்பொருள் உணர்த்தும். யாக்கைநிலையாமை, செல்வ நிலையாமை, கொல்லாமை, புலால்மறுத்தல்களும் கூறும். 3-வது:— யோகம், பேறு, அட்டமாசித்தி, சாதனங்கள் இவற்றையுணர்த்தும். 4-வது:— மந்திரோபாசனையும்; 5-வது:— சைவமார்க்கப்பிரிவுகளும், 6-வது:— சிவகுரு தரிசனம், திருவடிப்பேறு, திருநீறு, உடல்பொருள் ஆவி தத்தம் செய்தல்களையும்; 7-வது:— சம்பிரதாயம், அடியார், சிவபூஜை, மகேசுராபூசை, குருநிந்தை முதலியவற்றையும்;

8-வது:— பதினெட்டு அவத்தைகள் ஆறு அவத்தைகள் மெய்ப்பேறு முதலியவற்றையும்; 9-வது:— பஞ்சாக்கரம் முதலியவற்றையும் விவரிக்கும் அசபை, திருவம்பலச் சக்கரம், சத்திபேதம், திரிபுரச்சக்கரம், வயிரவிமந்திரம், புவனுபதிசக்கரம், நவாக்கரிசக்கரம், ஆறந்தம், ஞானிகள் செயல், குருமடதெரிசனம் முதலியவைகளும் திருமந்திரத்திலே பேசப்பட்டுள.

இனி, சமயத்தை அளக்கும் கருவிகளாக உள்ளன தத்துவங்களே. சமயம் என்பது மக்கள் ஜீவியத்தில் உயிர்ப் பகுதியாம். சமயப்பற்றில்லாதவன் நல்லவன் என்பதுஅசம்பாவிதம். எந்தச் சமயத்தையாயினும் ஒருவன்பற்றியேதீரவேண்டும். மனத்தைச்செம்மைசெய்வது சமயவொழுக்கம். உணர்விலே உறைத்து நின்று மிகுவதே சமயம். இந்திரியங்களை ஒருமுகப்படுத்துவதே சமயநெறி. "ஆகின்ற தொண்ணூறோடு ஆறும் பொது என்பர்— ஆகின்ற ஆறாறு அருஞ்சைவர் தத்துவம்—ஆகின்ற நாலேழ் வேதாந்தி வயிணவர்க்கு— ஆகின்ற நாலாறு ஐயைந்து மாயாவாதிக்கே" என்னும் 2179 மந்திரத்தால் அவ்வச்சமயத்தவர் தத்துவநிலையும் அவர் கொண்ட பரம்பொருளும் தெளிவாம் என்க.

இனி, கன்னடியத்திருமேனிக் கம்பளச்சட்டைக் கயிலாயசித்தர் என்னும் ஒரு சிவயோகியார் செய்தருளிய உரைப்பிரதியொன்று ஆதீனப்புத்தகசாலை 'சரஸ்வதி மகால்' எட்டுப்பிரதிகளில் கிடைத்தது. இதனை வேறு பிரதியின் துணைதேடி ஆராய்ந்து அச்சிட விரும்பித் தேடும்போது மதுரைத் தமிழ்ச்சங்கத்துப் பாண்டியன் புத்தகசாலையில் ஒரு எட்டுச்சுவடி கிடைத்தது. இதனை ஆராய்ந்து அச்சிட

இவ்விரு பிரதிகளே ஆதாரமாயிருந்தன. ஆதீன ஏட்டுச் சுவடியில் இல்லாத சில பகுதிகள் தமிழ்ச்சங்கத்துப்பிரதியில் சிதையாமல் இருந்தன. இவ்விரண்டு பிரதிகளும் சுமார் 200 ஆண்டுகளுக்கு மேற்பட்ட காலத்தில் எழுதப்பெற்றிருக்கவேண்டும் என அவைகளின் பழமை நின்று காட்டுகின்றது. 'கன்னடியத்திருமேனி' என்பதால் அப்பெரியார் கன்னடதேசத்தவர் என்பதும், 'கம்பளச்சட்டை' என்னும் அடைமொழியால் எப்பொழுதும் கம்பளச்சட்டையால் மேனியை மூடிக்கொண்டே இருப்பார் என்பதும், 'கயிலாய சித்தர்' என்பதால் அவர் திருப்பெயர் அது என்பதும் அறியக்கிடப்பன. (பழுதைகட்டிச் சிற்றம்பலவர் என்பது போலஎன்க.) காலம் முதலிய வரலாறுகள் ஒன்றும் அறிவதற்கில்லை. எனினும், இருநூறு ஆண்டுகளுக்கு முற்பட்டவர் இவர் எனக்கூறலாம். (சுவடிப்பழமையால்). உரையில் அவர் குறிப்பிடும் உவமானங்களால் 'ஐக்கியவாதசைவர்' என்றும், 'சித்தாந்தசைவர் அல்லர்' என்றும் துணிந்து கூறலாம். சித்தாந்தசைவத்துக்குப் பொருந்தாத உரைப்பகுதிகள் உள்ளனவேனும், இந்த மகான் அருளிச்செய்த இவ்வுரை 102 பாடல்களுக்கும் கிடையாதாயின் உண்மைப்பொருளைக் காணச் சிறிதும் இயலாது. இம்மகோபகாரியின் பெருமையும் இவ்வுரையால் நன்கு விளங்கும். ஏடுகளில் (2--8) உரையின்றியே பாடல்கள் எழுதப்பட்டுள.

இவ்வாதீனத்திலேயுள்ள மகாசந்நிதானங்களும், மற்றும் பெரியோர்களிற் பலரும் திருமந்திரத்திலே பல பாடல்களுக்குப் பொருள்கூறுவர். 15-வது குருமகாசந்நிதானம் ஸ்ரீ அம்பலவாணதேசிகசுவாமிகள் இது விஷயத்திலும் மிகச்சிறந்தவர்கள் என 16-வது ஸ்ரீ சுப்பிரமணியதேசிக

மூர்த்தியும், சின்னப்பட்டம் ஸ்ரீ நமச்சிவாயதேசிகரும் கூறிய தாக ஆதீன வித்துவானும் என் தமிழாசிரியர்களுள் ஒருவரு மாகிய ஸ்ரீ பொன்னுேதுவாமூர்த்தியின் ஆசிரியர் சேற்றூர்– ஸ்ரீ ரா. சுப்பிரமணியக்கவிராயரவர்கள் பாடங்கேட்டபோது ஸ்ரீ நமச்சிவாயதேசிகர் சொல்லியருளிய பல பாடல்களுக்கு விளக்கம் கூறினர்என்ப சின்னப்பட்டம் — தேசிகமூர்த்தி களின் சீடரும் சூரியனூர்கோயில் மகாசந்நிதானமுமாக இருந்த ஸ்ரீ முத்துக்குமாரதேசிகசுவாமிகளும் தாம் தமது ஆசிரியர் பால் கேட்டுணர்ந்த பல திருமந்திரப்பொருள்களை அடியார்க ளிடம் சொல்லி மகிழ்வது உண்டென்பர். மேலே கண்ட ஸ்ரீ முத்துக்குமாரதேசிகர்பால் அருளுபதேசம் பெற்ற ஸ்ரீ சிவா னந்தசுவாமிகள் என்னும் பரமசிவயோகிகள்பால் அடியேன் சிந்தித்த பல பகுதிகள் இப்பதவுரையை விளக்குவதற்கு அடிப்படையாக இருந்தன அச்சில் வாராத 33-பாடல்கள் இதன்கண் அதிகமாகவுள்ளன.

குருமஹாசந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ **சுப்பிரமணியதேசிக சுவாமிகள்** கட்டளையிட்டருளியபடி ஸ்ரீ கயிலாயசித்தர் உரையையும், அடியேன் எழுதிய பதவுரையையும் இப்போது அச்சிட்டு வெளிப்படுத்தியிருக்கிறேன். திருமந்திரம் நூறு பாட்டுக்கு உரை (மதுரைத் தமிழ்ச்சங்கப்பதிப்பு) யும் இப் பதவுரை எழுதுதற்குப் பெரிதும் துணைசெய்தது. மதுரைத் தமிழ்ச்சங்கத்து எட்டுச்சுவடியைப் பிரதிசெய்தபோது உட னிருந்து உதவிபுரிந்த பண்டித—திரு. சிவசுப்பிரமணியஐயர்

அவர்கள்பால் நன்றியுடையேன். இப்பதவுரை எழுதுவதற்கு உபகாரமாயிருந்த என் இளவலும் சாஸ்திரஞானமும் தமிழ்ப் புலமையும் உடையவருமான T. S. இராசகோபால பிள்ளைக்க்கும், வழக்கம்போல உடனிருந்து ஒப்பு நோக்குதல், ப்ரூப் திருத்துதல் முதலிய உதவியைச்செய்துவரும் என் மாணவர் திரு. T. இராமமூர்த்திஐயருக்கும் ஸ்ரீ நமச்சிவாயமூர்த்தியின் திருவருள் துணை செய்வதாக எனப்பிரார்த்திக்கிறேன். குற்றம் பொறுத்தருளவேண்டுகின்றேன்.

இங்ஙனம்.

திருவாவடுதுறை
29—1—54.

சித்தாந்தசைவமணி—
**த. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளை,**
ஆதீன வித்துவான்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருமந்திரம்.

## கன்னடியத்திருமேனி—கம்பளச்சட்டை

## கயிலாயசித்தர் உரை முதலியன.

---

1 பதிபசு பாசம் எனப்பகர் மூன்றிற்
பதியினைப் போற்பசு பாச மநாதி
பதியினைச் சென்றணு காபசு பாசம்
பதியணு கிற்பசு பாசநில் லாவே.

—115.

—என்பது:— பசுவும் பாசமும் பதியினைப் போலவே அநாதி; ஆகையினாலே, 'பதிபசுபாசம் எனப் பகர் மூன்றில்—பதியினைப்போல் பசு பாசம் அநாதி' என்னும் சத்தத்துக்கு விபரம். பசுவாகிய சீவாத்மா சமுசார சகதியில் விழுந்து வேற்றுமைப் புத்தியைக் கொண்டு பதியினைச் சேராமையினாலே 'பதியினைச் சென்றணுகா பசுபாசம்' என்னும் சத்தத்துக்கு விபரம். பசுவாகிய சீவாத்மா சத்தினிபாத விவேகத்தைக் கொண்டு காரணகுரு கைகாட்டும்படியே நீரும் நீர்க் குமிழியுங் கலந்து ஒன்றானாற்போல, பதியினைச்சேர்ந்து

ஐக்கியபதம் பெற்றபின் பசுவுடன் பாசம் நட்டமான படியினாலே 'பதி அணுகிற் பாசம் நில்லாவே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இதன்பொருள்) பதி—பசு—பாசம் என்று சித்தாந்த சைவர்களால் சிறப்பித்துச் சொல்லப்படும் முப்பொருள்க ளுள்ளும் பதிப்பொருளைப்போலவே பசு பாசங்களும் அநாதி நித்தியப் பொருள்கள் ஆம். இவை ஒரு காலத்துத் தோன் றின அல்ல. பாசபந்திகளாகிய ஆன்மாக்கள் பெத்தநிலை யையே முத்திநிலையெனக்கொண்டு பிறப்பு இறப்புக்களில் பட்டுச் சுழன்று திரிவதனால் பதிப்பொருளின் உண்மையைத் தேர்ந்து அதனைச்சார்ந்து பேரின்பத்தை அநுபவிக்கமாட்டா. ஆன்மாக்கள் சிற்றறிவும் சிறுதொழிலும் உடையன. பாசம் சடம் ஆகையால் பதியை அடைதல் இல்லை. இனி, பசுவா கிய ஆன்மாக்கள் இருவினையொப்பு மலபரிபாகம் சத்தி நிபாதத்தால் குருவருள்பெற்றுப் பதிப்பொருளை அடைந்தால் பாசங்களின் சத்தி கெடும் என்க.

இறுதியடியிற் கூறிய 'பாசம்' என்பது அவற்றின் வலியை என்க: இஃது ஆகுபெயர். 'பசுபாசம்' இவை ஆதி எனக் கூறின் ஒரு காலத்து அழிபொருளாம்: ஆகலின் அநாதியே ஆம்.

பாசம் அழியும் என்றது 'பகல்விளக்கு'ப்போலச் சத்தி கெட்டு நிற்றலையேயாம்: முற்றக்கெடுதலை அன்று என்க. பாசம் மூன்றுவன ஆணவம், கன்மம், மாயை என்பன: மாயே யம், திரோதானம் என்னும் இரண்டனையும் கூட்டி ஐவகைப் பாசம் என்பதும் உண்டு. (சித்தியார்—சூத்–2; செய்–87)

பசு, பாசம் என்பன பால்பகா அஃறிணைப் பெயர்; ஆகலின், அணுகா நில்லா எனப் பன்மை வினைமுற்றுப் பயனிலை பெற்று நின்றன.

2 தன்னைப் பரனைச் சதாசிவ மென்கின்ற
மன்னைப் பதிபசு பாசத்தை மாசற
முன்னைப் பழமல மூலத் தைவிட்
டுன்னத் தகுஞ்சுத்த சைவ ருபாயமே.
—1432.

(இ—ள்) ஆன்மாக்கள் விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என மூவகைப்படுவர். அவர் முறையே ஒருமலமுடையார், இருமலமுடையார், மும்மலமுடையார் என எண்ணப்படுவர். ஆணவம் ஒன்றேயுடையார், விஞ்ஞானகலர், ஆணவம் மாயை என்னும் இருமலமுடையார் பிரளயாகலர், ஆணவம் மாயை கன்மம் என்னும் மும்மலமுடையார் சகலர் எனப் படுவர் என்க. இங்கே 'தன்னை' என்றது சகலரை. 'பரனை' என்றது அவரின் மேம்பட்ட பிரளயாகலரை. 'சதாசிவம் என்கின்ற மன்னை' என்றது விஞ்ஞானகலரை என்க. மாசு அற — அஞ்ஞானமாகிய குற்றம் நீங்க, முன்னை பழ மல மூலத்தை விட்டு — அநாதியே யுள்ள பழைய மலமாகிய ஆணவமலத்தை வலிகெடச் செய்து, பதி பசு பாசத்தை உன்னத்தகும்—பதி பசு பாசம் ஆகிய முப்பொருள்களின் இயல்பை (வியாபக வியாத்தியின் இலக்கணத்தை ஆராய்ந்து பசு பாச ஞானங்களால் அறியப்படாத பதியைச் சிவஞானத்தால் அறிந்து) விதிப்படி சிந்திக்க வேண்டும். (இங்ஙனம் குருவருளால் பெற்ற சிவஞானத்தைக்கொண்டு விசாரித்தறிவதே) சுத்த சைவர் உபாயம்—சுத்தாத்துவித சித்தாந்த சைவர் உபாயம் என்க.

*மூலம் — மூலமலமாகிய ஆணவம். பதியை என வருவித்து உரைத்து உன்னத்தகும் எனக் கூட்டிப் பொருள் கொள்க. மூவகை ஆன்மாக்களின் இலக்கணத்தைச் சிவஞானசித்தியார் சுபக்கம் எட்டாஞ்சூத்திரம் இரண்டாம் திருப்பாட்டால் அறிக.*

**3 குருட்டினை நீக்குங் குருவினைக் கொள்ளார்**
**குருட்டினை நீக்காக் குருவினைக் கொள்வார்**
**குருடுங் குருடுங் குருட்டாட்ட மாடிக்**
**குருடுங் குருடுங் குழிவிழு மாறே.** —1680.

(இ—ள்) *குருடு—அஞ்ஞானம். குரு—ஞானசாரியன். அஞ்ஞானத்தை நீக்குதற்குரிய ஆற்றல் இல்லாத (அநுபவ ஞானமில்லாத) குருவை என்பார் 'குருட்டினை நீக்காக்குரு' என வேறுபிரித்தோதினர். குருட்டினை நீக்கும் குரு—சந்தான பரம்பரையில் வந்த அநுபவமுடைய ஞானதேசிகர் என்க. "குருவும் தாரமும் கொண்டவன் தவமாம்" என்பது பழமொழி. உலகத்தில் வஞ்சித்து ஒழுகும் குரு ஆவார் பலர். ஆகவின், இங்கே அபக்குவர் நிலையை எடுத்துக் காட்டப்பட்டது. குழிவிழுதலாவது நரகக்குழியில் வீழ்ந்து வருந்துதல்: பிறவிக்குழி எனினும் ஆம். "தணவிலா மலத்தின் குருடனேற்கு" என்னும் உலகுடையு நாயனர் கழிநெடில் இதனை ஒருவாறு விளக்கும் என்க. இனி, "தன்னை அறிவித்துத் தான் தானச் செய்தானை" என்னும் சிவஞானபோத உதாரண வெண்பா நோக்கியும் இதனை அறிக.*

**4 ஞானமி லார்வேடம் பூண்டிந்த நாட்டிடை**
**ஈனம தேசெய் திரந்துண் டிருப்பினும்**
**மான நலங்கெடும் வையகம் பஞ்சமாம்**
**ஈனவர் வேடங் கழிப்பித்த லின்பமே.** —1656.

(இ-ள்) தவவேடம் பூண்டு அவமே செய்யுமவர்களை யுடைய நாடு அடையும் கேட்டை விளக்குவது இம்மந்திரப் பாட்டு.

சிவஞானமில்லாதவர்கள் சிவஞானிகளைப் போலச் சிவ வேடம் தரித்துக்கொண்டு நடித்து, உண்மையில் இழி தொழில்களையே புரிந்து, பிறரையாசித்து, வயிறுபுடைக்க உண்டு, பிறந்ததற்காக உணவு கொள்ளாமல் உண்பதற் காகவே பிறந்தாற்போல, சுகமாக வாழ்வாராயினும் அவரிருக் கும் நாட்டுக்குள்ள பெருமையும் நலமும் கெடும். அன்றி, உலகம் பஞ்சத்தாலும் வாடும். அத்தகைய ஈனத்தொழிலின ராகிய அவர்களுடைய சிவவேடத்தைக் கழிப்பித்தல் நாட் டுக்கு இன்பம் பயக்கும் என்க. (அது மிகப்பெருஞ் சிவபுண் ணியமாம் எனக் குறிப்பித்தபடி.)

"வலியில் நிலைமையான் வல்லுருவம்" எனவும், "தவ மறைந் தல்லவை செய்தல்" எனவும் கூறியருளிய (திருக் குறள்-273,274) திருவாக்குகள் சிந்தித்தற்குரியன. அச்சுப் பிரதிகளில் இப்பாடம் வேறாகவுள்ளமை காண்க. இவ்வாறே ஏட்டுப்பிரதிகளை வைத்து ஒப்புநோக்குவோர்க்குப் பாடவேறு பாடுகளும், பிரதி வேறுபாடுகளும் எத்தனையோ பலப்பல தோன்றும். வரும் திருமந்திரப்பாடல்களுக்கும் இஃது ஒக்கும்.

5 **ஆடம் பரங்கொண் டடிசிலுண் பான்பயன்**
**வேடங்கள் கொண்டு வெருட்டிடும் பேதைகாள்**
**ஆடியும் பாடியு மழுது மரற்றியும்**
**தேடியுங் காணீர் சிவனவன் ருள்களே.**

—1655.

(இ—ள்) இடம்பத்தையே விரும்பி மேற்கொண்டும், வயிறார உணவுண்டலே பெறும் 'பெரும்பயன் ஆம்' என ஈட்கொண்டும், பொய்யாகத் தவச்சின்னங்கள் அணிந்து, அறிவில்லாத மக்களை மயக்கி, வஞ்சிக்கும் அறிவில்லாதவர்களே! (நீங்கள், அந்த அவவேடத்தைக்கைவிட்டுத் தொலைத்துச்) சிவபிரானாகிய அப்பரம்பொருளின் திருவருளை 'ஆடியும் பாடியும் அழுதும் அரற்றியும் தேடியும்' காண்பீராக என்க. அப்பெருமான் ஆன்மாக்களுக்கு அருள் செய்யும் பொருட்டு மூர்த்தி தலம் தீர்த்தம் ஆகிய வடிவங்களும் கொண்டு விளங்குகின்றார் ஆகலின் தலங்கள்தோறும் நடந்து தேடிச்சென்று தீர்த்தங்களில் முழுகி அருள்வடிவாகிய திருமேனிகளைத்தரிசித்து உய்வீர்களாக என்றவாறு. ஆடுதல் ஆனந்தக்கூத்துச்செய்தல். பாடுதல் அப்பெருமான் அடியார்களுக்கு அருள்செய்த திறங்களை யெல்லாம் சொல்லித் துதித்தல். அழுதலாவது பெரியோர்கள் பெற்றபேறு தமியேனுக்கும் கிட்டுமோ? கிட்டாதோ? என்று உள்ளம் நைந்து நைந்து உருக வாய் சோர்ந்து வெளிப்படுதல். அரற்றலாவது நாட்டார் நகைப்பரே என்னும் கருத்துக்கூடத் தோன்றாமல் வாய்விட்டு அவ்வாறு புலம்புதல் என்க.

**6 வேட நெறிநில்லார் வேடம்பூண் டென்பயன்**
**வேட நெறிநிற்போர் வேடநல் வேடமே**
**வேட நெறிநில்லார் தம்மை விறல்வேந்தன்**
**வேட நெறிசெய்தால் வீடது வாமே.**

—240.

இத்திரு மந்திரப்பாட்டு முதல்தந்திரம்—இராசதோடம் என்னும் பகுதியில் அருளப்பட்டது காண்க.

(இ—ள்) தங்கள் தங்கள் சமயத்துக்குரிய சின்னங்களை மக்கள் பூண்டுகொண்டும் அச்சின்னங்களுக்கு இயைய அவ்வச் சமய வொழுங்குகளில் நிலைபெற அவர் நில்லாராயின் அச் சின்னங்களால் அவருக்கு யாது? பயன்உண்டாம் வேடங் கொண்டதற்கு இணங்க அவ்வச்சமயநெறி பிறழாமல் சமய வொழுங்கில் நடப்பாராயின் அவர் வேடம் உண்மைவேடமே யாம். (மக்களும் மதித்துப் பெரிதும் கொண்டாடுவர். சமயவொழுங்குகளிலிருந்து தப்பி அவற்றில் நிலைபெறாராயின் அவர் வேடம் பொய்வேடமே எனக்கொண்டு மக்கள் இழித்து அவரை ஒதுக்குவர்) அத்தகைய பொய் வேடங் கொண்டு நடிக்கும் போலி வேடத்தரை முறைமை தவறாத நீதிவன்மையையுடைய அரசன் தத்தமது உண்மை வேடங் களுக்குரிய ஒழுக்கங்களில் அவரவர் நிலைபெற ஆவன செய்வா னாயின் அது அவனுக்கு முத்திநிலையே ஆம் என்க.

நல்லார் பலர் வாழும் நாட்டையுடைய அரசன் நன்மை யையே பெறுவன் ஆகலின் அதுவே அவனுக்கு இன்பநிலை என்பார் 'வீடது வாமே' என்று அருளிச்செய்தார். இம் மந்திரமாலை சமய ஒழுங்குகளையே பெரிதும் சொல்ல எழுந்த தாயினும் உலகநிலை செவ்வே நிலைபெறாதாயின் சமயநிலை நன்கு நிலைபெறாது. ஆகலின், உலக ஒழுங்கையும் அங்கங்கே அருளிச்செய்வாராயினர்.

இனி, இதனை உலக நிலையிலும் வைத்து ஆராயப்புகின் கல்வி, செல்வம், அதிகாரம், வாழ்நாள் முதலியவைகளைப் பெற்றவர் அவைகளைத் தமக்கும் பிறருக்கும் பயனைத்தரும் வகையில்செலுத்துதலே தக்கது. அதனால், அவருக்குப்புகழும் புண்ணியமும் மிகவுண்டாம். இக்காலத்து அவைகளைப்

பெற்றவர்களிற் பலர் கல்வியாலும், செல்வத்தாலும், அதிகாரத்தாலும், ஆயுட்பெருக்கத்தாலும் மக்களுக்குச்செய்யும் துன்பங்கள் எத்துணையோ பலப்பல. செல்வம், பதவி. அதிகாரம், செல்வாக்கு இவையெல்லாம் அநீதிவகையில் பயன்படுதல் கண்கூடு. கொண்ட பதவி, அதிகாரங்கள் யாவும் பலருக்குத் தீயவழியில் பயன்படுவது போலவே சமயவேடங்களும் சிலருக்குத் தீயவழியிலே மறைந்தொழுகப் பயன்படுகின்றன ஆகையால் கல்வி, செல்வம், அதிகாரம், வாழ்நாள் முதலியன வேண்டா என வெறுத்து ஒதுக்குதல் தவறு. அவைகளை அவர் நல்லவழியில் பயன்படுத்த அரசநீதி இன்றியமையாதது. அதுபோலவே சமயம், சமயவொழுக்கம், சமயக்கட்டுப்பாடு, சமயவேடம் ஆகிய இவைகளை மக்கள் வெறுத்தல் தவறும் தீயவழியில் அவைகளைப்பயன்படுத்தாதவகையில் அரசன் அவரைப் பாதுகாத்து நீதி செலுத்துதல் வேண்டும் என்க.

**7 மூடங் கெடாதோர் சிகைநூல் முதல்கொள்ளில்**
**வாடும் புவியும் பெருவாழ்வு மன்னனும்**
**ஈடொன் றிலனகு மாதலாற் பேர்த்துணர்ந்**
**தாடம் பரநூல் சிகையறுத் தால்நன்றே.**

—241.

(இ—ள்) அறிவில்லாதார் அறிவுடையார்போலச் சிகை, பூணூல் முதலியவைபோன்ற நல்ல அடையாளங்களை மேற்கொண்டு (நடித்து வஞ்சனையால் பிறரை) ஏமாற்றித் திரிவாராயின் உலகமக்கள் வாடித்திரிவர். மக்களுடைய பெரிய வாழ்க்கையும் குறையும். அரசனும் சிறிதும் பெருமையிலன் ஆவான். ஆதலால், அரசன் இவைகளை ஆராய்ந்து உணர்ந்து அறிவில்லார் ஆடம்பரமாக வேடம்கொண்டு பிறரை

வஞ்சியாதபடி அவர் பொய்ம்மையாகக்கொண்ட சிகையையும் பூணூலையும் (இவைபோன்ற பிறவற்றையும்) களைவித்தல் வேண்டும் என்க மூடம்–அறிவின்மை.

**8 ஞானமில் லார்க்குச் சடைசிகை நூனண்ணி**
**ஞானிகள் போல நடிக்கின் றவர்தம்மை**
**ஞானிக ளாலே நரபதி சோதித்து**
**ஞானமுண் டாக்குதல் நலமாகு நாட்டுக்கே.**
—242.

(இ–ள்) அறிவில்லாதவர்களாய்ச் சடையும் சிகையும் பூணூலும் (ஆகிய இவைகள் பொருந்த) ஞானிகளைப்போல நடிக்கின்ற போலிவேடதாரிகளை ஞானிகளைக்கொண்டு அரசன் நன்றாகச் சோதித்து அவர்களுக்கு வேடத்துக்கியைய ஞானநற்சுடர் கொளுத்துதல் நாட்டுக்கு நன்மையை உண்டாக்கும்.(அரசன் பராமுகம் செய்வான் ஆயின் நாடு பஞ்சமுற்றுக் கெடும்) என்க.

இனி, திருமந்திரமாலையில் பல இடங்களில் இதனையே வற்புறுத்திக் கூறுதல் காண்க. எல்லாச்சமயங்களும் அவரவர் அறிவுநிலைக்கு ஏற்ப இறைவனால் அருளப்பட்டனவே. அவ்வச்சமயங்களும் நன்கு வளரத் தக்கவரால் போதனை செய்யப்படுதல் வேண்டும்; சமயப்பண்பாடும், நல்லொழுக்கமும் உள்ள அவ்வச்சமயிகளே அவ்வச்சமயங்களைப் போதிக்க வேண்டும் எனக் உறுதிகொண்டு அரசன் நடுவுநிலையிலிருந்து சமயப்பூசலின்றித் தனித்தனி அவ்வச்சமயிகளையும் பாதுகாக்க வேண்டும். சமயவொழுக்க மின்றி, சமயஅறிவின்றி உலகம் அமைதி பெருது; ஆகலான், அவ்வச்சமயவொழுக்கம் குன்ருமல், பிறரால் கேடுருமல் அரசன் பாதுகாத்துப்போலி

கள் நாட்டில் மலியாதபடி நால்வகை உபாயங்களாலும் மக்களை நன்னெறியில் நிறுத்துதலே நாட்டுக்குக்கேட்டை உண்டு பண்ணுமல் நன்மையைப் பயக்கும் என்க. சமய அறிவில்லாதவர் சமயநிலைகளை ஆராய்தல் தவறு. சமய அறிவுள்ள மெய்ஞ்ஞானிகளே அதனை ஆராய்ந்து முடிவுகட்டஉரியவர் ஆவார் என்பதை வற்புறுத்தவே "ஞானிகளாலே நரபதி சோதித்து ஞானமுண்டாக்குதல் நலமாகும் நாட்டுக்கே" என நாயனார் அருளிச்செய்தமை காண்க.

9 **தன்னை யறியத் தனக்கொரு தீங்கில்லை**
**தன்னை யறியாமற் றுன்கெடு கின்றுன்**
**தன்னை யறியு மறிவை யறிந்தபின்**
**தன்னையர்ச் சிக்கத் தானிருந் தானே.**

—2355.

-என்பது:- சீவாத்மா செனனங்கள் தோறும் உடலமெடுத்து, 'உண்ணுதவை யெல்லாம் உண்டு, காணுதவை யெல்லாம் கண்டு, கேளாதவை யெல்லாம் கேட்டு, சமுசார சகதியில் விழுந்து,மனைவி மக்களாகிய விலங்குடன் நடந்து, நல்வழி அறியாமல் காலனுகிய கள்ளன் கையில் பிடிபட்டுப் பயந்து இருவினைச் செனனம் ஏது முன்னிலையாக [இது] எனக்கு வந்ததென்று தன்னைத்தான் விசாரித்துக் கொள்கையினுலே 'தன்னை அறியத் தனக்கொரு தீங்கில்லை' என்னும் சத்தத்துக்கு விபரம். தான் யாரென்று தன்னைத் தான் தேராமையினுலே எல்லாத்துன்பமும் தன்முன்னிலையால் தன்னைத் தொடர்ந்த தாகையினுலே 'தன்னை அறியாமல்

தான் கெடுகின்றான்' என்னும் சத்தத்துக்கு விபரம். காரணகுரு கைகாட்டும்படியே தன்னை அறியும் அறிவாகிய தலைவனைத் தான் அறிந்தபடியினாலே 'தன்னை அறியும் அறிவை அறிந்தபின்' என்னும் சத்தத்துக்கு விபரம். அறிந்தபின் தலைவன் அல்லாமல் தானில்லாமையினாலே 'தன்னை அர்ச்சிக்கத் தான் இருந்தானே' என்னும் சத்தத்துக்கு விபரம்என்க.

(இ-ள்) சத்தாகிய ஆன்மா செனனம் எடுத்துப் பந்தமடைந்து மரணத்தை அடைவதால் அச்செனன மரணங்கள் நீங்கும்படி தன் இயல்பைத்தான் விசாரித்துக்கொள்ள அதனால் தனக்குக் கேடாகிய செனன மரணங்கள் இல்லையாம். இதனைச் சிவஞானபோதம் நான்காஞ்சூத்திரத்திற் காண்க. தான் இவ்வகையினன் என்று தன்னைத் தேராமையினாலே எல்லாத்துன்பமும் தன்னைத் தொடாத் தான் அச் செனன மரணக்கேடுறுகின்றான். தன்னைத் தான் தேராமையாவது இவ்விடத்து ஆன்மதரிசனம் செய்யாமையாம். தன்னை அறியும் அறிவாகிய தலைவனைத்தான் அறிந்தபின்பு (தலைவன் இல்லாமல் தானில்லாமையினாலே) தான் அவனைப் பூசிக்கத் தான் அவனுடன் பிரிப்பின்றிச் சமவேதமாயிருப்பன் என்க. அர்ச்சித்தலாவது ஈண்டுச் சிவோகம் பாவனைசெய்தல் என்பது கருத்தாகக் கொள்க. தெளிவுபற்றி 'இருப்பான்' என்பதனை 'இருந்தான்' என அருளிச்செய்தார். "தன்னை அறிந்தவன் தலைவனையும் அறிவான்" என்னும் பழமொழிக் கருத்து இத்திருப்பாட்டில் அமைந்துள்ளமை காண்க. இம்மந்திரத்தின் கருத்து சித்தியார் சூத்-9; செய். 7-ல் அருளியமையுங்காண்க.

10 காணிப் பொன்கொண்டு கடைகடை தோறும்
வாணிபஞ் செய்து மயங்கித் திரிவேனை
ஆணிப் பொன்னுன அறிவை யறிந்தபின்
மாணிக்கம் பெற்று மகிழ்ந்திருந் தேனே.

—என்பது:— சீவாத்மா சிற்றறிவாகையால் 'காணிப்பொன்கொண்டு' ஆசாரியராகிய 'கடைகடை தோறும்' தீட்சையாகிய 'வாணிபம் செய்து' ஆத்மலாபம் காணுமையினுலே 'மயங்கித்திரிவேனை' என்பது 'காணிப்பொன் கொண்டு கடைகடைதோறும் வாணிபம் செய்து மயங்கித்திரிவேனை' என்னும் சத்தத்துக்கு விபரம். சீவாத்மா விசாரித்துக்கொண்டு காரணகுரு கைகாட்டும்படியே பேரறிவாகிய பூரணத்தில் நீரும் நீர்க்குமிழியும் கலந்தாற்போலவே ஆத்மலாபம்பெற்று இருந்தபடியே இருந்தார் ஆகையினுலே 'ஆணிப் பொன்னுன அறிவை அறிந்தபின் மாணிக்கம் பெற்று மகிழ்ந்திருந்தேனே' என்னும் சத்தத்துக்கு விபரம்.

(இ—ள்) சிற்றறிவாகிய காணியளவு பொன்னைக் கொண்டு ஆன்மலாபம் பெறவேண்டிப் பொய்வேடம் பூண்டு திரியும் ஆசாரியர்களாகிய கடைகள்தோறும்சென்று தீக்கை என்னும் வாணிபம் உண்டாகச் செய்துகொண்டு (ஞேயத் தழுந்தும் நிலையானது கைகூடாமையினுலே) மயக்கமுற்றுத் திரியும் நான் உயர்ந்த பொன்னுகிய பேரறிவு என்று சொல்லப்படும்ஞேயத்தை(உண்மையான ஞானசாரியன் அருளால்) அறிந்தபின் (அந்நிலைகைகூடினமையால்) மாணிக்கமாகிய

ஆன்மலாப ஆனந்தத்தை அடைந்து மகிழ்ச்சி யுற்றிருந்தேன் என்க.

• திரிவேனை வினையாலணையும்பெயர். ஐ-சாரியை. ஆன்ம லாபமாகிய ஆனந்தத்தை மாணிக்கம் என உருவகம் செய்தார். காணியவ்வளவு பொன்னைவைத்துக் கடைகள்தோறும் சென்று சென்று வாணிபஞ்செய்தும் லாபமடையாமல் வீணில் உழல்வோர் மாற்றுயர்ந்த பொன்னைப் பெற்று மாணிக்கமும் கைவரப்பெறுவாராயின் அவர் அடையும் ஆனந்தம் சொல்லும் தரத்ததாமோ? அன்று என்றபடி. மயக்கம் செய்விக்கும் பொய்க்குருவை நீக்கி மெய்ஞ்ஞானதேசிகன் அருள் கூடப் பெற்றால் உண்மைச் சிவயோகநிலை கைவரும் என்பதாம். மிக்க சிவபுண்ணியத்தால்தான் ஒருவன் உண்மை ஞானசாரியனை அறிந்து அவனருள் பெற்றுச் சிவானந்த நிலை பெறுதல் கூடும். பொய்க்குருவின் நிலையைப்பற்றி உலகுடையநாயனார் கழிநெடில் இறுதிச்செய்யுள் விளக்குவதும் காண்க.

**11 பிட்டடித் தெங்கும் பிதற்றித் திரிவேன்றனை**
**ஒட்டித் துள்ளமர் மாசெலாம் வாங்கித்**
**தட்டொக்க மாறினன் தன்னையும் என்னையும்**
**வட்டம தொத்தது வாணிபம் வாய்த்ததே.**

—1781.

—என்பது:- சீவாத்மா மாயையினாலே மயங்கி ஆணவமாகிய பித்தெடுத்து விசாரமில்லாமல் பொய்யை மெய்பாகக் கருதியிருக்கையினாலே 'பிட்டடித்தெங்கும் பிதற்றித்திரிவேன்றனை' என்னும் சத்தத்துக்கு விபரம்: காயசம்பந்தமாகிய தத்துவம் முப்பத்தாறும் காரண

குரு விடப்படுத்துகையினலே 'ஒட்டித்து உள்ளமர் மாசெலாம் வாங்கி' என்னும் சத்தத்துக்கு விபரம்: நீருடன் உப்பு உருகி ஒன்ருனாற்போலத் 'தட்டொக்க மாறினன் தன்னையும் என்னையும்' என்னும் சத்தத்துக்கு விபரம்: காரணகுரு கைகாட்டும்படியே அந்தச் சீவாத்மா[வுக்கு] இலாபம் கைவந்த படியினலே 'வட்டம தொத்தது வாணிபம் வாய்த்ததே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ—ள்) பிட்டு அடித்து எங்கும் பிதற்றி திரிவேனை—(சைவாகமங்களில் சொல்லப்பட்ட சரியை கிரியை யோகம் ஞானம் ஆகிய நாற்பாதப் பொருள்களையும்) பயன்படாமல் நொறுக்கியடித்து (ப்பொய்ப்பொருளாகிய உலகநிலையையே பெரிதாக மதித்து மெய்ப்பொருளாகக் கொண்டு அதனைப் பற்றியே) பாராட்டிப் பேசி (மகிழ்ந்து வீணிலே காலங்கழித்துத்) திரிகின்றவனுகிய என்னை (த்தன்வசப்படுத்திச் சீவபோதத்தைத் தான் கைக்கொண்டு சிவபோதத்தை எனக்கு அருளத் திருவுளங்கொண்டு), ஒட்டித்து—(மானைக் காட்டி மானைப்பிடிப்பதுபோல என்போலவே மானிடச் சட்டை சாத்திக் குருவடிவாக எழுந்தருளிக் காட்சிதந்து) பொருந்தி, உள் அமர் மாசு எல்லாம் வாங்கி—என்னிடத்துள்ள பாசங்கள் முழுவதையும் (என்னைப்பற்ருமல் தீட்சை முதலிய சம்ஸ்காரங்களையெல்லாம் செய்து உபதேசத்தை அருளி) வலிகெடச்செய்து நீக்கி, தட்டு ஒக்க மாறினன் தன்னையும் என்னையும்—நிறக்கப்பட்ட பண்டங்களைத் தராசுத் தட்டிலே மாறிவைத்துத் தராசுத்தட்டுகள் ஒத்திருக்குமாறு பண்டமாற்றுச் செய்தல்போல என்பால் உள்ள பொருளாகிய

சிவபோதத்தை என்று கொண்டு அதற்குப்பதிலாகத் தமது சிவபோதத்தை என்பால்பதித்து மாறிக்கொண்டருளினன் (ஆதலால்), வட்டம் அது ஒத்தது—இருவருக்கும் வாசியொத்துத் தோன்றியது (ஆயினும்), வாணிபம் வாய்த்தது—(பண்டமாற்றுச் செய்ததனால் உண்டாகிய) ஊதியம் எனக்கே கிடைத்தது; (இப்பண்டமாற்றினால் அவனுக்கு ஒன்றும் லாபமே இல்லை என்றபடி) என்க.

இத்திருமந்திரப்பாட்டு எழாந்தந்திரத்தில் 'சம்பிரதாயம்' என்னும் தலைப்பில் காணப்படுவது. வட்டம் — வாசி. வாணிபம் இங்கே ஆன்மலாபமாம். ஸ்ரீமாணிக்கவாசக சுவாமிகள் குருந்தமூலப்பெருமானிடத்துத் திருப்பெருந்துறையிலே அருளுபதேசம் பெற்றபின் "தந்ததுன் றன்னைக் கொண்ட தென்றன்னைச் சங்கரா ஆர் கொலோ சதுரர்—'அந்தமொன் றில்லா ஆனந்தம் பெற்றேன்' யாது நீ பெற்றதொன்றென் பால்" என்றருளிச் செய்தமையும் இக்கருத்துப் பற்றியேயாம். இனி, ஸ்ரீமாதவச்சிவஞானயோகிகள் தாம் அருளிச்செய்த ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் துதியில் "பெருந்துறையிற் சிவபெருமான் அருளுதலும்பெருங்கருணைப்பெற்றி நோக்கிக்—கரைந்துகரைந் திருகண்ணீர் மழைவாரத் துரிய நிலை கடந்து போந்து — திருந்துபெருஞ் சிவபோகக் கொழுந் தேறல் வாய்மடுத்துத் தேக்கிச் செம்மாந் — திருந்தருளும் பெருங்கீர்த்தி வாதவூ ரடிகள்" என அந்த நிலையை நன் கெடுத்து விளக்கி யருளினர். ஏகாரம் பிரிநிலை: தேற்றமும் ஆம். "மிக்கதொரு பக்குவத்தின் மிகுசத்தி நிபாதம் மேவுதலும் ஞானம்விளைந் தோர்குருவி னருளால்,-புக்கநுட்டித்தே நிட்டை புரிந்து ளோர்கள் பூதலத்திற் புகழ்சீவன் முத்தராகித்,—தக்கபிரி யாப்பிரிய மின்றி யோட்டில் தபநியத்தில்

சமபுத்தி பண்ணிச்சங் கரனே,—டொக்கவுறைந் திவரவனை யவனிவரை விடா்தே யுடந்தையாய்ச் சிவன்றேற்ற மொன்றுமே காண்பர்.'' என்னும் சிவஞானசித்தித் திரு விருத்தமும் இதனை நன்குணர்த்தும். ஒட்டித்து நிற்றல் என்பது 'உடந்தையாய்உறைந்து' என்பது போல நின்றது.

இவ்விரண்டு மந்திரங்களாலும் தாம் பெற்ற பேற்றை வாணிகர் துறையில் வைத்து விளக்கியபடி காண்க.

12 உடம்பு முடம்பு முடம்பைத் தழுவி
உடம்பிடை நின்ற வுயிரை யறியார்
உடம்போ டுயிரின் உடம்பறி யாதார்
மடம்புகு நாய்போல் மயங்குகின் றரே.
—2148,

—என்பது:— உடம்பாவது தூலதனு, சூக்கு மதனு, காரணதனு: விபரம் எந்தப்படி யென்றால், ஐம பூத வடிவே தூலதனு; மனம் புத்தி சித்தம் ஆங்காரம் அந்தக்கரணம் ஆணவம் மாயை காமியம் இவை எட்டுங்கூடி உருக்கொண்டது சூக்குமதனு; சுழுத்தியே காரணதனு: ஆகையினலே, அவ்வுடம்பினில் எள் ளும் எண்ணெயும் போலவே இருந்த பொருளை சீவாத்மா அறியாமல் இருந்தபடியினலே 'உடம்பும் உடம்பும் உடம்பைத்தழுவி உடம்பிடை நின்ற உயிரை அறியார்' என்னும் சத்தத்துக்கு விபரம். மடம்புக்க நாய் போலத்தேர்ந்து கரைபேற மாட்டாமல் மாயாசமு சாரத்தை மெய்யெனக்கொண்டு மயங்கினர் ஆகையி னலே 'உடம்போடுயிரின் உடம்பறியாதார் மடம்புகு

நாய் போல் மயங்குகின்றாரே' என்னும் சத்தத்துக்கு விப்ரம்.

• (இ-ள்) தூலவுடம்பும், சூக்குமவுடம்பும், காரணவுடம்பும் ஆகிய மூவகையுடம்புகளையும் பொருந்தி அந்தச்சரீரத்திலே (எள்ளும் எண்ணெயும் போலக் கலந்து) நிற்கும் சீவான்மாவினுடைய தன்மையை அறியாதவர் சீவான்மாவுக்கு ஆதாரமாகவுள்ள பரமான்மாவை விசாரித்தறிய மாட்டாதவர் ஆவார். அத்தகையோர் அறியாமையில் முழுகி (ப்பழக்க வாசனையைக் கைவிடாத) நாயைப்போலச் சமுசார பந்தத்திலே அழுந்திப் பொய்யை மெய்யாகக்கொண்டு மயங்குகின்றார் என்றவாறு.

அவர் அறிவு இருந்தபடி என்னே! என்பது எஞ்சி நின்றது. பஞ்சபூதபரிணாமமாகிய இவ்வுடம்பு தூலம். தன்மாத்திரை-5, அந்தக்கரணம்-3 ஆக எட்டுங்கூடியது சூக்குமம்; இது புரியட்டகவுடம்பு எனவும்படும்: இது காலோத்தரம். பூதம்-5, தன்மாத்திரை-5, ஞானேந்திரியம்-5, கன்மேந்திரியம்-5, அந்தக்கரணம்-3, குணம்-1, மூலப்பிரகிருதி-1, கலாதி-5 ஆக எட்டுக்கொத்து என்பது மிருகேந்திரம். இதனை "அத்த னமைத்த வுடல் இரு கூறினில் — சுத்தமதாகிய சூக்குமம் சொல்லுங்கால் — சத்த பரிச வுரூப ரசகந்தம்—புத்திமான் ஆங்காரம் புரியட்ட காயமே" என—2123 மந்திரம் கூறும். சிவஞானசித்தியார் சூத்திரம்-2,செய்யுள்-50 "தூலமாம் உருவினுக்கு" என்பதும் காண்க. காரணமாவது தன்மாத்திரை முதலிய எட்டும் ஒழிந்த கருவிகளைத்தரும் மூலப்பகுதியாகிய மாயை. "தன்னையறியார் தலைவனைத் தாமறியார்" என்ற பழமொழி இடையிலுள்ள இரண்டடியிலும் அமைந்திருத்தல் அறியத்தக்கது.

13 கண்டறி யாரிந்தக் காயத்துள் நந்தியை
எண்டிசை யோரும் இறைவனென் றேத்துவர்
அண்டங் கடந்த அளவிலா ஆனந்தம்
தொண்டர் முகந்த துறையறி யாரே.
—2942.

—என்பது:— பாலின்கண் நெய் இருந்தாற் போலவே காயத் துட்பொருளை சீவாத்மா அறியாமையி ஞலே 'கண்டறியார் இந்தக் காயத்துள் நந்தியை' என் னும் சத்தத்துக்கு விபரம். எண்டிசையோரும் வேற்று மைப் புத்திபைக் கொண்டு தலைவனை ஏத்துகை யினலே 'எண்டிசையோரும் இறைவன் என்று ஏத்து வர்' என்னும் சத்தத்துக்கு விபரம். இறைவனுகிய தலைவனைக் காரணகுரு கைகாட்டியபடியே மெய்யடி யார் மெய்யாகக்கொண்ட துறையை அறியாத அறி யாமையினலே 'அண்டம் கடந்த அளவிலா ஆனந்தம் தொண்டர் முகந்த துறை அறியாரே' என்னும் சத்தத் துக்கு விபரம் என்க.

(இ—ள்) தூல சூக்கும காரணங்களாகிய இந்தச்சரீரத்தி னுள்ள (பாலில் நெய்போல மறைந்து நிற்கும்) நந்தியாகிய சீவான்மாவை ஆராய்ந்து தெளியாதவர்களாய்ப் பலர் (வேதத் துள்ளே ஏகம் எனக் கூறுதல் நோக்கி அச்சீவான்மாவையே) தலைவன் எனத்திரிபாகக்கொண்டு துதிக்கின்றனர். வரம்பி லின்பமாகிய சிவானந்தக்கடலை (அவ்வேதத்துள்ளே கூறும் 'அத்வைதம்' என்னும் சொற்பொருள் இயல்பை அறிந்த) மெய்யடியார்கள் தாம் நுகருமாறு வாரிக்கொண்ட சன்மார்க் கத்தை அவர் அறியார் என்றவாறு.

இது, ஏகான்மவாதிகளை மறுத்ததென்க.

நந்தி என்பது சிவபிரான், திருநந்திதேவர், இடபதேவர் இவர்க்குப்பொதுவாயினும் ஈண்டுச் சீவான்மாவைக் குறித்து நின்றது பிறப்பிறப்பிற்பட்டு ஆக்கமும் கேடும் உளவாதல் என்னும் கருத்தால் என்க. 'அத்துவிதம்' என்னும் சொற்பொருள் இயல்பை திராவிடமாபாடியத்தில் ஸ்ரீ மாதவச்சிவ ஞானயோகிகள் விரித்தருளியமை காண்க. அத்துவித வாக்கியத்தெளிவுரைநோக்கியும் அறியலாம்.

14 காட்டுங் குறியுங் கடந்தவக் காரணம்
ஏட்டின் புறத்தே எழுதிவைத் தென்பயன்
கூட்டுங் குருநந்தி கூட்டிடில் அல்லது
ஆட்டின் கழுத்தின் அதர்கறந் தற்றே.
—2937.

—என்பது :— குறிப்பாகிய அகர எழுத்தையும் காட்டிய ஐம்பதெழுத்தையும் கடந்திருக்கையினாலே 'காட்டும் குறியும் கடந்த அக்காரணம்' என்னும் சத்தத்துக்கு விபரம். ஆகையினால், ஐம்பத்தோரெழுத்திலும் அறியப்படாமையினாலே 'ஏட்டின் புறத்தே எழுதிவைத்தென்பயன்' என்னும் சத்தத்துக்கு விபரம்.

(இ—ள்) காட்டும் குறியும் கடந்த அ காரணம் — உதாரணமும் அடையாளமும் கடந்து அப்பால் நின்ற அக்காரணப் பொருளை, ஏட்டின் புறத்தே எழுதிவைத்து என்பயன் — சுவடியில் (உவமானம் இன்னது அடையாளம் இப்படிப்பட்

டது எனப் பலபடியாக விரித்துப்) பற்பல மொழிகளிலும் எழுதிவைத்தனல் யாது பயனைத்தரும், கூட்டும் குருநந்தி கூட்டிடில் அல்லது — ஆன்மாக்களுக்கு (அவரவர் விரும்பிய படி தனு கரண புவன போகங்களைக்) கூட்டி முடித்தருளிய சிவபிரானுகிய ஆசாரிய மூர்த்தி (எழுந்தருளிக் காட்சிதந்து உபதேசித்தருளிப் பூரணப் பொருளாகிய தம்முடன்) இரண்டறக்கலந்து இன்பம் நுகரச்செய்தாலன்றி (அவ்வேட்டிலே எழுதிவைத்து இத்தன்மைத் தெனக்கூறின் அது), ஆட்டின் கழுத்தின் அதர் கறந்தற்று ஏ – ஆட்டின் கழுத்திலே தொங்கும் தோலை முலைக்காம்பு என நினைந்து உருவிப்பால்கறக்கச் சென்று எய்க்கும் தன்மையை யொத்ததாம் என்க.

இதனை "மைப்படிந்த கண்ணுளும் தானும் கச்சி மயானத்தான் வார்சடையான் என்னி னல்லான் — ஒப்புடைய னல்லன் ஒருவனல்லன் ஓரூர னல்லன் ஒருவம னில்லி—அப் படியும் அந்நிறமும் அவ்வண்ணமும் அவனருளே கண்ணகக் காணினல்லால்—இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவன் இறைவன் என்றெழுதிக் காட்டொணுதே" என்னும் திருப்பாட்டான் அறிக. ஏ–அசை.

15 **உரையற்ற தொன்றை யுரைசெயு மூமர்காள்**
**கரையற்ற தொன்றைக் கரைகாண லாகுமோ**
**திரையற்ற நீர்போற் சிந்தை தெளிவார்க்குப்**
**புரையற்று நின்றுன் புரிசடை யோனே.**

—2955.

—என்பது:— உரையாகிய ஐம்பத்தோரெழுத்திலும் அறியப்படாதாகையினலே 'உரையற்ற

தொன்றை உரைசெயும் ஊமர்காள்' என்னும் சத்தத்துக்கு விபரம். ஒன்ருகிய தலைவனை விசாரிக்கும் அளவில் அடியும் முடியும் இல்லாமையினலே 'கரையற்ற தொன்றைக் கரைகாணல் ஆகுமோ' என்னும் சத்தத்துக்கு விபரம். சத்தினிபாத விவேக முன்னிலையாகையினலே 'திரையற்ற நீர்போல் சிந்தை தெளிவார்க்கு' என்னும் சத்தத்துக்கு விபரம். காரணகுரு கைகாட்டிய பொருள் தனக்கு வேற்றுமையில்லாமையினலே 'புரையற்று நின்ருன் புரிசடைபோனே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ-ள்) உரை அற்றது ஒன்றை உரை செய்யும் ஊமர்காள் — நால்வகை வாக்கும் கடந்து நின்றதாகிய (ஒப்பற்ற) ஒரு பரம் பொருளை (உவமானம் முதலியவற்ருல் எடுத்துக் கூறி) விவகரிக்கும் மூங்கைகளே (நீங்கள்), கரை அற்றது ஒன்றை கரை காணல் ஆகுமோ—கடல்மணல் ஆற்றுமணல் போலும் பொருள்களுள் அளவுபடாத ஒரு பொருளை இவ்வளவுள்ளது என எண்ணிச் சொல்லி அளவுபடுத்துதல் கூடுமோ? (அது கூடாதன்ருே! அதுபோல, அப்பரம் பொருளையும் நம்முடைய கருவி காரணங்களைக்கொண்டு அளவிட்டுரைத்தல் கூடாது. ஆகலின், அப்பரம்பொருள் அறியப்படாததொன்ருே? என்பீராயின்), திரை அற்ற நீர் போல் சிந்தை தெளிவார்க்கு—(அலைகளால் கலங்கிய நீர்) அவ் அலைகள் நீங்கியவிடத்துக் கலங்குதல் இன்றித் தெளிந்திருத்தல் போலப் பாசங்களால் மயங்காது சத்திநிபாதத்தால் குருவருள் பெற்றுத் தெளிந்த அறிவினையுடையவர்கட்கு, புரை அற்று நின்ருன் புரிசடையோன் எ—கட்டமைந்த சடையையுடை

யோனுகிய சிவபெருமான் குற்றமாகிய களங்கமில்லாமல் வெளிப்பட்டு அருள்செய்வான் என்றவாறு.

அறியும் முறையில் அறிவார்க்குச் சிவபெருமான் வெளிப்பட்டருளுவார் என இத்திருமந்திரம் கூறுகின்றது.

பின் இரண்டடியிற் கூறிய கருத்தை "உறவுகோல் நட்டு உணர்வு கயிற்றினல்—முறுக வாங்கிக் கடைய முன்னிற்குமே" எனத் திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரத்தில் அருளிச்செய்தமையும் காண்க. 'உரையற்றதொன்று' என்பதனை ஸ்ரீ அருணந்திதேவநாயனுர் "மறையினல் அயனல் மாலால் மனத்தினல் வாக்கால் மற்றும்—குறைவிலா அளவினுலும் கூறெணுதாகி நின்ற—இறைவனுர் கமல பாதம்" எனவும், சிந்தை தெளிவார்க்குப் புரையற்று நின்ருன்" என்பதனை "அருளினல் ஆகமத்தே அறியலாம் அளவினுலும்—தெருளலாம் சிவனை ஞானச் செய்தியாற் சிந்தையுள்ளே—மருளெலாம் நீங்கக்கண்டு வாழலாம் பிறவி மாயா—இருளெலாம் இரிக்க லாகும் அடியரோ டிருக்க லாமே." எனவும் சிவஞான சித்தியாரில் அருளிச் செய்தமையும் காண்க.

இனி, அரிய காட்சியன் ஆகிய அப்பெருமானை அன்பினிற் காணலுறுவார்க்கு அடையாளமும் இதுஎனக் கூறியருளினர். 'புரிசடையோன்' என்றது அக்குறிப்பு. சடையைக்கூறவே அதன்கண் விளங்கும் ஞானகங்கையும், ஞானசந்திரகலையும் அடங்குமென்க. கொன்றைப்பூவாகிய அடையாளமாலையும் அதனுற் குறிப்பித்தபடி, "அரிய காட்சிய ராய்த்தம தங்கைசேர் — எரிய ரேறுகந் தேறுவர் கண்டமும்—கரியர்" என ஆளுடையபிள்ளையார் அருளிச்

செய்த தேவாரத்துக்குச் சேக்கிழார்சுவாமிகள் "அரிய காட்சிய ரென்பதவ் வாதியைத்—தெரியலாநிலையாற்றெரியா ரென—உரிய வன்பினிற் காண்பவர்க் குண்மையாம்—பெரிய நல்லடை யாளங்கள் பேசினுர்" என விரித்து உரை அருளிச் செய்தார்கள். ஓகாரம்—எதிர்மறை. சிந்தை—ஆகுபெயர். 'நிற்பான்' என்பதனைத் தெளிவுபற்றி 'நின்ருன்' என இறந்த காலத்தாற் கூறியருளினர். 'ஊமர்காள்' என்ற குறிப்பு சிந்தித்தற்குரியது. ஊமைகாள் எனவும் பாடம்.

16 வானுக்கு ளீசனைத் தேடு மருளர்காள்
தேனுக்கு ளின்பம் சிவப்போ கறுப்போ
தேனுக்கு ளின்பம் சிறந்திருந் தாற்போல்
ஊனுக்கு ளீச னொளித்திருந் தானே.

—......

—என்பது:— க்ஷேத்திரமாவது பிருதிவியின் கூறு. தீர்த்தமாவது அப்புவின்கூறு. மூர்த்தியாவது பரமாகாசத்தின் கூறு ஆகையினாலே சீவாத்மா விசார மில்லாமல் வானம் முதலாகிய பஞ்சபூத வடிவைப் பொருளாகக் கொண்டிருக்கையினாலே 'வானுக்குள் ஈசனைத் தேடும் மருளர்காள்' என்னும் சத்தத்துக்கு விபரம். தேனுக்குள் இன்பம் அறியப்படாது ஆகை யினாலே 'தேனுக்குள் இன்பம் சிவப்போ கறுப்போ' என்னும் சத்தத்துக்கு விபரம் தேனுக்குள் இன்பம் சிறந்தறியப்படாமல் இருந்தாற் போலவே ஊனுக்குள் ஈசனைக் காரணகுரு முன்னிலை அல்லாமல் அறியாதார்க்கு அறியப்படாது ஆகையினாலே 'தேனுக்குள்

இன்பம் சிறந்திருந்தாற்போல்-ஊனுக்குள் ஈசன் ஒளித் திருந்தானே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ-ள்) வானுக்குள் ஈசனை தேடும் மருளர்காள்—பரமாகாச சொரூபியாய் (சரீரியாய்) தன்னுள்ளே இருக்கும் இறைவனைத் தேடித்திரியும் அறிவில்லாதவர்களே!, தேனுக்குள் இன்பம் சிவப்போ கறுப்போ—தேனிலே (பிரித்தறிய வாராமல் கலந்து ஒன்றாயிருக்கும்) இன்பமயமாகிய சுவையானது சிவப்பு வண்ணமோ? அல்லது கறுப்பு வண்ணமோ? ஆராய்ந்து சொல்லுவீராக: தேனுக்குள் இன்பம் சிறந்திருந்தாற் போல்—(புறத்திலே வேறாகக் காணப்படாமல்) அத் தேனினுள்ளேயுள்ள இன்பமாகிய சுவை (அதனை நுகர்வோருக்குமட்டும்) சிறந்து தோன்றினாற்போல, ஊனுக்குள் ஈசன் ஒளித்திருந்தான் ஏ—அப்பரமாகாச சரீரியாகிய இறைவன் நுங்கள் சரீரத்தினுள்ளே தானே (அந்தர்யாமியாய்) உயிர்க்குயிராகப் புறத்துத் தோன்றாதபடி கலந்திருக்கின்றான் என்றவாறு.

அங்ஙனம் இருக்கும் அப்பரம்பொருளை ஞானாசாரியனுடைய திருவருளால் கண்டு சிவபோகத்தை நுகருவீராக என்பது எஞ்சி நின்றது. உயிருக்குயிராய் இறைவன் ஒளித்திருப்பினும் அதனால் யாதொரு விகாரமுமின்றிச் சிறந்து விளங்குவான் என்பது உவமையால் பெறப்படும். ஊன்-சரீரம். மருளர் எனக் கூறியது உயிர்க்குயிராகிய நாயகனை ஆசாரியர் அநுக்கிரகம் பெற்று அறிந்து அநுபவியாமல் புறத்திலே மட்டும் தேடித்திரிவாரை நோக்கி என்க. தேனை நுகர்ந்தோர் அதன் சுவை இவ்வாறு இருந்தது எனப் பிறருக்கு எடுத்துச் சொல்லவாராது அநுபவ மாத்திரையில் அறிந்து இன்புறுவர்.

அதுபோல, சிவபோக நுகர்ச்சியில் தலைப்பட்டோர் அப்பேரின்பத்தை அநுபவிப்பதை யொழிந்து புறத்தோருக்கு அதனைச் சொல்ல இயலாது என்க. 'கண்டவர் விண்டிலர்' என்பது ஒருபழமொழி. "நன்றில்லை தீயது மில்லை சொல்லா வொன்று நண்ணியதே" எனப் பஞ்சாக்கரதேசிகரந்தாதியில் கவிராக்ஷஸ — ஸ்ரீ கச்சியப்ப முனிவர் அருளியதும் காண்க. "இன்பம் இதுவெனப் பஞ்சாக்கரவன் இணைப்பதத்தில்—அன்பிற் பிணைந்த அடியாரல்லால் மற்றை யாரறிவார்" என்று அருளிய திறமறிந்து இன்புறற்பாலது. "மருவி யிருவரும் புணர வந்த இன்பம் வாயினாற் பேசரிது மணந்தவர் தாம் உணர்வர் — அருள்பெறினவ் விருவரையும் அறிவிறந்தங்கறிவர்" என்னும் சிவஞானசித்தித்திருவிருத்தம் (சூத்-8:36) நோக்கியும் அறிக.

17 என்னை அறிந்திலன் இத்தனை காலமும்
என்னை அறிந்தபின் ஏதும் அறிந்திலன்
என்னை அறியும் அறிவை அறிந்தபின்
என்னைவிட் டுன்னை உசாவுகின் றேனே.
—2366.

—என்பது:—சீவாத்மா தன்னை அறியாமல் இருந்தபடியினாலே 'என்னை அறிந்திலன் இத்தனை காலமும்' என்னும் சத்தத்துக்கு விபரம். சத்திநிபாத விவேக முன்னிலையாகச் சீவாத்மா விசாரிக்குமளவில் தனு கரண புவன போகம் தனக்குப் பொய்யாகத் தோற்றுகையினாலே 'என்னை அறிந்தபின் ஏதும் அறிந்திலன்' என்னும் சத்தத்துக்கு விபரம். காரணகுரு கைகாட்டும்படியே தன்னை அறியும் அறிவாகிய தலை

வனைத் தான் அறிந்தபடியினாலே 'என்னை அறியும் அறிவை அறிந்தபின்' என்னும் சத்தத்துக்கு விபரம். அறிந்தபின் தலைவன் அல்லாமல் தான் நில்லாமை யினாலே 'என்னைவிட்டு உன்னை உசாவுகின்றேனே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க

(இ-ள்) என்னை அறிந்திலன் இத்தனை காலமும்—(தனுகரண புவன போகங்கள் ஆகிய பாசமே மெய்ப்பொருளாகத் தோன்றும் மயக்க அறிவினால்) இத்தனைக்காலமும் ஆன்மாவாகிய யான் என் இயல்பை அறியாமல் (பிறப்பு இறப்பாகிய சுழியில் அகப்பட்டு) உழன்றேன்; என்னை அறிந்த பின் ஏதும் அறிந்திலன்—(இருவினையொப்பு மலபரிபாகம் சத்திநிபாதம் வந்தெய்தியகாலத்து முன்பு மெய்யாகத் தோன்றிய அப்பாசங்களெல்லாம் பொய்யாகத் தோன்ற) என் இயல்பை விசாரித்து நன்கு அறிந்தபின் மற்றொன்றனையும் அறிந்திலேன்; என்னை அறியும் அறிவை அறிந்தபின்—(அவ் இருவினையொப்பு மலபரிபாகம் சத்திநிபாதம் வந்து எய்த (குருவடிவாக எழுந்தருளிவந்து என் புன்தலையிலே திருவடியைச் சூட்டியருளியபின்) என் இயல்பை அறிவதற்கு ஏதுவாகிய ஞானசத்தி என்னும் திருவருளையே கண்ணாகக் கொண்டு காண (என்செயலெல்லாம் நின்செயலாகவே தோன்றுதலால்), என்னை விட்டு உன்னை உசாவுகின்றேன் ஏ—என் இயல்பையெல்லாம் மறந்து சிவானந்தத்திலே அழுந்திக் கிடத்தலால் உன் இயல்பையே நாடுகின்றேன் என்க.

இத்திருமந்திரம் முன்னர்க்கூறிய "தன்னை அறியத் தனக்கொரு தீங்கில்லை" என்னும் திருப்பாட்டின் கருத்தை

நன்கு விளக்கி நிற்றல் காண்க. 'என்னை அறிதல்' என்பது "நாமல்ல விந்திரியம் நல்வழியி னல்லவழி" என்னும் சிவஞானபோதம் பத்தாம் சூத்திரம் இரண்டாமதிகாரணத்துக் கூறியருளியமை பற்றிச் சிந்தித்தற்குரியது.

**18 யான்பெற்ற பேறு பெறுகஇவ் வையகம்**
**வான்பற்றி நின்ற மறைப்பொரு ளொன்றுண்டு**
**ஊன்பற்றி நின்ற வுணர்வுறு மந்திரம்**
**தான்பற்றப் பற்றத் தலைப்படு மாறே.**

—என்பது:— தான்பெற்ற பேறு விசாரிக்குமளவில் வையகம்தனக்குமுன் சம்மதமாகத் தோற்றுகையினலே 'யான் பெற்ற பேறு பெறுக இவ்வையகம்' என்னும் சத்தத்துக்கு விபரம். பாலின் கண் நெய் இருந்தாற்போலவே அறிவுடன் மருவியிருந்தும் அறிவுக்கு அறியப்படாது ஆகையினலே 'வான்பற்றி நின்ற மறைப்பொருள் ஒன்று உண்டு' என்னும் சத்தத்துக்கு விபரம் பூமியின்கண் புதையல் இருந்தாற்போலவே ஐம்பூத காயத்துடன் மருவியிருந்து ஐயுணர்வை உணர்த்துகையினலே 'ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரம்' என்னும் சத்தத்துக்கு விபரம். காரணகுரு கைகாட்டும்படி விசாரிக்குமளவில் வெளிப்படும் ஆகையினலே 'தான்பற்றப்பற்றத் தலைப்படுமாறே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ—ள்) வான் பற்றி நின்ற மறைப் பொருள் ஒன்று உண்டு — பரமாகாசத்தையே திருமேனியாகப் பொருந்தி

நின்ற இரகசியப்பொருள் ஒன்று உள்ளது: ஊன்பற்றி நின்ற உணர்வு உறு மந்திரம் — (அவ்விரகசியப்பொருளே) இந்தச் சரீரத்தைப்பொருந்தி நின்ற (ஆன்மாவால் அறியப்படும்) இரகசியப் பொருளாம். தான் பற்றப்பற்ற தலைப்படும் ஆறு ஏ—(அந்த இரகசியப் பொருளை ஞாஞசாரியன் அநுக்கிரகம் செய்தருளும் முறைப்படியே அத்துவிதபாவனையாகச்) சிந்திக்கச் சிந்திக்க ('தர்ப்பணத்தை விளக்க வந்திடும் அவ்வொளி போல' விளங்கித் தோன்றுதலால்) தானே கிட்டும் விதமாம். (ஆதலால்) யான் பெற்ற பேறு பெறுக இ வையகம் — யான் (குருவருளால் எளிதிலே தேடிப்) பெற்றுக்கொண்ட பயனுகிய ஆன்மலாபமாம் இது: இவ்வான்மலாபத்தையே இவ்வுலகத்தவரும் பெற்றுய்வாராக என்றவாறு.

மறை, மந்திரம் என்பன இரகசியப் பொருள் குறித்து நின்றன. சிவஞானசித்தியாரில் (சாதனவியல் சூத்-9 செய்12-.) "இந்தனத்தின் எரிபாலின் நெய் பழத்தின் இரதம் எள்ளின்கண் எண்ணெயும் போல" என அருளிச் செய்தமை காண்க. அறியப்படாமல் மறைந்து நிற்றலின் 'மறைப்பொருள்' என்றருளினர். இனி, மந்திரம் என்பதற்குத் திருவைந்தெழுத்தெனவே கொண்டு "மெய்வகை ஐந்தவத்தையினும் நிற்கு முறையாகிய ஓது முறை"யால் பற்றப்பற்ற எனப் பொருள் கூறுதலும் ஒன்று. 'பற்றப்பற்றத் தான் தலைப்படுமாறே' என்னும் கடையடிக் கருத்தைக் சிவ-சித்தி-சூத்-9, செய்-10 காண்க. இத்திருமூல நாயனுர் ஆன்மவர்க்கத்தை நோக்கி 'யான் பெற்ற பேறு பெறுக இவ்வையகம்' எனக் கருணையால் அழைப்பது காணலாம்- இம்மரபில் வந்த மௌனகுருவின் அருள் பெற்ற தாயுமானவ சுவாமிகள்

'காக முறவு கலந்துண்ணக் காண வாரும் செகத்தீரே' எனக் கூறியருளியமையும் இக்கருத்துப்பற்றியே என்க.

19 . உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு சுற்றூலை
வள்ளற் பிரானூர்க்கு வாய்கோ புரவாசல்
தெள்ளித் தெளிவார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்தும் காள மணிவிளக்கே.
—1823.

—என்பது :— உள்ளம் பெருங்கோயிலாவது சீவாத்மா. விபரம்எந்தப்படி யென்றால்,—பாலின்கண் நெய் இருந்தாற்போலவே பூரண சிவலிங்கம் உள்ளமாகிய சீவாத்மாவை இடங்கொண் டிருக்கையினாலே 'உள்ளம் பெருங்கோயில்' என்னும் சத்தத்துக்கு விபரம். உள்ளம் பெருங்கோயிலாகிய சீவாத்மாவுக்கு ஐம்பூத வடிவு வளைபமாகையினாலே 'ஊனுடம்பு சுற்றூலை' என்னும் சத்தத்துக்கு விபரம். வைகரி வாக்குச் சுற்றூலையாகிய வடிவுக்கு முன்னிலையாகையினாலே 'வள்ளற்பிரானூர்க்கு வாய் கோபுரவாசல்' என்னும் சத்தத்துக்கு விபரம். காரணகுரு கைகாட்டும் படியே உள்ளமாகிய சீவாத்மா கர்ப்பூரமும் சோதியும் கலந்தாற்போலவே பூரணமாகியசிவலிங்கத்தில் ஐக்கிய பதம் பெற்றபடியினாலே 'தெள்ளித்தெளிவார்க்குச் சீவன் சிவலிங்கம்' என்னும் சத்தத்துக்கு விபரம் தெளிந்தபின் புலன் ஐந்தும் சிவாம்சமாகத் தோற்றுகையினாலே 'கள்ளப்புலனைந்தும் காள மணிவிளக்கே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க

(இ—ள்) வள்ளல் பிரானுர்க்கு — (ஆன்மாக்கள் வேண்டியபடியே வேண்டியவற்றையெல்லாம் வரையாதுகொடுத்து அநுக்கிரகம் செய்தருளும்) வள்ளலாகிய சிவபெருமானுக்கு, உள்ளம் பெருங்கோயில் — (சிவஞானிகளுடைய) மனமே பெருமைதங்கிய கோயிலாம். ஊன் உடம்பு சுற்றுலே — (பஞ்சபூதபரிணுமமாகிய தூல சரீரமே திருச்சுற்றுமாளிகையாம். வாய் கோபுரவாசல் – நால்வகைப்பட்ட வாக்குகளும் கோபுரவாயில்களாம். தெள்ளி தெளிவார்க்கு — (ஞாஞசாரியன் உபதேசவாயிலாகக் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டைகூடல் ஆகிய சாதனங்களால்) மிகத் தெளிந்த சிவஞானிகளுக்கு. சீவன் சிவலிங்கம் — சீவான்மாவே சிவம் தங்குவதற்கு நிலக்களம் ஆகிய இலிங்கமூர்த்தியாம். கள்ளம் புலன் ஐந்தும் காள மணிவிளக்கு ஏ – (தெளிந்த அவர்க்குப் பின்பு) வஞ்சனையைச் செய்து பிறப்பு இறப்புக்களில் கொண்டுபோய்வீழ்த்தும் ஐம்புலன்களாகிய பசுகரணங்கள் சிவகரணங்களாக மாறியதனுல் கரியமணிவிளக்காம் என்றவாறு.

இனி, 'உள்ளம் பெருக்கோயில்' என்பதனைத் திருத்தொண்டர் புராணத்து வாயிலார் நாயனுர் புராணத்திலே வைத்து "மறவாமை யனமைத்த மனக்கோயி லுள்ளிருத்தி" என ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள் விளக்கியருளியமை காண்க. பருவுடலாகிய தூலத்தைச் சுற்றுலயம் எனவே ஏனைய நுண்ணுடல் முதலியனவும் பிற ஆவாணங்களாகக்கொள்க. ஆலயம் என்பது ஆலே என நின்றதென்பர். வாய் என்பது நால்வகை வாக்குகளையும் உணர்த்துதலின் ஆகுபெயர். நால்வகை வாக்காவன — சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என்பன. நீக்கமின்றி உயிருக்குயிராக நிறைந்து நிற்றலின் 'சீவன் சிவலிங்கம்' என்றுர்.

சிவலிங்கம் மூர்த்தி, சிவபெருமான் மூர்த்திமான் என்க. ஆன்மபோதத்தைச் சூறையாடித் தன் வசம் செய்தலின் 'கள்ளப்புலன்' என்றருளினர் 'ஐம்புலவேடர்' என்றதும் இக்கருத்துப்பற்றியேயாம். புலனைந்தும் என்ற குறிப்பினல் இனம்பற்றி ஏனைய கருவி கரணங்களும் கொள்ளப்படும். பதிகரணங்களாக மாறுங்காலத்துப் பசுகரணங்கள் எல்லாம் பகல் விளக்குப்போலத் தத்தம் சத்தி மடங்கி நிற்றலால் அவற்றைக் காளமணிவிளக்கு என்றூர். இதனை, கவிராக்ஷஸ-ஸ்ரீ கச்சியப்பமுனிவர் தாம் அருளிய திருவானைக்காப்புராணம் – ஞானேபதேசப்படலச்செய்யுளில் "கருவி முன்பகல் விளக்கொடு கடுக்கும்" என விளக்கியமை காண்க.

**20 ஒடுங்கி நிலைபெற்ற உத்தமர் உள்ளம்**
**நடுங்குவ தில்லை நமனுமிங் கில்லை**
**இடும்புகள் இல்லை இராப்பகல் இல்லை**
**கடும்பசி இல்லை கற்றுணர்ந் தார்க்கே.**

—1624.

— என்பது :— காலன் சீவாத்மாவினுக்குக் கட்டெளியானைகையினலே சீவாத்மா பயந்து விசாரித்துக்கொண்டு காரணகுரு கை காட்டும்படி பெருநீரும் நீர்க்குமிழியும் கலந்து ஒன்றானற்போலவே நிலைமையாகிய பூரணத்தில்ஐக்கியபதம்பெற்றபின் காலன்கடனொழிந்த படியினலே 'ஒடுங்கி நிலை பெற்ற உத்தமருள்ளம் – நடுங்குவ தில்லை நமனு மிங்கில்லை – இடும்புக ளில்லை இராப்பகலில்லை–கடும்பசி யில்லை கற்றுணர்ந் தார்க்கே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ-ள்) ஒடுங்கி நிலை பெற்ற உத்தமர் கற்று உணர்ந்தார்க்கு—உலகம் ஒடுங்குதற்கு ஏதுவாய் இருக்கின்ற பதியினிடத்து (அத்துவித நிலையை அறிந்து அவ்வாறே) நிலை பெற்றிருக்கும் உத்தமர்களாகிய கற்றுணர்ந்த சிவஞானிகளுக்கு, உள்ளம் நடுங்குவது இல்லை — (பிறப்பு இறப்புக்கள் இல ஆதலால் அவற்றை நோக்கி) மனம் நடுக்கத்தை அடைவதில்லை, நமனும் அங்கு இல்லை — (பிறப்பு இறப்புக்கள் இல ஆகவே சரீரத்திரயங்களுடன் இருவினைப்பற்றும் விட்டமையால்) இயமனும் அவ்விடத்து வருவதில்லை. (எனவே, இமயனுக்கு அவ்வுத்தமர்பால்வந்து செய்யக்கடவது ஒன்றுமில்லை என்றபடி), இடும்புகள் இல்லை — துன்பங்கள் இல்லை, இராப் பகல் இல்லை — இரவும் பகலும் இல்லை, கடும் பசி இல்லை — மிக்க பசித்துன்பமும் இல்லையாம் என்றவாறு.

இனி, "கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்— நற்றாள் தொழாஅ ரெனின்" என்னும் திருக்குறள் கற்றறிந்ததனல் ஆகிய பயன் இறைவன் அருளை அடைந்து உய்தலே என்று கூறும்: ஆகலின் 'ஒடுங்கி நிலை பெற்ற உத்தமர் (ஆகிய) கற்றுணர்ந்தார்க்கு' என்று அருளிச்செய்தார்கள். 'ஒடுங்கி' என்பது பெயர்: ஈண்டு எச்சமன்று. "ஒடுங்குதற்கு ஏதுவாய் நின்ற கடவுள்" என உரையருளிச் செய்தமையைச் சிவஞானபோதம் முதற்சூத்திரத்துக் காண்க. "ஏன்ற ஊழுடல் இருத்தலின் ஏறும் வல்வினையும் தோன்றும்" எனக் கவிராக்ஷஸ—ஸ்ரீ கச்சியப்ப முனிவர் திருவானைக்காப்புராணம்—ஞானவுபதேசப்படலத்திற் கூறியவாறு ஓரோவழிப் பயிற் சிவசத்தால் தோன்றுமாயின் திருவைந்தெழுத்தை விதிப்படி கணிக்கத் துன்பங்கள் நீங்கும் என்க. "இரவுப்பகல் இல்லா இன்பவெளியூடே—விரவி விரவிநின் றுந்தீபற-விரைய விரைய

நின் றுந்தீபற'' என்னும் திருவுந்தியார் திருப்பாட்டையும் இவ்வாதீனத்துத் தில்லைச்சிற்றம்பலவர் என்னும் சிவப்பிரகாசனார் உரையையும் நோக்கி 'இராப்பகல்' என்றதுணர்க. இனி, 'இரவும் பகலும் இலாத விடத்தே — குரவம் செய்கின்ற குழலியை நாடி — அரவம் செய்யாமல் அவளுடன் தூங்கப் — பருவம் செய்யாததோர் பாலனு மாமே'' என்பது திருமந்திரம்—1133. இரவுபகல் என்றது நினைப்புமறப்பு என்றலு மொன்று. அறிவு அறியாமை எனினுமாம். "அறிவறி யாமை இரண்டு மகற்றிச் — செறிவறி வாயெங்கும் நின்ற சிவனைப்—பிறிவறி யாத பிரானென்று பேணும்—குறியறி யாதவர் கோனறி யாரே'' திருமந்—2580. "அறிவுமறியாமையுங் கடந்தறிவு — திருமேனி யென்றறிந் தருண — சரணார விந்தமென் றடைவேனே'' திருப்புகழ்; காண்க.

இனி, ஒடுங்கி என்பதனை எச்சமாகக் கொள்ளின் கருவிகள் ஒடுங்கி எனப் பொருள் கொள்க. "ஞாலமதின் ஞான நிட்டை யுடையோருக்கு—நன்மையொடு தீமையில்லை நாடுவதொன்றில்லை'' என்னும் சிவஞானசித்தித்திருவிருத்தம் இம் மந்திரப் பொருளை நன்குணர்த்தும்.

21 எட்டும் இரண்டும் அறியாத என்னை
எட்டும் இரண்டும் அறிவித்தான் என்நந்தி
எட்டும் இரண்டும் அறிவால் அறிந்தபின்
எட்டும் இரண்டும் இலிங்கம தாமே.

--- என்பது :— எட்டாவது புரியட்டகாயம்: விபரம் எந்தப்படி என்றால், ஆங்காரம் சித்தம் புத்தி மனம் அந்தக்கரணம் ஆணவம் மாயை காமியம் இவை

5

எட்டும் கூடிச் சீவாத்மாவுக்குப் புரியட்டகாயமாகக் கருக்கொண்டிருக்கையினாலே எட்டென்னும் சத்தத்துக்கு விபரம். சீவாத்மா எட்டாகிய புரியட்டகாயத்தையும் இரண்டாகிய தன்னையும் தலைவனையும் அறியாமல் இருக்கையினாலே 'எட்டும் இரண்டும் அறியாத என்னை' என்னும் சத்தத்துக்கு விபரம். எட்டாகிய புரியட்டகாயத்தையும் இரண்டாகிய தன்னையும் தலைவனையும் காரணகுரு கை காட்டும்படியே (அன்றி) அறியாத படியினாலே 'எட்டும் இரண்டும் அறிவித்தான் என் நந்தி' என்னும் சத்தத்துக்கு விபரம். எட்டாகிய புரியட்டகாயத்தையும் இரண்டாகிய தன்னையும் தலைவனையும் அறிவால் அறிந்தபடியினாலே 'எட்டும் இரண்டும் அறிவால் அறிந்தபின்' என்னும் சத்தத்துக்கு விபரம். எட்டாகிய புரியட்டகாயமும் இரண்டாகிய தானும் தலைவனும் கர்ப்பூரமும் சோதியும் கலந்தாற் போலவே பூரணமானபடியினாலே 'எட்டும் இரண்டும் இலிங்கமதாமே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ-ள்) எட்டும் இரண்டும் அறியாத என்னை — புரியட்டகாயமும் ஆன்மாவும் பதியும் ஆகிய பத்தும் இதுவரையில் அறியாதிருந்த எனக்கு, எட்டும் இரண்டும் அறிவித்தான் என் நந்தி — என்னுடைய (ஞாநாசாரியராகிய) திருநந்திதேவர் (என்னுடைய பக்குவத்தைச் சோதித்தறிந்து) அப்பத்தையும் நான் அறிந்துகொள்ளுமாறு உபதேசம் செய்தருளினர், எட்டும் இரண்டும் அறிவால் அறிந்தபின் — அப்பத்தையும் (ஞாநாசாரியர் அநுக்கிரகம் செய்ய) அத்திருவருளே கண்ணாகக்கொண்டு சிந்தித்தறிந்த பின்பு, எட்டும்

இரண்டும் இலிங்கம் அது ஆம் ஏ — அப்பத்தும் பதியாய் விடும் என்றவாறு.

இலிங்கம் ஆமாறு எவ்வாறு? எனில், பசுகரணங்கள் எல்லாம் சிவகரணங்களாகமாறி ஆன்மா திருவருளில் மூழ்கி வேறு பிரித்துணரா வாராமல் அத்துவிதக் கலப்பாகித் 'தாடலை' போல் அடங்கி நிற்றலாம். எட்டும் இரண்டும் என்பதற்கு அகாரம் உகாரம் எனப் பொருள்கொண்டு அவ்விரண்டும் பிரணவம் ஆகலின் அது எனப் பொருள் கூறுதலும் உண்டு. பிரணவம் பற்றிய குறிப்பைச் சிவஞான போதம் நான்காம் சூத்திரத்து "அகாரவுகாரம்" என்னும் உதாரண வெண்பாவால் உணர்க: (ஸ்ரீ மாதவச்சிவஞான யோகிகள் உரை) "அ உ அறியா அறிவில் இடைமகனே — நொவலையல் நின்னுட்டை நீ" எனப் பிறர் கூறியமையும் அறிக. எட்டும் இரண்டும் பத்து எனக்கொண்டு 'ய' காரம் ஆகிய ஆன்மா எனப் பொருள் கூறுவாரும் உளர்.

**22 உள்ளத் தொருவனை உள்ளூறு சோதியை**
**உள்ளம்விட் டோரடி நீங்கா தொருவனை**
**உள்ளமும் அவனும் உறவா யிருந்தும்**
**உள்ளம் அவனை உருவறி யாதே. —431.**

— என்பது :- உள்ளதாகிய உயிருக்கெல்லாம் ஒருவன் ஆகையினாலே 'உள்ளத்தொருவனை' என்னும் சத்தத்துக்கு விபரம். உள்ளதாகிய எல்லா உயிருக்கும் பொதுவாக வழங்குகையினாலே 'உள்ளூறு சோதியை' என்னும் சத்தத்துக்கு விபரம். உள்ளதாகிய உயிருக்கெல்லாம் பூரணம் ஆகையினாலே

'உள்ளம் விட்டு ஓரடி நீங்கா தொருவனை' என்னும் சத்தத்துக்கு விபரம். உள்ளதாகிய சீவாத்மா அவன் முன்னிலையாக உண்டு உடுத்து நடந்தும் சீவாத்மா அவனை அறியாமல் இருந்தபடியினலே 'உள்ளமும் அவனும் உறவாயிருந்தும் உள்ளம் அவனை உரு அறியாதே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ-ள்) உள்ளத்து ஒருவனை — உயிர்க்குயிராக விளங்கும் முதல்வனாகிய ஏகனை, உள் உறு சோதியை — அறிவினுக்கு அறிவாய் விளங்கும் ஒளிப்பொருளை, உள்ளம் விட்டு ஓரடி நீங்காத ஒருவனை—ஆன்மாவை விட்டு நீங்காதிருக்கின்ற ஒப்பற்ற பரம்பொருளை, உள்ளமும் அவனும் உறவு ஆய் இருந்தும் — (காட்டும் உபகாரம் செய்திருக்கின்ற) அவனும் (அவ்வுபகாரத்தைப் பெறுகின்ற) ஆன்மாவும் ஒன்றாய்க் கலந்திருந்தும், உள்ளம் அவனை உரு அறியாது ஏ—அவ்வான்மா அப்பரம்பொருளின் உண்மைத்தன்மையை அறியமாட்டாது என்றவாறு.

இஃது என்ன ஒரு வியப்பாயிருந்தது என்பது எஞ்சி நின்றது. உள்ளம் — ஆன்மா. காட்டும் உபகாரத்தைச் சிவஞானபோதம் பதினோராம் சூத்திரமும் ஸ்ரீ மாதவச் சிவஞானயோகிகள் அருளிய அதன் உரையும் நோக்கி அறிக. அதன் உண்மைத்தன்மையை அறியமாட்டாமைக்கு ஆன்மாப் பாசத்தழுந்திக்கிடத்தலே காரணமாம் என்க.

23 வாசித்துப் பூசித்து மாமலர் கொய்திட்டுப்
பாசக் கிணற்றில் விழுகின்ற பாவிகாள்
மாசற்ற சோதி மணிமலர்த் தாளை
நேசத்தே வைக்க நினைவறி யீரே. —1506.

— என்பது :- சிவாகமப்பயனை விசாரித்துக் கொண்டு, சிவதீட்சை பெற்று, சிவார்ச்சனை செய்து, சிவனல்லாமல் வேறில்லை என்று அறிந்திருந்தாலும் காரணகுரு கைகாட்டும்படியே சிவமாகிய பூரணத்தில் கர்ப்பூரமும் சோதியும் கலந்தாற்போல ஐக்கியபதம் இல்லாதார்க்கு இருவினைச் செனனம் ஒழியாது ஆகையினாலே 'வாசித்துப்பூசித்து மாமலர் கொய்திட்டுப் — பாசக்கிணற்றில் விழுகின்ற பாவிகாள் — மாசற்ற சோதி மணிமலர்த்தாளை — நேசத்தே வைக்க நினைவறியீரே' என்னும் சத்தத்துக்கு வி ாரம் என்க.

(இ—ள்) பாசம் கிணற்றில் விழுகின்ற பாவிகாள்— பந்தமாகிய கிணற்றிலே வீழ்ந்து வருந்தி இருக்கின்ற பாவிகளே, மாசு அற்ற சோதி மணி மலர் தாளை — இயல்பாகவே பாசங்களினீங்கி விளங்கும் சோதிவடிவினனாகிய பதிப் பொருளின் அழகிய மலர்போலும் திருவடிகளை, மா மலர் கொய்து இட்டு பூசித்து—அன்றலர்ந்த சிறந்த மணமலர்களை விதிப்படி பறித்து (ஞானசாரியன் அநுக்கிரகம் செய்தபடியே புயம்பேயும்) இட்டு அருச்சித்து, வாசித்து — தோத்திரங்களைச் சொல்லி, நேசத்தே வைக்க நினைவு அறியீர் ஏ— அன்புருவாக (அகத்தே அத்துவிதக் கலப்பாக வைத்து) ப்பாவிக்க நினைத்தறியமாட்டீர் என்றவாறு.

இவ்வாறாயின், நீர் எவ்வாறு முத்தியடைய வல்லீர்! என்பது எஞ்சிநின்றது. இம்மந்திரப்பொருளை, "புறம்பேயும் அரன் கழல்கள் பூசிக்க, வேண்டின் பூ மாத்தின் இலை உதிர்ந்த போதுகளும் கொண்டு—சிறந்தாரும் சீர்ச் சிவனை ஞானத்தால் அங்குச் சிந்திக்கும்படி. இங்குச் சிந்தித்துப்

போற்றி " என்னும் சிவஞான சித்தியார் (சூத்-9: செய்-11) நோக்கி யுணர்க. பாசம் உள்ளவரையில் பாவம் நீங்காதாகை யால் பாசத்தாரைப் 'பாவிகாள்' என இரங்கிக் கூறியபடி அறிவீராயின் பாசக் கிணற்றினின்று கரையேறலாமே எனக் குறிப்பித்தபடி காண்க. பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந் தார்—இறைவ னடிசேரா தார்" (திருக்குறள்—10)

இத்திருப்பாட்டுக் கொண்டுகூட்டுப் பொருள்கோள் ஆம் என்பர்.

**24 மனத்தில் எழுந்ததோர் மாயக் கண்ணாடி**
**நினைக்கின் அதனில் நிழலையும் காணார்**
**வினைப்பயன் போக விளக்கியும் கொள்ளார்**
**புனக்கடை இச்சித்துப் போகின்ற வாறே.**

—1681.

—என்பது:- மனத்தினுடைய நிலைமை யாவருக்கும் அறியப்படாமையினாலே 'நினைக்கின் அதனில் நிழலையும் காணார்' என்னும் சத்தத்துக்கு விபரம். காரணகுரு கைகாட்டும்படியே விசாரித்துக் கொள்ளாமையினாலே 'வினைப்பயன் போக விளக்கியும் கொள்ளார்' என்னும் சத்தத்துக்கு விபரம். காரணகுரு கைகாட்டும்படியே விசாரித்துக்கொள்ளாதார்க்கு இருவகைச் செனனம் ஒழியாது. ஆனபடியினாலே 'புனக்கடை இச்சித்துப் போகின்றவாறே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ—ள்) மனத்தில் எழுந்தது ஓர் மாயம் கண்ணாடி (அதனை)-மனச்சங்கற்பத்தினால் உண்டாகிய (வினைப்பயனால்

வந்த) பொய்ச்சரீரம் ஆகிய ஒரு கண்ணாடியை, நினைக்கின் நிழலையும் காணார் — ஆராய்ந்து பார்க்கின் (அக்கண்ணாடியினகத்துத் தோன்றும் ஆன்மாவாகிய) பிரதிபிம்பத்தையும் அறியமாட்டார், வினைப்பயன் போக—இருவினைப்பயன்கள் தொடாது அற்றுப்போக, விளக்கியும் கொள்ளார் — (ஞானாசாரியனுடைய அநுக்கிரகத்தால்) விளங்கச்செய்வித்து (உண்மைநிலையையும்) அறிந்துகொள்ளமாட்டார், புனக்கடை இச்சித்து போகின்ற ஆறு ஏ — (அவ்வாறு அறியமாட்டாதார் செயல்) சுடுகாட்டுக்கு மிக விரும்பிச் செல்வதையன்றி வேறொன்றின்று என்றவாறு.

"வினையின் வந்தது வினைக்கு விளைவாயது' என்றமையின் சரீரம் வினைப்பயனால் வருவதாயும் மேலும்,வினைகளைச் செய்து ஆன்மா பிறப்பு இறப்புக்களிற்பட்டு உழல்வதற்குக் காரணமாயும் உள்ளதென்க. "வினைப்போகமே யொரு தேகங்கண்டாய் வினை தானொழிந்தால் — தினைப்போது நில்லாது" என்றதும் காண்க. மாயம் — பொய். மனச் சங்கற்பமே வினை விளைவுக்குக் காரணமாம். கருவிகள் எல்லாம் அறிகருவியாதலின் சரீரத்தைக் கண்ணாடி என்றருளினார். "மாயா தனுவிளக்கா மற்றுள்ளம் காணாதேல் — ஆயாதா மொன்றை யதுவதுவாய்" என்னும் சிவஞான போதம் நான்காம்சூத்திரம் உதாரணவெண்பா நோக்கி இதனை அறிக. நிழலையும் என்ற உம்மை இழிவு சிறப்புஎன்க. ஆன்மாவின் உண்மை நிலையையே அறியார் பரமான்மாவின் உண்மை நிலையை எவ்வாறறிவார்? எனக் குறிப்பித்தபடி. இனி, குருவருளால் பெற்ற உபதேசத்தைக்கொண்டு "சிந்தைதனில் அர்ச்சிக்க, சிவனை ஞானத்தால் சிந்திக்கச் சிந்திக்க, தர்ப்பணத்தை விளக்க வந்திடும் அவ்வொளிபோல,

மருவி அரன் உளத்தே வரவா வந்திடுவன், பின் மலமானது அறும்'' என்ற சிவஞானசித்தியார் திருவிருத்தப் பகுதி நோக்கி 'விளக்கியும்கொள்ளார்' என்றதன் விரிவறிக.

25 **அத்திப் பழமும் அரைக்கீரை நல்வித்தும்**
**கொத்திக் குதறிக் கூட்டில் அடைத்தது**
**அத்திப் பழத்தின் அமுதம் அறிந்தபின்**
**கத்திக்கொண் டைவரும் காடுறைந் தாரே.**

—160.

—என்பது: —அத்திப்பழமும் சுரோணிதமும் இவை இரண்டுக்கும் உவமை ஒன்றே: விவரம் எந்தப் படி யென்றால், சிவப்பு நிறம் ஒன்றானபடியினாலே சுரோணிதத்துக்கு அத்திப்பழம் என்னும் பெயருண்டாச்சுது. சீவாத்மாவுக்குச் செனனத்துக்கு முன்னிலே சுக்கிலம் ஆகையினாலே ஸ்திரீயும் புமானும் சையோகத்தில் அத்திப்பழம் ஆகிய சுரோணிதமும், அரைக்கீரை நல் வித்தாகிய சுக்கிலமும் இவை இரண்டும்கூடி மாதாவினுடைய கர்ப்பத்தில் ஐம்பூதவுடல் உருவாகையினாலே 'அத்திப்பழமும் அரைக்கீரை நல்வித்தும் —கொத்திக் குதறிக் கூட்டில் அடைத்தது' என்னும் சத்தத்துக்கு விபரம். காய சம்பந்தமாகிய சீவாத்மா விசாரித்துக்கொண்டு காரணகுரு கைகாட்டும்படியே காயசம்பந்தமாகிய தத்துவம் முப்பத்தாறும் பொய் யென உணர்ந்து அமுதாகிய பூரணத்தில் ஐக்கியபதம் பெற்றபின்பு புலன் ஐந்தும் பொய் ஆகையினாலே

'அத்திப்பழத்தின் அமுதம் அறிந்தபின்-கத்திக்கொண் டைவரும் காடுறைந்தாரே' என்னும் சத்தத்துக்கு வியரம் என்க.

(இ-ள்) கொத்தி குதறி அத்திப்பழமும் அரைக்கீரை நல்வித்தும் கூட்டில் அடைத்தது — ஆடவரும் மகளிரும் சையோகலீலைகள் செய்து, கருப்பையைக் கிளரப்பண்ணி, சுரோணிதமும் நல்ல சுக்கிலமும் வெளிப்படச்செய்து அவை இரண்டும் ஒன்றாக அக்கருப்பை ஆகிய கூட்டில் (ஆன்மாக்கள் பூமியில் செனனம் ஆதற்கு) முன்படைக்கப்பட்டது. அத்திப் பழத்தின் — செனனம் ஆகிய அச்சரீரத்தினுள்ளே, அமுதம் அறிந்தபின் — முத்தியாகிய அத்துவித உண்மை நிலையை யுணர்ந்தபின்பு, கத்திக்கொண்டு ஐவரும் காடு உறைந்தார் — (தமக்குச் செயலில்லாமையாலே) பஞ்சேந்திரியங்களும் கதறிக்கொண்டு வெளியே நீங்கிப்போயின என்றவாறு.

சிவப்பு நிறம் உண்மை கருதிச் 'சுரோணிதம்' அத்திப் பழமாகவும், மீண்டும் மீண்டும் தோன்றி அழியும் தன்மை கருதிச் 'சுக்கிலம்' அரைக்கீரை வித்தாகவும் உருவகம் செய்து உணர்த்தியருளினர் சுக்கிலம் சிறந்ததாக இருத்தல் வேண்டும் ஆகலின் 'நல்வித்து' எனக் கூறப்பட்டது. மூன் றும் அடியில் அத்திப்பழம் என்றது சரீரத்தை. அமுதம்— மோக்ஷம். யோகசாதனத்தால் அமுதநிலையை அறிந்தபின் எனப் பொருள் கூறுதலும் ஆம். ஐவர் என்னும் தொகைக் குறிப்பு இங்கே பஞ்சேந்திரியங்களை உணர்த்தி நின்றது.

**26 வழுதலை வித்திடப் பாகல் முளைத்தது**
**புழுதியைக் கிண்டிப் பூசனி பூத்தது**

**முழுதும் பழுத்தது வாழை இளங்கனி**
**தொழுதுகொண்டறிந்தோர் தொட்டுடையாரே.**
—2869.

—என்பது:— வழுதலை வித்துக்கும் சுக்கிலத்துக்கும் இரண்டுக்கும் உவமை ஒன்றே. விபரம் எந்தப் படி? யென்றால், வழுதலை வித்து வழுதலை என்னும் நாமத்துக்கு முன்னிலையானாற் போலவே காயத்துக்கு முன்னிலை சுக்கிலம் ஆகையினாலே சுக்கிலத்துக்கு 'வழுதலைவித்து' எனநாமம் உண்டாச்சுது. சீவாத்மாவுக்கு இருவினைக்கசப்புத்தொடர்ந்தபடியினாலே சீவாத்மாவுக்குப் 'பாகல்' என்னும் பேருண்டாச்சுது. பாகல் என்னும் சீவாத்மா பிதாவினுடைய சுக்கிலத்தில் மருவி மாதாவினுடைய கர்ப்பத்தில் சுக்கிலமும் சுரோணிதமும் கூடி ஐம்பூதவடிவாகிய காயத்துடன் உற்பத்தியாகையினாலே 'வழுதலை வித்திடப் பாகல் முளைத்தது என்னும் சத்தத்துக்கு விபரம். பாகலாகிய சீவாத்மா அகத்துக்கண் கொண்டு ஐம்பூத வடிவாகிய தத்துவம் முப்பத்தாறும் பொய் எனக்கண்டு காயம் தனக்கு வேற்றுமையாகவும் பாகல் என்னும் இருவினைக்கசப்பு நீங்கித் துரியம் ஆகையினாலே 'புழுதியைக் கிண்டிடப் பூசனிபூத்தது' என்னும் சத்தத்துக்கு விபரம். துரியமாகிய சீவாத்மா காரணகுரு கை காட்டும்படியே நிராமய பூரணத்தில் நீருடன் நீர்க்குமிழி அடங்கினாற் போலவே ஐக்கியபதம் பெற்றபடியினாலே 'முழுதும் பழுத்தது வாழை இளங்கனி' என்னும் சத்தத்துக்கு விபரம். சத்திநிபாத விவேக முன்னிலையாக அறிந்த

படியினுலே 'தொழுது கொண்டறிந்தோர் தொட்டுடையாரே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ-ள்) வழுதலை வித்து இட பாகல் முளைத்தது-வழுதலை வித்தாகிய சுக்கிலத்தைக் கருப்பையாகிய நிலத்திலிட (இருவினையாகிய கசப்புப்பற்றியதனுல் பின்பு சுரோணிதத்துடன் கூடி வழுதலையாக முளையாமல்) பாகல் ஆகிய உடம்பு உண்டாயிற்று. புழுதியைக் கிண்டி பூசனி பூத்தது-புழுதியாகிய புறக்கருவி அகக்கருவிகளைப் பிரித்து ஆராயஅதிலே பூசனிப்பூவாகிய இதயகமலம் தோன்றி விளங்கியது. வாழை இளங்கனி – (அப்பூசனிப்பூவாகிய இதய கமலத்தில்) வாழை இளங்கனியாகிய சிவப்பொருள். முழுதும் பழுத்தது—பூரணமாகக் கனிந்திருந்தது. தொழுது கொண்டறிந்தோர் தொட்டுடையாரே-(அக்கனியை ஞாஞசாரியனுடைய திருவருளைப் பெற்று) அறியும் முறையால் அறிந்து அனுபவித்தவரே சிவபூரண நிலையுடன் பொருந்துபவராவார் என்றவாறு.

வழுதலை முளைத்தற்கு வித்துக் காரணம்; அதுபோல, தூல உடம்பு தோன்றுதற்குச் சுக்கிலம் காரணமாம்: ஆதலால், சுக்கிலத்தை வழுதலை வித்தாக உருவகம் செய்யப்பட்டது. இதய கமலத்தைப் பூசனிப்பூவாக உருவகம் செய்தருளினர். இதய பங்கயத்தின் இயல்பைச் சிவஞானபோதம் (சூத்-9: அதிகா-3:) "மண்முதல் நாளமலர் வித்தை கலாரூபம் – எண்ணிய ஈசர் சதாசிவமும்–நண்ணிற், கலையுருவாம் நாதமாம் சத்தியதன் கண்ணும்–நிலையதிலாம் அச்சிவன்றாள் நேர்" என்னும் உதாரண வெண்பா நோக்கியறிக. ஆகம பேதம் பற்றி வெவ்வேருகக் கூறப்படுதலை ஸ்ரீ மாதவச்சிவ ஞானயோகிகள் உரையானுணர்க. இதய கமலாசனத்தி

ளியல்பு சிவஞானசித்தியார் 9-ஆம் சூத்திரத்து''நாட்டுமிதயந் தானும்'' என்னும் திருவிருத்தத்தானும், உடலப்பதும பீடிகையின் இயல்பு ,'மலமெனும் தடத்திற் கருமசேதகத் தின்'' என்னும் உலகுடையநாயனர் கழிநெடிலானும் நன் கறியப்படும் என்க. அக்கமலமுகை வாழைப்பூப்போலக் கீழ் நோக்கியுள்ளது. அதனை உபதேச முறையால் மேல்நோக்கி அலர்த்தி அதில் சிவத்தைக் காண்பர். ஆகலின், சிவத்தைக் 'கனி'யென உருவகம் செய்தார். வழுதலை கத்தரிச் செடியி லோர் பேத மென்பர். 'வித்தொன்றிட மற்றொன்று முளைத் தது' என்பது பழமொழி.

27 **வாழை பழுத்துக் கிடக்குது வையகம்**
**வாழையைச் சூழத் தாழ்கோத்து நிற்குது**
**தாழைத் திறந்து கனியுண்ண மாட்டாதார்**
**தாழம் பழத்துக்குத் தள்ளுண்ட வாறே.**

—......

—என்பது:— வாழைக்கும் நிராமய பூரண த்துக்கும் உவமை ஒன்றே: விபரம் எந்தப்படி? என்றால், வாழை பரிபக்குவத்தில் பழமானாற்போலவே நிராமய பூரணமும் முன்னிய நினைவில் வளமை சிறந் திருக்கையினாலே 'வாழை பழுத்துக் கிடக்குது வையகம்' என்னும் சத்தத்துக்கு விபரம். வாழை யாகிய நிராமய பூரணத்தில் ஆத்மவர்க்கம் விசாரமில் லாமல் வேற்றுமைப் புத்தியைக் கொண்டிருக்கை யினாலே வாழையைச் சூழத் தாழ்கோத்து நிற்குது' என்னும் சத்தத்துக்கு விபரம் காரணகுரு முன்னிலையாக நிராமய பூரணத்தில் விசாரித்துக்

கொள்ளாதவர்க்கு இருவினைச் செனனம் ஒழியாது; ஆகையினாலே, 'தாழைத்திறந்து கனியுண்ண மாட்டாதார்—தாழம் பழத்துக்குத் தள்ளுண்டவாறே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ—ள்) வையகம் வாழை பழுத்துக்கிடக்குது—உலகத்திலே (சிதாகாசமாகிய குகையினுள்ளே) வாழைப்பழம் ஆகிய சிவப்பொருள் (முற்றுங்) கனிந்து பூரணமாயுள்ளது, வாழையை சூழ தாழ் கோத்து நிற்குது — அவ்வாழைப்பழம் ஆகிய சிவப்பொருளை அறிந்து அநுபவிக்க வொட்டாமல் தாழ்க்கோல் ஆகிய மும்மலக்கொத்து சுற்றுமுற்றெல்லாம் நன்றாகக் கோக்கப்பட்டுள்ளது, தாழை திறந்து கனி உண்ண மாட்டாதார் — அத்தாழ்க்கோலாகிய மும்மலக்கொத்தை (ஞானசாரியருடைய அநுக்கிரகத்தினால் பெற்ற சிவஞானமாகிய திறவு கோலைக்கொண்டு) திறந்து (சிதாகாசகுகையினுள்ளே பூரணமாகக் கனிந்து கிடக்கும் சிவப்பொருளாகிய) வாழைப்பழத்தை (நுகர்ந்து பேரானந்தமாகிய தேனை) உண்ணமாட்டாதவர், தாழம்பழத்துக்குத் தள்ளுண்டவாறு —(சிவானந்தமாகிய தேனொழுக முற்றுங்கனிந்து விளங்கும் சிவமாகிய வாழைப்பழம் நிறைந்திருக்கவும், அதனை விடுத்துச் சிற்றின்பமாகிய சுவையை அனுபவிக்கும் முயற்சி) பயனொன்றுமில்லாத தாழம்பழத்தை யுண்ணப்பெரிதும் முயற்சித்து ஒருவன் தள்ளாடித் திரியும் நிலையோடொக்கும் என்றவாறு.

இம்மந்திரம், சிவப்பொருளை வாழைக்கனியாக உருவகம் செய்துள்ளது: சிற்றின்ப நுகர்ச்சியில் ஈடுபட்டு உழல்பவரை நோக்கி இது கூறியபடியாம்.

இனி, ஸ்ரீமாணிக்கவாசகசுவாமிகள் அருளிய திருவாசகம் – திருக்கோத்தும்பியில் இக்கருத்துப்பட "தினைத்தனை உள்ளதோர் பூவினில் தேன் உண்ணாதே – நினைத்தொறும் காண்டொறும் பேசுந்தொறும் எப்போதும்–அனைத்தெலும்பு உள்நெக ஆனந்தத் தேன் சொரியும் – குனிப்புடையானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ" என அருளிய கருணையும் சிந்தித்தற்குரியது. திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரத்திலே அருளிய "மனிதர்காள்! இங்கே வம் மொன்று சொல்லுகேன் – கனிதந்தாற் கனியுண்ணவும் வல்லிரே, புனிதன் பொற்கழல் ஈசன் எனும்கனி – இனிது சாலவும் ஏசற்றவர்கட்கே" என்னும் தனித் திருக்குறுந்தொகையில் இறைவனைக் கனியாக உருவகம் செய்யப்பட்டுள்ளமையும் காண்க.

**28 கள்ள வழியில் விழுந்த விளாங்கனி**
**கொள்ளச்சென் றைவரும் குழியில் விழுந்தனர்**
**தெள்ளிய ஞானி தெளிவுறக் கண்டபின்**
**பிள்ளைக ளைவரும் பிதற்றொழிந் தாரே.**

—......

–என்பது :—கள்ளவழியாவது மாயை. விபரம் எந்தப்படி? என்றால், மாயை தலைவனைச் சேராமையினாலே மாயைக்குக் 'கள்ளவழி' என்னும் பெயருண்டாச்சுது. தன்மாத்திரை மோசவர்க்கம். ஆகையினாலே, மோசவர்க்கமாகிய தன்மாத்திரை விடயத்துக்கு 'விளாங்கனி' என்னும் நாமம் உண்டாச்சுது. ஆகையினாலே முன் சொன்ன மாயையி னிடத்தில் விளாங்கனியாகிய தன்மாத்திரை விடயம் தோற்றுகையினாலே 'கள்ள வழியில் விழுந்த விளாங்கனி' என்னும்

சத்தத்துக்கு விபரம். பொறி யஞ்சும் அறியாமல் மாயாசம்பந்தமாகிய தன் மாத்திரை விடய சுகத்தை... இருந்தபடியினலே 'கொள்ளச் சென்றைவரும் குழியில் விழுந்தனர்' என்னும் சத்தத்துக்கு விபரம். ஆகையினலே, சீவாத்மா விசாரித்துக் காரணகுரு கைகாட்டும்படியே தலைவனைக் கண்டபடியினலே 'தெள்ளிய ஞானி தெளிவுறக் கண்டபின்' என்னும் சத்தத்துக்கு விபரம். தலைவனைக் கண்டபின் பொறியஞ்சும் பொய் ஆகையினலே 'பிள்ளைகள் ஐவரும் பிதற்றொழிந்தாரே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ–ள்) கள்ள வழியில் விழுந்த விளா கனி–கள்ளவழியாகிய மாயைவழியில் விழுந்து கிடக்கும் விளாங்கனியாகிய தன்மாத்திரைகளை, கொள்ள சென்று ஐவரும் குழியில் விழுந்தனர் – இந்திரியங்கள் (ஆகிய பிள்ளைகள்) ஐவரும் அதனை நுகரக்கருதிக் கவரச்சென்றமையால் (கருக்) குழியிலேயே விழுந்து (துன்புற்றுக்) கிடக்கின்றனர் (அந்தோ!), தெள்ளிய ஞானி – (தவத்தானும் தியானத்தானும் எல்லாப்பொருளையும் அறிந்து) தெளிந்தஞானிகள், தெளிவு உற கண்டபின்– (ஆசாரிய ரனுக்கிரகம் செய்த சிவஞானமே கண்ணகக் கொண்டு அத்துவிதநிலையைக்) களங்கமின்றிக் கண்டுணர்ந்த பின்பு, பிள்ளைகள் ஐவரும் பிதற்று ஒழிந்தார் எ–(ஐம்பொறிகளாகிய) ஐந்து பிள்ளைகளும் (பொய்ம்மையாகிய மாயாவிலாசத்தை யெல்லாம் மெய் மெய் எனக் கொண்டு பிதற்றியிருந்த) பிதற்று தலைவிட்டு நீங்கினர் என்றவாறு.

சன்மார்க்கமல்லாத எல்லாம் புன்மார்க்கம் ஆகலின் அதனைக் 'கள்ளவழி' என்றருளினர். "புன்னெறியதனிற்

செல்லும் போக்கினை யொழிந்து மேலாம்—நன்னெறி யொழுகச் செய்து'' எனக் கந்தபுராணத்து அருளிச் செய்தமையும் காண்க. பதியை யடையும் மார்க்கமே சன்மார்க்கமாம். மாயையால் தன்மாத்திரைகள் ஐந்தும் இன்பமாகத் தோன்றும். மாயையைக் 'கள்ளவழி' என்றும், தன்மாத்திரைகளை 'விளாங்கனி' என்றும் உருவகம் செய்தருளினர். பிள்ளைகளாகிய பஞ்சேந்திரியங்கள் விடயங்களாகிய பொருள்களைத் தேடிக்கவர்ந்து பிதாவாகிய ஆன்மாவுக்குத் தருதலின் அவைகளைப்'பிள்ளைகள்' என்றதும் உருவகம். சிவஞானத்தாலன்றிப் பாசஞான பசுஞானங்களால் பதியை அடைய முடியாது. ஆகலின், 'தெள்ளியஞானி தெளிவுறக் கண்டபின்' என்றருளினர். இதனை, ''பாசஞா னத்தாலும் பசுஞானத் தாலும் பார்ப்பரிய பரம்பரனைப் பதிஞானத் தாலே—நேசமொடு முள்ளத்தே நாடிப் பாத நீழற்கீழ் நில்லாதே நீங்கிப் போதின்—ஆசைதரு முலகமெலாம் அலகைத் தேராமென் றறிந்தகல அந்நிலையே யாகும் பின்னும்—ஓசைதரும் அஞ்செழுத்தை விதிப்படியுச் சரிக்க உள்ளத்தே புகுந்தளிப்ப னூனமெலா மோட.'' என்னும் சிவஞானசித்தித் திருவிருத்தத்தாலறிக.

**29 எழுதாத பொத்தகத் தெழுத்தின் பயனைத்**
**தெருளாத கன்னி தெளிந்திருந் தோத**
**மலராத பூவின் மருவின மணத்தைப்**
**பிறவாத வண்டு மணமுண்ட வாறே.**

—2885.

—என்பது:-- எழுதாத பொத்தகமாவது சித்து: விபரம் எந்தப்படி? என்றால், கண்ணாரு எழுதப்படும், கண்ணொளி எழுதப்படாது; அது

போலவே, சித்திரம் எழுதப்படும்: பிராணனை எழுதப் படாது; அதுபோலச் சித்து எழுதப்படாது. ஆகையினாலே, 'எழுதாத பொத்தகம்' என்னும் நாமம் உண்டாச்சுது எழுதாத பொத்தகமாகிய சிவத்துடன் பாலின்கண் நெய் இருந்தாற்போலவே தலையெழுத்தாகிய தலைவன் இருந்தபடியினாலே தலைவனுக்கு 'எழுதாத பொத்தகத் தெழுத்து' என்னும் நாமம் உண்டாச்சுது. தெருளாத கன்னியாவது ஞானசத்தி. விபரம் எந்தப் படி? என்றால், ஞானசத்திக்கு அஞ்ஞானமாகிய தீட்டில்லாமல் இளமையுண்டாகையினாலே ஞானசத்திக்குத் 'தெருளாத கன்னி' என்னும் நாமம் உண்டாச்சுது 'தெருளாத கன்னியாகிய ஞானசத்தி—எழுதாத பொத்தக வெழுத்தின் பயனைத் – தெருளாத கன்னி தெளிந்திருந் தோத' என்னும் சத்தத்துக்கு விபரம். மலராத பூவாவது சீவாத்மா. விபரம் எந்தப்படி? என்றால், சீவாத்மாவுக்கு ஆத்மஞானம் இல்லாதபடியினாலே 'மலராதபூ' என்னும் நாமம் உண்டாச்சுது. ஆகையினாலே மலராதபூவாகிய சீவாத்மாவுடன் பாலின்கண் நெய் இருந்தாற்போலவே மருவியிருந்தபடியினாலே தலைவனுக்கு 'மலராத பூவின் மணம், என்னும் நாமம் உண்டாச்சுது. பிறவாத வண்டாவது சத்தினிபாத விவேகம். ஆகையினாலே, சத்தினிபாத விவேகம் ஆகிய வண்டு 'மலராத பூவின் மருவின மணத்தைப் பிறவாத வண்டு மணமுண்டவாறே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ-ள்) எழுதாத பொத்தகத்து எழுத்தின் பயனை —(வரிவடிவில் எழுதப்பட்டிருக்கும் பொத்தகத்தில் உள்ள கலைஞானத்தின் பயனைப்போல) எழுதப்படாத பொத்தகத்தெழுத்தாகிய சிவஞானத்தின் பயனாகவுள்ள பதிப்பொருளை, தெருளாத கன்னி — (சிவஞானிகளா லன்றித்) தெளிந்து கொள்ள மாட்டாத கன்னியாகிய திருவருட்சத்தி, தெளிந்திருந்து ஓத—அநுக்கிரகம் பண்ண மலராத பூவில் மருவின மணத்தை—மலராத பூவாகிய ஆன்மாவின் இதய கமலத்தில் (ஆசாரியர் உபதேசத்தால்) பொருந்த விளங்கித் தோன்றும் மணமாகிய சிவபரம்பொருளை, பிறவாத வண்டு — இனிப் பிறவியில் வாராத சிவஞானிகளாகிய வண்டுகள், மணம் உண்ட ஆறே—அறிந்து சிவபோகத்தை நுகர்ந்து சிவானந்தப் பெருவாழ்விலே வாழும்படி இஃதாம் என்றவாறு.

ஞானசாரியருடைய அனுக்கிரகத்தால் கிடைத்த உபதேசத்தைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து நிட்டைகூட வரும் சிவஞானத்தால் அடையும் பயன் சிவபரம் பொருளுடன் ஆன்மா இரண்டறக் கலந்து சிவபோகத்தைக் நுகர்தலே ஆகலின்'எழுதாத பொத்தகத்து எழுத்தின் பயன்'என அருளிச் செய்தார். இருவினையொப்பு மலபரிபாகத்தால் சத்திநிபாதம் உண்டாக இறைவனே குரு வடிவில் எழுந்தருளிக் காட்சி தந்து திருவடி தீட்சை பண்ணி உபதேசித்தருளுவர் ஆகலின் அதனை உணர்த்த 'தெருளாத கன்னி தெளிந்திருந்து ஓத' என்றருளினர். ஆன்மாவை மலராத பூவாகவும், சிவத்தை மருவின மணமாகவும், சிவஞானிகளைப் பிறவாத வண்டாகவும் இம்மந்திரத்தில் உருவகம் செய்யப் பட்டுள்ளமை காண்க. திருவருட் சத்தியின் துணைகொண்டன்றிச் சிவத்தை அடைதல் கூடாது என்பதைப் பட்டினத்

தடிகள் "தாயுடனேசென்று தாதையைக் கூடிப்பின் றாயை மறந்—தேயுமதேநிட்டை" என்றருளிச் செய்தமை காண்க.

30 இருட்டறை மூலை யிருந்த குமரி
குருட்டுக் கிழவனைக் கூடல் குறித்துக்
குருட்டினை நீக்கிக் குணமுதல் காட்டி
மருட்டி யவனை மணம்புணர்ந் தாளே.
—1514.

—என்பது:— இருட்டாவது 'மாயை' விபரம் எந்தப்படி? என்றால், குருட்டுக் கிழவன் ஆகிய சீவாத்மாவைக் கரைகாணவொட்டாமல் மறைத்திருந்தபடியினாலே மாயைக்கு 'இருட்டு' என்னும் நாமம் உண்டாச்சுது. அறையாவது ஆணவ மலம்: விபரம் எந்தப்படி? என்றால், ஆணவமலம் மாயையையுட்கொண்டு தான் மாயைக்குக் காரணமாகக் கூடியபடியினாலே ஆணவமலத்துக்கு 'இருட்டறை' என்னும் நாமம் உண்டாச்சுது மூலையாவது நிராமய பூரணம்: விபரம் எந்தப்படி? பென்றால், வாக்கும் வடிவும் முடிவும் நிராமய பூரணத்துக்கு இல்லாதபடியினாலே நிராமயபூரணத்துக்கு 'மூலை, என்னும் நாமம் உண்டாச்சுது. மூலையாகிய நிராமய பூரணத்தில் இருட்டறையாகிய ஆணவமலம் இல்லாத படியினாலே 'இருட்டறை மூலை, என்னும் நாமம் உண்டாச்சுது மூலையாகிய நிராமய பூரணத்தில் இருட்டறையாகிய ஆணவமலம் இல்லாத படியினாலே 'இருட்டறை மூலை, என்னும் சத்தத்துக்கு விபரம். மூலையாகிய பூரணத்தில் பொன்

னும் மாற்றம் வேற்றுமை இல்லாதது போலவே குமரியாகிய சிற்சத்தி மருவியிருந்து குருட்டுக் கிழவனாகிய சீவான்மாவுக்கு மூலையாகிய நிராமய பூரணத்தில் சீவன் முத்தி கொடுக்கவேண்டித்தான் குருவடிவு கொண்ட படியினாலே 'இருட்டறை மூலையிருந்த குமரி—குருட்டுக் கிழவனைக் கூடல் குறித்து' என்னும் சத்தத்துக்கு விபரம். குருவடிவு கொண்டு குருட்டுக் கிழவனாகிய சீவாத்மாவுக்கு இருட்டறையாகிய ஆணவமலத்தைப் பொய்யெனப் படுத்திக் கர்ப்பூரமும் சோதியும் கலந்தாற்போலவே மூலையாகிய நிராமய பூரணத்தில் ஐக்கிய பதம் கொடுத்தபடியினாலே 'குருட்டினை நீக்கிக் குண முதல் காட்டி—மருட்டி யவனை மணம் புணர்ந்தாளே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ—ள்) இருட்டு அறை மூலை இருந்த குமரி—மாயையைக் கடந்து அதற்கு அப்பால் உள்ள முழுமுதற் கடவுளாகிய சிவப்பொருளுடன் பூவண்ணம் பூவின் மணம் போலப் பிரிப்பின்றி இருந்த திருவருட்சத்தி, குருடு கிழவனை கூடல் குறித்து—அநாதியாயுள்ள ஆணவ மலத்தால் மறைப்புண்டு சிவத்தைக்காண இயலாமல் உள்ள ஆன்மாவை (முத்தியளித்தருளுமாறு) சார்தல் கருதி, குருட்டினை நீக்கி — ஆணவமல சத்தியின் வலிகெடச்செய்து, குணமுதல் காட்டி மருட்டி— காட்டும் உபகாரம் முதலிய தன்னுண்மைகளை அறிவித்து (மும்மலச்சேட்டைகள் மீட்டும் பற்றாமல் தன் வசத்திலேயே அழுந்தி நிற்குமாறு) மயக்கி, மணம் புணர்ந்தாள் எ—(இருவினையொப்பு மலபரிபாக முற்ற) அவ்வான்மாவைச் சார்ந்தாள் என்றவாறு.

இம்மந்திரம் சத்திநிபாத நிகழ்ச்சியைக் கூறியபடி. இருட்டறை என்றது மாயையை; மூலை என்றது மாயையைக் கடந்து அப்பால் உள்ளதாகிய சிவமுதலை. திருவருட்சத்தி பதிதலால் சிவஞானம் விளைந்து தோன்ற மற்றொருபற்றின்றிச் சிவமுதலும் ஆன்மாவும் ஞாயிற்றின் ஒளியும் கண்ணொளியும்போல அத்துவித நிலையையுறும். இதனை, "மிக்கதொரு பக்குவத்தின் மிகுசத்திநி பாதம் மேவுதலும் ஞானம்விளைந்தோர்குருவி னருளால்— புக்கநட்டித் தேநிட்டை புரிந்துளோர்கள் பூதலத்திற் புகழ்சீவன் முத்த ராகித்—தக்கபிரியாப்பிரிய மின்றி யோட்டில் தபனியத்தில் சமபுத்தி பண்ணிச் சங் கரனை—டொக்கவுறைந் திவரவனை யவனிவரை விடாதே யுடந்தையாய்ச் சிவன்தோற்ற மொன்றுமே காண்பர்" எனவரும் சிவஞான சித்தியார் எட்டாம் சூத்திரம் இருபத்தொன்பதாம் திருவிருத்தத்தாலறிக.

31 ஆமா றறிந்தேன் அகத்தின் அரும்பொருள்
போமா றறிந்தேன் புகுமாறும் ஈதென்றே
ஏமாப்ப தில்லை இனியோர் இடரில்லை
நாமா முதல்வனும் நாமென லாமே.

—2846.

—என்பது:— பாலின்கண் நெய்யிருந்தாற்போலவே காயத்துட் பொருளைக்காரணகுரு முன்னிலையாக அறிந்து கர்ப்பூரமும் சோதியும்கலந்தாற்போலவே ஐக்கியபதம் பெற்றபின் பெற்றபொருள் தான் ஆகையினாலே 'ஆமாறறிந்தேன் அகத்தினரும் பொருள்— போமா றறிந்தேன் புகுமாறும் ஈதென்றே—ஏமாப்ப

தில்லை இனிமேயார் இடரில்லை நாமா முதல்வனும் நா மெனலாமே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ-ள்) போமாறு அறிந்தேன் – (ஞானசாரியனுடைய அநுக்கிரகத்தினால் பாசங்கள் எல்லாம் என்னைவிட்டுப்) போகும் நெறியையுணர்ந்தேன், புகும் ஆறும் ஈது என்றே— (திருவருளிலே) சென்றுசேரும் சன்மார்க்கமும் இதுவே (ஆம்)என்று (சிந்தித்துத்தெளிந்து), அகத்தின் அரும்பொருள் ஆம் ஆறு அறிந்தேன் — உயிர்க்குயிராக நின்று உபகரிக்கும் காண்டற்கரிய (பேரொளிப்பிழம்பாகிய) சிவப்பொருளை (சிவ ஞானமே கண்ணாகக் கொண்டு கண்டு) தியானித்து (சிவ போகத்தை நுகர்ந்து சிவமாந்தன்மைப் பெருவாழ்வை)அடை யும் ஞானநெறியையும் (நன்கு) உணர்ந்தேன், (ஆதலால்) இனி ஏமாப்பது இல்லை ஓர் இடர் இல்லை – இனிமேல் நான் அவாவுற்றுப் பெறக்கடவதாகிய பேறுகள் இல்லை அவ்வவா வினால் வரக்கடவதாகிய இன்பதுன்பங்களும் இல்லையாம், (எனவே) நாம் ஆம் முதல்வனும் நாம் எனலாம் ஏ – (அங்ங னம் உணர்ந்தமையால்) சிவோகம்பாவனையாலே நம்மில்வேறு தலின்றிப்பிறிவரிய சுத்தாத்துவிதமாய்த்தோன்றி விளங்கும் முழுமுதற்பரம்பொருளும் முத்திக்காலத்து (அத்துவிதக்கலப் பினால்) நாமே எனச்சொல்லும்படி உள்ளதாம் என்றவாறு.

ஞானசாரியனுடைய அநுக்கிரகத்தால் சரியை கிரியை களையநுட்டித்துச், சிவயோகத்தின் உறைத்துநின்று பெற்ற சிவஞானத்தால், சிவோகம் பாவனை செய்யும் ஆன்மாத்தன் னில் வேறுதலின்றி விளங்கித் தோன்றும் சிவபரம்பொருள் அத்துவிதக்கலப்பால் முத்திக்காலத்து இரண்டற நிற்கும் நிலையில் 'நாம்' எனக்கூறும்படி உள்ளதாம் என்றபடி. கண்ண

பிரான் உபமன்னியுமுனிவர் பால் சிவதீக்கையுற்றுத்தன்னையுந்தலைவனையும் உணர்ந்து சிவோகம் பாவனையிற்றலைப்பட்டோன் ஆதலைத் "தமியேன் உளம்புகுதல்—யானே யுலகென்பன் இன்று" (சிவஞானபோதம் இரண்டாம் சூத்திரத்து 'அரக்கொடு சேர்த்தி') என்னும் உதாரண வெண்பாவானும், ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள் அருளிய உரையானும் அறிந்து தெளிக.

32 மனத்தி லிருந்த மதிவா ளுருவி
இனத்தினை நீக்கி இரண்டற வீசி
நினைத்த விடத்தே நிலைபெறு மாகில்
அனைத்துயிர்க் கெல்லாம் அதிபதி யாமே.
—1638.

—என்பது:— பாலின்கண் நெய்யிருந்தாற்போலவே சத்திநிபாத விவேக மனத்துடன் மருவி அறியப்படாமலிருந்து மோசன காலத்துக்குத் தான் முன்னிலையாகையினாலே 'மனத்திலிருந்த மதிவாளுருவி' என்னும் சத்தத்துக்கு விபரம். சத்திநிபாத முன்னிலையாக மனாதிகரணமுதல் தத்துவம் முப்பத்தாறும் பொய்யாகையினாலே 'இனத்தினைநீக்கி' என்னும் சத்தத்துக்கு விபரம். இருவினையாகிய புண்ணிய பாவம் ஒக்கப் பொய் ஆகையினாலே 'இரண்டறவீசி' என்னும் சத்தத்துக்கு விபரம். சீவாத்மா காரணகுருகை காட்டும்படியே நிலைமையாகிய பூரணத்தில் கர்ப்பூரமும் சோதியும் கலந்தாற்போலவே ஐக்கியபதம் பெற்றபடியினாலே 'நினைத்த விடத்தே நிலைபெறுமாகில் அனைத்

துயிர்க் கெல்லாம் அதிபதியாமே’ என்னும் சத்தத் துக்கு விபரம் என்க

(இ-ள்) மனத்தில் இருந்த மதி வாள் உருவி — மனத் துடன் இருந்த அறிவு என்னும் வாளாயுதத்தைப் பிரகாசம் செய்வித்து, இனத்தினை நீக்கி — இனமாகிய முப்பத்தாறு தத்துவக்கூட்டங்களையும் முறையே கண்டுகழித்து, இரண்டு அற வீசி — ஆணவ கன்மங்களைக் கெடுத்து, நினைத்த இடத்தே நிலைபெறும் ஆகில் — கருதிய இடமாகிய பூரணப் பொருளிடத்தே அத்துவித நிலையைப் பெற்றிருக்கக் கூடு மாயின், அனைத்து உயிர்க்கு எல்லாம் அதிபதி ஆம் — (அவ் வான்மா) எல்லாவுயிர்களுக்கும் அதிபதியாகிய அப்பூரண சிவமாவன் என்றவாறு.

மனத்தில் என்பதில் உள்ள இல் உருபை ஒடுவுருபாக் குக. ‘இனத்தினை நீக்கி’ என இவ்வாசிரியர் கூறியதுபோலவே சிவஞானசித்தியாரில் 9-ஆம் சூத்திரம் மூன்றும் அதிகாணத் தும் “கண்ட இவை அல்லேன் நான் என்றகன்று” என அருளிச்செய்தமையும் காண்க. ஆம் என்பது செய்யும் என்னும் வாய்பாட்டு முற்றுச்சொல். சிவஞானத்தாலே தத்துவங்களையறிந்து, நியதி கழித்து, ஆணவ கன்மங்களை நீக்கானுயின் ஆன்மா சிவமாந்தன்மைப் பெருவாழ்வடைய மாட்டான் என்க.

**33 உலையொக்கக் கொல்லன் ஊதும் துருத்திபோல்**
**கலையொக்கப் பாயும் கருத்தறிவா ரில்லை**
**கலையொக்கப் பாயும் கருத்தறி வாளர்க்கு**
**நிலையொக்கச் சீவன் நிறுத்தலும் ஆமே.**

—......

— என்பது: — உலையாவது வன்னியின் இருப்பிடம். ஆகையினாலே வன்னியிருக்கும் உலையொக்கக் கொல்லன் இருந்து துருத்தியில் வாயுவை வாங்கி முன்னேக்கி நடத்துகிறப்போலவே காயப்பையாகிய துருத்தியில் பிராணவாயுவை வாங்கி இருபத்தோராயிரத்து அறுநூறு சுவாசம் நடத்துகிற கலையாகிய பொருளை அறியாமல் சரநூல் வழியே நடந்து பெரியோர்கள் பேறிழந்தார். ஆகையினாலே "உலையொக்கக் கொல்லன் ஊதும் துருத்திபோல் — கலையொக்கப் பாயும் கருத்தறிவார் இல்லை' என்னும் சத்தத்துக்கு விபரம். காரண குரு கை காட்டும்படியே கலையாகிய பூரணத்தில் கர்ப்பூரமும் சோதியும் கலந்தாற்போலவே ஐக்கியபதம் பெற்றவருக்கு இருவினைப்பிறவி நோய் நீங்கி யிருந்தபடியேயிருந்தார் ஆகையினாலே'கலையொக்கப்பாயும் கருத்தறிவாளர்க்கு — நிலையொக்கச் சீவன் நிறுத்தலும் ஆமே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ-ள்) கொல்லன் உலை ஒக்க ஊதும் துருத்திபோல்— கொல்லனுடைய உலைக்களத்திலே சமமாக ஊதப்படும் துருத்திகளிலே மாறி மாறி இயங்கும் வாயுக்களைப்போல, கலை ஒக்க பாயும் கருத்து அறிவார் இல்லை — இடைகலை பிங்கலைகளிலே மாறி மாறி ஒக்க இயங்கும் பிராணவாயுவின் (சுவாசங்களின்) தாற்பரியத்தை விசாரித்துணர்கின்றோர் மிக அரியர், கலை ஒக்க பாயும் கருத்து அறிவாளர்க்கு — பிராணவாயுவைப் பூரித்துச் சுழுமுனைவழியே செலுத்தும் தாற்பரியத்தை (சிவாசயோகத்திலே உறைத்துநிற்கும்

உம்மைப் புண்ணியத்தால்) உணர்ந்து அங்ஙனம் குருவருளால் நிற்கவல்ல சிவயோகிகளுக்கு, சீவன் நிலை ஒக்க நிறுத்தலும் ஆம் ஏ – சீவனை நிலைப்பொருளாகிய சிவப்பொருளுடன் அத்துவித நிலையிலே கலந்து நின்று அநுபவித்தல் கைகூடும் என்றவாறு.

இடைகலை பிங்கலை என்பன கலை என முதற்குறைந்து நின்றன. சிவயோக நிலையாகிய சகமார்க்கத்தியல்பு கூறுவது இத்திருமந்திரப்பாட்டு இதனை, "சகமார்க்கம் புலனொடுக்கித் தடுத்துவளி யிரண்டும் சலிப்பற்று முச்சதுர முதலாதாரங்கள் — அகமார்க்க மறிந்தவற்றின் அரும்பொருள்கள் உணர்ந்தங் கணைந்துபோய் மேலேறி அலர்மதிமண்டலத்தின் — முகமார்க்க அமுதுடலம் முட்டத் தேக்கி முழுச்சோதி நினைந்திருத்தல் முதலாக வினைகள் — உகமார்க்க அட்டாங்க யோகமுற்றும் உழத்தலுழன் றவர்சிவன்றன் உருவத்தைப் பெறுவர்" எனச் சிவஞானசித்தியார் சுபக்கம் எட்டாம் சூத்திரத்து 21-ஆம் திருவிருத்தத்தால் அறிக. "பேசிருபத் தோராயிரத்து அறுநூறு உயிர்ப்பினைப் பிரித்து அசபையின் — மாசறும் ஆனை முகப்பிரான் முதலோர் மகிழ்வுறும்படி அவர்க்குதவி" எனக் காஞ்சிப்புராணம் சனற்குமாரப்படலம்-18-ஆம் செய்யுளும் உணர்த்தும். விநாயகாகவல் முதலியவற்றிலும் இந்நிலை கூறப்படும். விரிந்தநூல்களிற் காண்க.

34 துரிய மிருப்பது சாக்கிரத் துள்ளே
நரிகள் பதினலும் நஞ்சுண்டு செத்தன
பரிய புரவியும் பாரிற் பரந்தது
துரிய மிருந்திடம் சொல்லவொண் ணதே.
—2159.

— என்பது :— துரியமாவது சீவாத்மா; சாக்கிரமாவது நிராமய பூரணம்: விபரம் எந்தப்படி ? என்றால், நிராமயபூரணம் இராப்பகல் இல்லாமல் நிரந்தரமாய் விழுங்கியிருந்தபடியினாலே நிராமயத்துக்குச் 'சாக்கிரம்' என்னும் பேருண்டாச்சுது. ஆகையினாலே, துரியமாகிய சீவாத்மா நீருடன் நீர்க்குமிழி வேற்றுமையில்லாமல் இருந்தாற்போலவே நிராமய சாக்கிரத்தை மருவியிருந்தபடியினாலே 'துரியமிருப்பது சாக்கிரத்துள்ளே' என்னும் சத்தத்துக்கு விபரம். துரியமாகிய சீவாத்மா சத்திநிபாத விவேகத்தைக்கொண்டு விசாரிக்குமளவில் சோத்திராதி ஞானேந்திரியம் அஞ்சும், வாக்காதி கன்மேந்திரியம் அஞ்சும், மனாதி அந்தக்கரணம் நாலும் பொய் ஆகையினாலே 'நரிகள் பதினாலும் நஞ்சுண்டு செத்தன' என்னும் சத்தத்துக்கு விபரம். உளமாகிய ஆங்காரம் ஒக்கப் பொய் ஆகையினாலே 'பரியபுரவியும் பாரிற்பறந்தது' என்னும் சத்தத்துக்கு விபரம். துரியம் ஆகிய சீவாத்மா காரணகுரு கைகாட்டும்படியே சாக்கிரம் ஆகிய நிராமயபூரணத்தில் கர்ப்பூரமும் சோதியும் கலந்தாற்போலவே ரகசியபதம் பெற்றபடியினாலே 'துரியமிருந்திடம் சொல்லவொண்ணாதே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ—ள்) துரியம் இருப்பது சாக்கிரத்து உள்ளே— துரியப்பொருள் ஆகிய சிவம் சாக்கிரப்பொருள் ஆகிய ஆன்மாவினுள்ளே (உயிருக்குயிராக) விளங்குவதாம், (ஞானசாரியருடைய அநுக்கிரகத்தால் அதனைச் சிந்தித்துணர்ந்தார்க்கு)

நரிகள் பதினலும் நஞ்சுண்டு செத்தன — (வஞ்சகத்தைச் செய்து திரியும்) நரிகளாகிய ஞானேந்திரியங்கள்—5, கன்மேந் திரியங்கள்—5, அந்தக்கரணங்கள்—4 என்னும் பதினலும் தஞ்செயல் மறப்பாகிய நஞ்சைப்புசித்து இறந்தொழிந்தன, பரிய புரவியும் — பெரிய குதிரையாகிய ஆன்மபோதமும், பாரில் பறந்தது — உலகில் பற்றறத் தொலைந்தது, துரியம் இருந்திடம் சொல்ல ஒண்ணுது ஏ — மேலே கூறிய துரியப் பொருளாகிய சிவம் இருக்கும் இடத்தை "அவனருளே கண்ணுகக் காணி னல்லாமல்" இவ்விடம் என்று சொல்ல முடியாதாம் என்றவாறு.

துரியம் என்பது சுத்தநிலை. 'ஞானசாரியருடைய அநுக்கிரகத்தால் அதனைச் சிந்தித்துணர்ந்தார்க்கு' என்பதை இசையெச்சமாகக் கொண்டுரைக்க. எல்லாக்கருவிகளோடும் கூடிநின்று அறியும் நிலை சாக்கிரம். வஞ்சனையைச்செய்து ஆன்மாவை அலைத்திழுத்துப் பிறவிக்குழியில் கொண்டு தள்ளுதலால் அப் பதினன்கையும் நரிகள் என்றருளினர். அகங்காரம் மேவிட்டுச் செல்வதாகவின் ஆன்மபோதம் புரவி எனக் குறிக்கப்பட்டுள்ளது. நரிகள், புரவி என்பன உருவகம். பறந்தது செத்தன என்று இறந்த காலத்தாற் கூறியது துணிவுபற்றி என்க. நஞ்சுண்டு செத்தன என்பதற்கு 'நைந்து கெட்டொழிந்தன' எனினுமாம். நைந்து — பதனழிந்து: பயனின்றி என்றவாறு. இனி, சிவாசயோகம் கைவாராதோருக்கு அது பெறும் உபாயங் கூறியவிடத்து சிவஞானசித்தியார் சூத்திரம்—8, செய்யுள்—34ல் அருளியது வருமாறு:—"இங்நிலைதா னில்லையேல்"...... "துன்னியசாக் கிரமதனில் துரியாதீதம் தோன்ற முயல் சிவாநுபவம் சுவாநுபூதிகமாம்" என்றமையும் சிந்தித்தற்குரியது. சகல

சாக்கிரத்திலேயே நின்மல துரியாதீத நிலை கைகூடும்படி குருவருள் பெற்று முயல்க எனக் குறிப்பித்தபடி.

**35 மாணிக்க மாலை மலர்ந்தெழு மண்டலம்**
**ஆணிப்பொன் னின்றங் கமுதம் விளைந்தது**
**பேணிக்கொண் டுண்டார் பிறப்பற் றிருந்தார்**
**ஊனுக் கிருந்தார் உணராத மாக்களே.**

—2064.

—என்பது:— மாணிக்கமாலையாவது நிராமய பூரணம். மாணிக்க முதல் மற்றவை எல்லா அண்டத்தையும் தாங்கியிருக்கையினாலே நிராமயபூரணத்துக்கு 'மாணிக்கமாலை மலர்ந்தெழுமண்டலம்' என்னும் சத்தத்துக்கு விபரம். மாணிக்கமாலையாகிய ஞான அமிர்தம் தோற்றுகையினாலே 'ஆணிப் பொன்னின்றங் கமுதம் விளைந்தது' என்னும் சத்தத்துக்கு விபரம். காரண குரு கைகாட்டும்படியே சதானந்தவாரியாகிய ஞான அமிர்தம் மெய்க்கொண்டார்க்கு இருவினைச் செனனம் ஒழிந்தபடியினாலே 'பேணிக்கொண்டார் பிறப்பற்றிருந் தார்' என்னும் சத்தத்துக்கு விபரம். மற்றவர் மயங்கி மாயாசமுசாரத்தை மருவியிருந்தபடியினாலே 'ஊனுக் கிருந்தார் உணராத மாக்களே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ—ள்) மாணிக்க மாலை மலர்ந்து எழு மண்டலம் — உலகிலே விரிந்து தோன்றும் ஒளியாகிய சிவம் என்னும் மாணிக்க மாலையானது, ஆணிப்பொன் நின்று அங்கு அமுதம்

விளைந்தது—ஆன்மா ஆகிய (மாற்றுயர்ந்த) ஆணிப்பொற்ற கட்டிலே (பதிக்கப்பெற்றுத்) தங்கிநிற்க அவ்விடத்திலே (பேரொளியாகிய) பேரின்பம் பெருகியது, பேணிக்கொண்டு உண்டார் பிறப்பு அற்று இருந்தார் — அப்பேரின்பத்தை விரும்பி(க் குருவருளினாலே அறியு முறையால் அறிந்து போற்றி) அநுபவித்தவரே பிறப்பிறப்பினை நீங்கியிருந்தவராவார், ஊணுக்கு இருந்தார் உணராத மாக்களே — (அப் பேரின்பத்தைக் குருவருளால் அறிந்து போற்றி அநுபவித்து) உணராத விலங்குணர்ச்சியோடு கூடியவர்கள் (காலங்கள் வீணே கழிய) உண்டுண்டு (உறங்குதற்பொருட்டே உடற்பொறையோடு) இருந்தவராவார் (அவர் பிறப் பிறப்பினின்று என்றும் நீங்கார்) என்றவாறு.

''காலமுண்டாகவே காதல்செய்து உய்ம்மின்'' என்பது ஸ்ரீமாணிக்கவாசகசுவாமிகள் அருளிச்செயல். மாணிக்கத்தை மாற்றுயர்ந்த பொற்றகட்டிலே வைத்திழைத்துப் போற்றுதல் அழகாம்; அதுபோல, சிவத்தை ஆன்மாவிற் கண்டறிவதே சிறந்தஅறிவாம் என்க. இது புறத்தும் அகத்தும் சிவம் தோன்றும் நிலை கூறியதென உய்த்துணர்க. மாணிக்கமாலை, ஆணிப்பொன், அமுதம் என்பன உருவகம். பேரொளிமயமான சிவமாகிய மாணிக்கத்தை அறிந்து அகத்துவைத்துப் போற்றாமல் மாணிக்கமாகிய கல்லைப் புறத்துப் பூண்டு திரியும் புல்லரை நோக்கிக் கூறியது இம்மந்திரம் என்பது கருதத்தக்கது. ஆணிப்பொன் உரையாணிக்கமைந்த தங்கம். அமுதம் பேரின்ப முத்தி.

**36 ஒன்றே கலப்பை யுழவெரு தஞ்சுண்டு**
**ஒன்றைவிட் டொன்று உழன்று திரியாது**

ஒன்றைவிட் டொன்றை உழுதுண்ண வல்லாருக்
கன்றுநட் டன்றே யறுக்கலு மாமே.

—......

—என்பது:- ஒன்றாவது மனம். உழவு எருது அஞ்சாவது புலனாதிகள் ஐந்து மாயையினாலே...... 'ஒன்றே கலப்பை உழவெருது அஞ்சுண்டு' என்னும் சத்தத்துக்கு விபரம். புலனாதிகள் அஞ்சும் தலைவனை விசாரித்துக் கொள்ளாமல் மனத்துடன் கூடி மாயா சம்பந்தமாகிய சமுசாரத்தை மருவியிருந்தபடியினாலே 'ஒன்றை விட்டொன்று உழன்று திரியாது' என்னும் சத்தத்துக்கு விபரம் ஆகையினாலே சீவாத்மா விசாரித்துக்கொண்டு ஒன்றாகிய மனத்தையும் புலனாதிகள் அஞ்சையும் பொய் எனக்கண்டு காரணகுருகைகாட்டும் படியே ஒன்றாகிய தலைவனுடன் கற்பூரமும் சோதியும் கலந்தாற்போலவே ரகசியபதம் பெற்றபின் இருவினைச் செனனம் நீங்கினபடியினாலே ஒன்றை விட்டொன்றை உழுதுண்ண வல்லாருக்கு— அன்று நட்டன்றே அறுக்கலுமாமே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ—ள்) ஒன்றே கலப்பை — மனமாகிய கலப்பை ஒன்றே (உண்டு ஆயினும்) உழவு எருது அஞ்சு உண்டு—அக் கலப்பையால் உ[illegible]வதற்குப் பஞ்சேந்திரியங்கள் ஆகிய எருதுகள் ஐந்[illegible]ன, ஒன்றை விட்டு ஒன்று உழன்று திரியாது — அவ்வொன்றாகிய மனக்கலப்பையைவிட்டுநீங்கி (அப்பஞ் சேந்திரியங்களாகிய எருதுகளில்) ஒன்றாயினும் தனித்து (ப்பந்தமாகிய சேற்றிலேபட்டு அழுந்தி) வருந்தித்திரிய

மாட்டாது, (அவ்வைந்தெருதுகளும் மனக்கலப்பையைத்தாம் விரும்பிய இடங்களுக்கெல்லாம் இழுத்துச்சென்று ஆன்மா வாகிய உழவனைப் பந்தமாகிய சேற்றிலே அகப்படுத்தி மீள வொட்டாமல் செய்யும் பட்டிகளாம்: ஆகலின்) ஒன்றை விட்டு — அவ்வொன்றாகிய மனக்கலப்பையை (ப்பட்டி எருது களாகிய பஞ்சேந்திரியங்களின்று) மீட்டு, ஒன்றை உழுது உண்ண வல்லாருக்கு—ஒன்றாகிய பதி எனப்படும் (நன்செய்) நிலத்தை அறிதலாகிய சிவவுழவைச் செய்து (அதனால் விளையும் பெரும்பயனாகியபேரின்பம்என்னும் சிவபோகத்தை) நுகரவல்ல (ஆன்மாக்களாகிய) உழவர்களுக்கு, அன்று நட்டு அன்றே அறுக்கலும் ஆம் — (உரியகாலத்திலே உழுது விதைத்துப் பயிரிட்டுச் சிலகாலஞ்சென்று விளைந்தவிளைவை அறுத்து உண்பது போலன்றி) அப்பொழுதே நட்டு அறுத்துப் பயன் கொள்ளுதலும் ஆம் என்றவாறு.

அறிதலாகிய உழவினைச் செய்யும் கசிந்த தொண்டர்களாகிய உழவர்கள் நடுதலாவது அப்பதிப்பொருளுடன் அழுந்தி நிற்றல். விளைவாவது சிவானந்த விளைவு, சிவபோகம் அந்தக்கரணம் நான்கனுள் முன்னே மனத்தின் தொழில் நிகழ்வதுபற்றி அதனைக் 'கலப்பை' என உருவகம் செய்தருளினர். கலப்பை, எருது என்பன உருவகம். எகாரம் இரண்டனுள் முன்னையது பிரிநிலை, பின்னையது தேற்றம். குற்றுகரங்கள் திரியாது நின்றன. வல்லார் என்றது அருமை நோக்கி என்க.

37 ஊறும் அருவி உயர்கரை உச்சியில்
ஆறன்றிப் பாயும் அருங்குளம் ஒன்றுண்டு
சேறன்றிப் பூக்கும் செழுங்கொடித் தாமரைப்
பூவன்றிச் சூடான் புரிசடை யோனே. —......

—என்பது:— ஊறும் அருவியாகிய சோத்திர ஞான இந்திரியத்துக்குச் சித்துப்பொது ஆகையினாலே சித்துக்கு 'ஊறும் அருவி உயர் கரை உச்சி' என்னும் என்னும் நாமம் உண்டாச்சுது. ஆகையினாலே உச்சி யாகிய சித்துடன் பாலின்கண் நெய்யிருந்தாற்போலவே சதானந்தவாரியிலிருந்த சீவாத்மாவுக்கு மேன் மேலும் நகையும் உல்லாசமும் நடத்துகையினாலே 'ஊறும் அருவி யுயர்கரை உச்சியில்— ஆறன்றிப் பாயும் அருங் குளம் ஒன்றுண்டு' என்னும் சத்தத்துக்கு விபரம். ஆனந்தவாரியில் சத்திநிபாத விவேகம் தோற்றுகை யினாலே 'சேறன்றிப் பூக்கும் செழுங்கொடித்தாமரை' என்னும் சத்தத்துக்கு விபரம். சீவாத்மா சத்திநி பாதவிவேகத்தைக்கொண்டு காரணகுருகைகாட்டும்படி யே நீரும் நீர்க்குமிழியும் கலந்தாற்போலவே பதியுடன் ரகசிய பதம் பெற்றபடியினாலே 'பூவன்றிச் சூடான் புரிசடையோனே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ—ள்) ஊறும் அருவி உயர் கரை உச்சியில் — பரந்து திரியும் அருவியாகிய இந்திரியங்களுக்கு எட்டாது மேல் உள்ள இடத்திலே, ஆறு அன்றி பாயும் அரு குளம் ஒன்று உண்டு — (தனக்கு வருவாய் ஆகிய) நதியின்றி (த் தனது கருணை வெள்ளமே எல்லா உயிர்ப்பயிர்களுக்கும்) சென்று பாயத்தக்க (திருவருட்சத்தியாகிய) அரிய குளம் ஒன்று உள்ளதாம், சேறு அன்றி பூக்கும் செழு கொடி தாமரை — மாயையாகிய சேற்றினது சம்பந்தமின்றிச் சதானந்தம் ஆகிய வளப்பமுடைய கொடித்தாமரை மலராநிற்கும். (ஆகலின்) பூ அன்றி சூடான் புரி சடையோன் ஏ — கட்டமைந்த சடை

யினையுடைய சிவபிரான் அப்பூவையன்றி வேறு மலரை அணியமாட்டான் என்றவாறு.

அப்பூவை அறிந்து சூடும் சிவஞானிகளே சிவமாந்தன்மைப் பெருவாழ்வடைவார் என்பது குறிப்பெச்சம்.

இங்கே வரையுச்சி புருவநடு; தாமரை — சுழுமுனை முடிவிலுள்ள ஆயிரவிதழ்க்கமலம் என்க.

38 வேராணி யற்று விளைந்த வித்தின்மரம்
பாராணி எங்கும் பரந்தே யிருக்குது
தேராணிக் குள்ளே தெளிவுற நோக்கிஞல்
ஓராணி யாக வுகந்திருந் தானே.

—......

—என்பது:— அடியும் முடியும் இல்லாத பூரணம் எல்லா வுலகுக்கும் தான் முன்னிலை யாகையினாலே 'வேராணியற்று விளைந்த வித்தின் மரம்' என்னும் சத்தத்துக்கு விபரம்: பாலின்கண் நெய் யிருந்தாற் போலவே யாவையுள்ளும் நிறைந்திருக்கையினாலே 'பாராணி எங்கும் பரந்தே இருக்குது' என்னும் சத்தத்துக்கு விபரம். தேராகிய உடலும் ஆணியாகிய சித்தறிவும் காரணகுரு கைகாட்டும்படியே அடியும் முடியும் இல்லாத பூரணத்தில் கர்ப்பூரமும் சோதியும் கலந்தாற்போலவே ரகசியம் ஆகையினாலே 'தேராணிக் குள்ளே தெளிவுறநோக்கிஞல் ஓராணியாக உகந்திருந் தானே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

39 தஞ்சாவூர்த் தட்டான் தலத்துக்கு நாயகம்
மஞ்சாடி கொள்ளான் வழக்கன்றி மன்றேறுன்
துஞ்சா னுறங்கான் தொழில்செய்யான் சோம்பி
அஞ்சாறு நாளைக் கவதியிட் டானே. [ரான்

—......

—என்பது:—தஞ்சாவூராவது காயம்: விபரம் எந்தப்படி? என்றால், தத்துவம் முப்பத்தாறும் உட்கொண்டிருக்கையினாலே காயத்துக்குத் 'தஞ்சாவூர்' என்னும் நாமம் உண்டாச்சுது. ஆகையினாலே, வாரியிற் சூரியன் தோயாதது போலவே தஞ்சாவூராகிய காயத்துடன் தலைவன் தோயாமையினாலே தலைவனுக்குத் 'தஞ்சாவூர்த் தட்டான்' என்னும் நாமமுண்டாச்சுது. தஞ்சாவூராகிய காயத்துக்குத் தலைவனுடைய ஆழியாகையினாலே 'தஞ்சாவூர்த்தட்டான் தலத்துக்கு நாயகம்' என்னும் சத்தத்துக்கு விபரம். சித்தறிவின் பயனை உட்கொள்ளாமையினாலே 'மஞ்சாடிகொள்ளான்' என்னும் சத்தத்துக்கு விபரம். ஐம்பத்தோரெழுத்தையும் உருப்படுத்தி அவ்வெழுத்திலே தான் வெளிப்படாமையினாலே 'வழக்கன்றி மன்றேறுன்' என்னும் சத்தத்துக்கு விபரம் தஞ்சாவூராகிய காயத்துடன் தான் அழியாமையினாலே 'துஞ்சான்' என்னும் சத்தத்துக்கு விபரம். மாயா மயக்கம் இல்லாமையினாலே 'உறங்கான்' என்னும் சத்தத்துக்கு விபரம். பஞ்சகிருத்தியம் நடத்தாமல் நடத்துகையினாலே 'தொழில் செய்யான் சோம்பிரான்' என்னும் சத்தத்துக்கு விபரம்.

பொறியஞ்சும் அஞ்சுடன் சீவாத்மாவுக்குச் செனன மரணம் உள்ளபடி நடத்துகையினாலே 'அஞ்சாறு நாளைக்கு அவதியிட்டானே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

**40 மத்தக மொத்த சிலந்தி வளையத்துள்**
**ஒத்தங் கிருந்து உயிருணும் வாறுபோல்**
**அத்தனும் ஐம்புலத் தாடகத் துள்ளிருந்து**
**சத்த முதலைந்தும் தானுண்ட வாறே.**

—......

—என்பது:—மத்தகமாவது வேற்றுமையிடம் வீடாகையினாலே மத்தகம் என்னும் சத்தத்துக்கு விபரம். மத்தகம் சிலந்தியை ஒத்திருந்தபடியினாலே 'மத்தக மொத்த சிலந்தி'என்னும் சத்தத்துக்கு விபரம். மத்தகம் வளையம் ஆகையினாலே 'மத்தக மொத்த சிலந்தி வளையம்' என்னும் சத்தத்துக்கு விபரம். மத்தகம் ஒத்த சிலந்தி உயிருண்ணுகையினாலே 'மத்தக மொத்த சிலந்தி வளையத்துள் ஒத்தங்கிருந்து உயிருண்ணும் வாறுபோல்' என்னும் சத்தத்துக்கு விபரம் ஐம்புலத்தாடகமாவது சித்து: விபரம் எந்தப்படி? என்றால், ஐம்புலனுக்கும் பொதுவகம் சித்து வீடாகையினாலே, ஐம்புலத்தாடகமாகிய சித்துடன் பாலின் கண் நெய்யிருந்தாற் போலவே அத்தனாகிய தலைவனிருந்து சத்தமுதல் தன்மாத்திரை விடயத்தைக் கொண்டிருக்கையினாலே 'அத்தனும் ஐம்புலத் தாடகத்துள்ளிருந்து—சத்தமுதல் ஐந்தும் தானுண்ட வாறே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

41 வெளியில் வெளியாய் விரவிய வாறும்
ஒளியில் ஒளியாய் ஒடுங்கிய வாறும்
அளியில் அளியாய் அடங்கிய வாறும்
தெளியும் அவரே சிவசித்த ராமே.

—124.

—என்பது:—வெளியில் வெளியாகிய பதியும், ஒளியில் ஒளியாகிய பசுவும், அளியில் அளியாகிய பாசமும் இவை மூன்றுக்கும் உவமை ஒன்றே: விபரம் எந்தப்படி? என்றால், வெளியாகிய விசும்பு கடங்கள் தோறும் கடாகாசம் என வேற்றுமைப் பேர் கொண்டிருந்து கடம் தகர்ந்தபோது வேற்றுமைப்பேரும் ஒக்கத் தகர்ந்து விசும்பு ஒன்றாய் இருந்தாற் போலவே பஞ்சமுகம் திரி நேத்திரம் காளகண்டம் சூலம் டமருகம் கபாலம்.... சுத்தமாயா வடிவுடன் .. சதாசிவன் என்னும் வேற்றுமைப்பேர் கொண்டிருந்து சங்காரத்தில் பஞ்சமுகம் திரிநேத்திரம் காளகண்டம் சூலம் டமருகம் கபாலம் . சுத்தமாயா வடிவு தகர்ந்தபோது சதாசிவன் என்னும் வேற்றுமைப் பேரும் ஒக்கத் தகர்ந்து மற்றும் பல கற்பனையும் அடையத் தகர்ந்து பின் வெளியில் வெளியாகிய பதி வெளியாகையினாலே 'வெளியில் வெளியாய் விரவிவாறு' என்னும் சத்தத்துக்கு விபரம். ஒளியில் ஒளியாகிய பசுவுக்குக் காரணகுரு பாசத்தை விடப்படுத்தி வெளியில் வெளியாகிய பதியுடன் கற்பூரமும் சோதியும் கலந்தாற் போலவே ரகசியபதம் படுத்துகையினாலே 'ஒளியில் ஒளியாய் ஒடுங்கியவாறு' என்னும் சத்தத்துக்கு விபரம்: ரகசியபதம் படுத்திய

பின் அளியில் அளியாகிய பாசம் பொய்யாகையினாலே 'அளியில் அளியாய் அடங்கியவாறும் தெளியுமவரே சிவசித்தர் ஆமே'என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

**42 சொன்னம் குகைமூன்று தானஞ்சு பச்சிலை**
**மின்ன அரைத்துவை வெள்ளிபொன் ஞயிடும்**
**வன்னம் பதியிந்த வாசிகொண் டூதிடில்**
**சொன்னம் வாஞ்சித்தொன்றுமென் சிந்தையே.**
**—......**

—என்பது:— சொன்னமும் சீவாத்மாவும் இவை இரண்டுக்கும் உவமை ஒன்றே: விபரம் எந்தப் படி? என்றால், சொன்னம் மாற்று முதுவை (?) யில்லாததுபோலவே சீவாத்மாவுக்கும் சீவன்முத்தியில்லாமையினாலே சீவாத்மாவுக்குச் 'சொன்னம்' எனப்பேர் உண்டாச்சுது. ஆகையினாலே, ஐம்பூத வடிவாகிய தூல தனுவும் சூக்கும புரியட்டகாயமும் சுழுத்தியாகிய காரண தனுவும் சொன்னமாகிய சீவாத்மாவுக்கு இருப்பிடம் ஆகையினாலே 'சொன்னம் குகை மூன்று' என்னும் சத்தத்துக்கு விபரம். முன்சொன்ன தனுத்திரயம் பஞ்சபூத வடிவாகையினாலே 'தானஞ்சு பச்சிலை' என்னும் சத்தத்துக்கு விபரம்: சொன்னமாகிய சீவாத்மா சத்திநிபாத விவேகத்தைக் கொண்டு மூவகைக் காய சம்பந்தம் பொய் எனத் தேர்ந்தபடியினாலே 'மின்ன அரைத்துவை வெள்ளிபொன் ஆயிடும்' என்னும் சத்தத்துக்கு விபரம். பொய் எனத் தேர்ந்தபின் சொன்

னமாகிய சீவாத்மா செவியில் சிவமாகிய பொருளைக் காரணகுரு உட்படுத்துகையினாலே 'வன்னம்பதி இந்த வாசி கொண்டு ஊதிடில்' என்னும் சத்தத்துக்கு விபரம். சொன்னமாகிய சீவாத்மா செவியில் சிவமாகிய பொருளைக் காரணகுரு உட்படுத்திய பின் சொன்னமாகிய சீவாத்மா கர்ப்பூரமும் சோதியும் கலந்தாற்போலவே பூரணம் ஆகையினாலே 'சொன்னம் வாஞ்சித்து ஒன்றும் என்சிந்தையே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ-ள்) சொன்னம் வாஞ்சித்து ஒன்றும் என் சிந்தையே—சுவர்னத்தைப் பெற விரும்பி அதற்குரிய சாதனங்களில் மிகப்பொருந்தி நிற்கும் என் மனமே! சொன்னம் குகை மூன்று — (மாற்றில்லாத பொன்னை மாற்றுயர்ந்த பொன்னாக்க வேண்டிக் குகையில் வைத்தூதுவது போல) சீவான்மா ஆகிய மாற்றில்லாத பொன்னை வைக்க மூவகை அவத்தைகளாகிய குகைமூன்றுஉள்ளன. தான் அஞ்சு பச்சிலை-அவற்றில் பஞ்சாக்கரம் என்று சொல்லப்படும் ஐந்துவகையான பச்சிலைகளையும் (ஞானசாரியனுடைய அருளினால்),மின்ன அரைத்து வை — விளங்க அரைத்துவைப்பாயாக. (ஈண்டு அரைத்து வைத்தல் என்பது மூவகை அவத்தையினும் நிற்குமுறைநின்று கணித்தல்) வன்னம் பதி — பொன்னிறம் ஆகிய திருவருட் சத்தியில் அழுந்திநிற்பாய். இந்த வாசிகொண்டு ஊதிடில்—உச்சுவாசம் நிச்சுவாசம் இரண்டையும் அடக்கிச் சுழுமுனையில் செலுத்துவாயாகில். வெள்ளி பொன் ஆயிடும்—ஆன்மாவாகிய வெள்ளி சிவப்பொருளாகிய பொன்னாகி விளங்கும் என்றவாறு.

மூவகை அவத்தையாவன — கேவலம், சகலம், சுத்தம் என்பன. அவத்தைகளில் ஐந்தெழுத்துக் கணிக்கு முறையும் வாசியை அடக்கும் முறையும் உபதேச முறையான் உணர்க. ''எவ்வெவகோட் பநுபொருளும் அஞ்செழுத்தி னடக்கியவற் றியல்பு காட்டி—மெய்வகையைத் தவத்தையினு நிற்குமுறை யோதுமுறை விளங்கத் தேற்றி — அவ்வெழுத்தி னுள்ளீடு மறிவித்துச் சிவபோகத் தழுத்தி''......எனச் ஸ்ரீமாதவச்சிவ ஞானயோகிகள் அருளிச்செய்ததமை காண்க. அன்பு மேலிட மேலிட அருள் பதியும்தன்மையுடையது. ஆதலால், அன்பு மேலிடுதலைச்கூறுவார் அதனுல் விளையும் அருள்பதிதலைக் குறித்து 'வன்னம்பதி' என்றார். சுவாசத்தைவீணேகழியாமல் அடக்குதல் இலாபம் ஆகையால் அச்சுவாசத்திற்கு 'வாசி' எனப்பெயர்கூறுவர். வன்னம் — சத்தி.

43 வெளியில் இரேகை ரேகைத் தலைச்சுழி
சுழியி லுகாரம் சுற்றிடும் வன்னி
தெளிதரு கால்கொம்பு நேர்விந்து நாதம்
தெளியு மவரே சிவசித்த ராமே.

—......

— என்பது :— நிராமயம் ஆகிப தனிவெளி தன் நினைவில் சித்து உதயம் ஆகையினுலே 'வெளியில் இரேகை' என்னும் சத்தத்துக்கு விபரம். ரேகையாகிய சித்துக்குத் தனித்தனிவெளி தலைவன் ஆகை யினுலே 'ரேகைத்தலைச்சுழி என்னும் சத்தத்துக்கு விபரம். ரேகையாகிய சித்தில் சீவாத்மா தோற்றுகை யினுலே 'சுழியில் உகாரம்' என்னும் சத்தத்துக்கு விபரம். சீவாத்மாவுக்கு உற்பத்தி திதி சங்கார சம்பந்

தம் இருந்தபடியினுலே 'சுற்றிடும் வன்னி' என்னும் சத்தத்துக்கு விபரம். இருவினை முன்னிலைபாகை யினுலே 'நெளிதரு கால்கொம்பு' என்னும் சத்தத் துக்கு விபரம். சீவாத்மா விசாரித்துக்கொண்டு காரணகுரு கைகாட்டும்படியே கர்ப்பூரமும் சோதியும் கலந்தாற்போலவே தனிவெளியாகிய தலைவனுடன் ரகசியபதம் பெற்றபடியினுலே 'நேர்விந்துநாதம் தெளியுமவரே சிவசித்தராமே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ-ள்) வெளியில் இரேகை—பரமாகாசத்திலே நீள மாகிய இரேகை ஒன்று தோன்றும். ரேகை தலை சுழி—அந்த ரேகைத்தலையிலே (வட்டமாகிய) சுழி ஒன்று தோன்றும். சுழியில் உகாரம் சுற்றிடும் வன்னி—அச்சுழியிலே வன்னரூபி ஆகிய சத்தியின் அக்கரம் என்று சொல்லப்படும் உகாரம் சுற்றி நிற்கும். நெளிதரு கால் கொம்பு நேர் விந்து நாதம்— (மேற்கூறிய ரேகையும் சுழியும்) நெளிகின்ற காலாகிய நீள் வடிவாகவும் கொம்பாகிய வட்டவடிவாகவும் எழுத நேரொத்தக்க நாதம் விந்து என்னும் பெயர் பெறும். தெளியும் அவரே சிவ சித்தர் ஆம் ஏ—இவ்விரண்டையும் அறிந்து தெளியுமவர்களே சிவயோகிகளாம் என்றவாறு.

நெளிதல் என்பது மேலேகிளர்தல். தெளிதல் என்பது அவை தோன்றும் முறையும் அவற்றுல் பிரபஞ்சகாரியம் ஆதலும் அறிந்து தெளிதல். நாதம் விந்து என மாற்றி யுரைக்க. சத்தி வன்னரூபியாயும் நிற்பதை 'தேசுறு வன்ன ரூபியாச் சிறந்த செல்வியை'' எனக் காஞ்சிப்புராணத்து சனற்குமாரப்படலம் கூறுதல் காண்க.

44 மாயனை நாடி மனனெடுந் தேரேறிப்
போயன நாடறி யாதே புலம்புவர்
தேயமும் நாடும் திரிந்தெங்கள் செல்வனைக்
காயநன் ஞட்டிடைக் கண்டறிந் தேனே,
—2982.

— என்பது :— மாயனாவது அநாதிதனியன்: விபரம் எந்தப்படி? என்றால், அநாதிதனியன் மாயைக் குத்தோற்றாமல் மாயைக்கு மாயன் ஆகையினாலே அநாதிதனியனுக்கு மாயன் என்னும் நாமம் உண்டாச் சுது. ஆகையினாலே மாயனாகிய அநாதிதனியன் பாலின் கண் நெய் இருந்தாற்போலவே காயத்துள் இருக்கை யினாலே சீவாத்மா விசாரம் இல்லாமல் மனமாயா நட மாகிய தீட்சையைப் பெற்றுக் கிரியாவதி ஒழியாமல் நடந்து காயத்துடன் கயிலாயபதம் பெற்றாலும் செய்த நல்வினையளவும்அநுபவம்தீராதபின் மற்றும் இருவினைச் செனனதுக்கம் ஒழியாதாகையினாலே 'மாயனைநாடி மன னெடுந்தேரேறிப் — போயனநாடறியாதே புலம்புவர்' என்னும் சத்தத்துக்கு விபரம். காரணகுரு சீவாத்மா வுக்குக் காயசம்பந்தம் ஆகிய தத்துவத்தை விடப் படுத்தி மாயனாகியதலைவனைக் கண்காட்டியபடியினாலே 'தேயமும் நாடும் திரிந்தெங்கள் செல்வனைக் — காய நன்ஞட்டிடைக் கண்டறிந்தேனே' என்னும் சத்தத் துக்கு விபரம் என்க.

(இ—ள்) மாயனை நாடி — பாலில் நெய்போல மறைந்து அந்தர்யாமியாய் இருக்கும் இறைவனைத்தேடி, மனன்

நெடுதேர் ஏறி—மனம் என்னும் பெரிய தேரில் ஏறி உலாவி, போய் அனநாடு அறியாதே புலம்புவர்—சென்று அத்தன்மை யான அவன் இருக்குமிடம் அறியாமல் பலவாறு பிதற்றுவர், தேயமும் நாடும் திரிந்து எங்கள் செல்வனை — பலநாடுகளி லும் பலநகரங்களிலும் (சென்று தேடித்)திரிந்து (அவனிருக் கும்தலம், தீர்த்தம், மூர்த்திகளைத் தரிசித்து முழுகி வாசம் செய்துறைந்து) தொழுது வாழ்த்தித் தியானித்திருந்தமை யால் எங்கள் செல்வமாகவுள்ள சிவபரம்பொருளை, காயம் நல் நாட்டிடை கண்டு அறிந்தேன் ஏ—சரீரமாகிய நல்லநாட்டின் கண்ணே கண்டறிந்தேன் என்றவாறு.

தலமாகியநாடு நகரங்களைக்கூறவே இனம்பற்றி மூர்த்தி யும் தீர்த்தமும் கொள்ளப்படும். எனவே, மூர்த்தி தலம் தீர்த்தம் முதலியவைகளை முறைப்படி தரிசித்தும், யாத்திரை செய்தும், முழுகியும் வருவோருக்குச் சிவபுண்ணியம் முதிர முதிர அப்புண்ணிய மிகுதியால் அவர் குருவருள் பெற்றுப் பரம்பொருளை அகத்தே சிந்தித்துணர்வார் என்பது கருத்து. இதனைத் தாயுமானவசுவாமிகள் ''மூர்த்தி தலந் தீர்த்தம் முறையால் தொடங்கினர்க்கோர்—வார்த்தைசொலச் சற்குரு வும் வாய்க்கும் பராபரமே.'' என அருளினர்கள். எங்கள் செல்வனை என்றது உயிர்ப்பன்மைகருதி. மனம் என்பது மனன் எனப்போலியாயிற்று. 'மனனடந்தேரேறி' என்றும் பாடம்: மனத்தேரேறிநடந்து எனப்பொருள் கொள்க.

45 **ஊமை எழுத்துடன் பேசும் எழுத்துறில்**
**ஆமை யகத்துடன் அஞ்சும் ஒடுங்கிடும்**
**ஊமைய மற்றது உள்ளொளி பெற்றது**
**நாமைய மற்றது நாமறி யோமே.**

—2158.

— என்பது :— தலைவனுக்கு வைகரிவாக்கும் வடிவும் இல்லாமையினலே 'ஊமை' என்னும் நாமம் உண்டாச்சுது. ஆகையினலே, ஊமையாகிய தலைவன் மேலும் தொலையாத தொகுதி அனைத்துக்கும் தலை எழுத்தாகையினலே தலைவனுக்கு 'ஊமை எழுத்து' என்னும் நாமம் உண்டாச்சுது. ஆகையினலே, பேசும் எழுத்தாகிய சீவாத்மா காரணகுரு கைகாட்டும்படியே நீரும் நீர்க்குமிழியும் கலந்தாற்போலவே ஊமை எழுத்துடன் ரகசியபதம் பெற்றபடியினலே 'ஊமை எழுத்துடன் பேசும் எழுத்துறில்' என்னும் சத்தத்துக்கு விபரம். பேசும் எழுத்துடன் ஐம்புலன் ஒடுக்கம் கூடுகையினலே 'ஆமை அகத்துடன் அஞ்சும் ஒடுங்கிடும்' என்னும் சத்தத்துக்கு விபரம். ஊமையாகிய பூரணம் முன்னிலைபாகையினலே 'உள்ளொளியாகிய பூரணத்தில் பேசும் எழுத்தாகிய சீவாத்மா......ஆகையினலே 'நாமைய மற்றது நாமறி யோமே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ-ள்) ஊமை எழுத்துடன் பேசும் எழுத்து உறில்— ஊமை (எழுத்தென்னும் பேசா) எழுத்தாகிய சிகாரமும், அதனுடன் பேசும் எழுத்தாகிய வகாரமும் (ஆகிய இவ்விரண்டு எழுத்துக்களும் அகத்தே இறண்டறவைத்துத்) தியானிக்க, ஆமை அகத்துடன் அஞ்சும் ஒடுங்கிடும் — ஆமையுள்ளே தோன்றும் அவயவம் ஒடுங்குமாறு போல (தன்னுள்ளே)பஞ்சேந்திரியங்களும் சேட்டையின்றி ஒடுங்கிவிடும், ஊமையம் அற்றது உள் ஒளி பெற்றது— மேற்கூறிய இரண்டெழுத்தும் ஆன்மாவினகத்தே பரஞ்சோதிவடிவாய் நிலை

பெற்றது, நாம் ஐயம் அற்றது நாம் அறியோம் ஏ — (அந்த நிலை கைவரப்பெற்றது. அதனைக் குருவருளால்) சந்தேக மறத் தெளிந்ததாம்; நாம் ஆகிய அகங்காரம் உள்ளளவும் (அதனைக்) கண்டறியோம் என்றவாறு.

பேசும் எழுத்தும் பேசாவெழுத்தும் என்பதனை—"அஞ் செழுத்தும் எட்டெழுத்தும் ஆறெழுத்தும் நாலெழுத்தும்— பிஞ்செழுத்தும் மேலைப் பெருவெழுத்தும் — நெஞ்சழுத்திப், பேசும் எழுத்துடனே பேசா எழுத்தினையும்—கூசாமற் காட் டக் கொடி" எனக் கொடிக்கவியிலே நாலாந்திருப்பாட்டாகச் சந்தான குரவருள் ஒருவராகிய ஸ்ரீ உமாபதிதேவ நாயனர் அருளிச்செய்தமை காண்க. இதற்கு இத்திருவாவடுதுறை ஆதீனத்து உரைநோக்கியும் உணர்க. ஐந்தும் கூறவே இனம் பற்றி ஏனைய கருவிகளையும் கொள்க. ஒடுங்கிடும் எனவே பேரின்பவிளைவு கூறுதே அமைதல் பெற்ரும். இனி,சுருங்கச் சொல்லல் என்னும் அழகு பற்றி 'சிவோகம் பாவனைக்குரிய சாதனம்' முதலடியிலும், அதனல் 'எய்தும்பயன்' இரண்டாம் அடியிலும், அச்சாதனத்தால் எய்தும் 'பொருளியல்பு' மூன் ரும் அடியிலும்,சாத்தியத்தை அடைந்த சிவானுபவம் அதனை அறிய மாட்டாதார் இயல்புகள் நான்காம் அடியிலும் அருளிச் செய்தமை சிந்திக்கத்தக்கது. 'ஆமை அகத்துடன் அஞ்சு மொடுங்கிடும்' என்பதை "ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக் கல் ஆற்றின்—எழுமையும் ஏமாப் புடைத்து" என்னும் திருக் குறள்(—126.) நோக்கியறிக.

இனி, ஊமை எழுத்து 'ம்' என்பாரும், பிரணவசொரூப மாகிய பஞ்சமை வாக்கு என்பாரும்; பேசும் எழுத்து — வைகரிவாக்கு என்பாரும், அ–உ (சத்தி சிவம்) என்பாரும்;

ஓமயம் நாமயம் எனப்பாடங்கொண்டு முறையே ஓம்மயம், தற்போதம் என்பாரும் சிலர் உளர்.

46 **உந்திக் கமலத் துதித்தெழுஞ் சோதியை**
**அந்தித்த வண்ணம் அறிவா லறிந்திலர்**
**அந்தித்த வண்ணம் அறிவா லறிந்தபின்**
**தந்தைக்கு முன்னே மகனிருந் தானே.**

—869.

—என்பது :—உந்தியாவது பொது: விபரம் எந்தப்படி? என்றால், எது எதுவாகிய அது அதுவுக்கு அது பொதுவாகையினாலே அதுவாகிய பொதுவுக்கு 'உந்தி' என்னும் நாமம் உண்டாச்சுது. உந்திக் கமலம் ஆகிய சித்தில் சீவாத்மா தோற்றுகையினாலே 'உந்திக் கமலத்து உதித்தெழுசோதி' என்னும் சத்தத்துக்கு விபரம். உதித்தெழு சோதியாகிய சீவாத்மா உந்தியாகிய தலைவனை அறியாமையினாலே 'உந்திக்கமலத்து உதித்தெழுசோதி அந்தித்தவண்ணம் அறிவால் அறிந்திலர்' என்னும் சத்தத்துக்கு விபரம். உதித்தெழு சோதியாகிய சீவாத்மா காரணகுரு கைகாட்டும்படியே உந்தியாகிய தலைவனை அறிவால் அறிந்தபடியினாலே 'அந்தித்தவண்ணம் அறிவால் அறிந்தபின்' என்னும் சத்தத்துக்கு விபரம். அறிவு முன்னிலையாக உந்தியாகிய தலைவனை அறிந்தபடியினாலே 'தந்தைக்கு முன்னே மகனிருந்தானே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ—ள்) உந்தி கமலத்து உதித்து எழும் சோதி ஐ— (குண்டலித்தானம் ஆகிய) உந்தித் தாமரையில் தோன்றி விளங்கும் பரஞ்சோதி வடிவினராகிய முதல்வன், அந்தித்த வண்ணம் அறிவால் அறிந்திலர்—(ஆன்மாவிலே) பொருந்தியிருக்கு மாற்றைச் சிவஞானத்தாலே (ஞானசாரியருடைய அநுக்கிரகத்தைப்பெறுதவர்) அறிந்தாரிலர், அந்தித்த வண்ணம் அறிவால் அறிந்தபின் (அவ்வாறு முதல்வன்) பொருந்தியிருக்கும் விதத்தை (ஞானசாரியருடைய அநுக்கிரகத்தைப் பெற்றுச்) சிவ்ஞானமே கண்ணுகக்கொண்டு சிந்தித்தறிந்த பின்பு, தந்தைக்கு முன்னே மகன் இருந்தான் ஏ—தந்தையாகிய பதியின் முன்னிலையில் மகனுகிய ஆன்மா (சிவோகம் பாவனையால் ஆன்மாவிலே சிவம் விளங்கித் தோன்ற அச் சிவத்துக்குமுன் சேடசேடிய பாவகத்தால் அடிமையாய் வியாபக வியாப்பியமாகு நிலையுணர்ந்து) சிவபோகத்தை நுகர்ந்திருந்தான் என்றவாறு.

பூசைத்தானம் ஓமத்தானம் தியானத்தானம் ஆகிய மூன்றனுள் உந்தி ஓமத்தானமாம் என்க. இதனை, "அஞ்செழுத்தால் உள்ளம் அரனுடைமை கண்டரனை — அஞ்செழுத்தால் அர்ச்சித் திதயத்தில் — அஞ்செழுத்தால், குண்டலியிற் செய்தோமம் கோதண்டம் சானிக்கில்—அண்டனும் சேடனும் அங்கு." என்னும் (சிவஞானபோதம்—9ஆம் சூத்திரம் மூன்றும் அதிகாரணத்து) உதாரண வெண்பாவா னுணர்க. அந்தித்தல் — பொருந்துதல், மகன் — விநாயகக்கடவுள் என்பர் சிலர்.

47 மண்டலத் துள்ளே மலர்ந்தெழு வாதித்தன்
பிண்டத்தி னுள்ளே பேரொளி யாயிடும்

**சென்றெடுத் திட்டுத்திசைதொறும் போய்வரும்**
**நின்றிடத் தேநிலை நேரறி யாரே.**

—1999.

— என்பது :— அகண்டபரிபூரணம் எல்லா அண்டத்தையும் உட்கொண்டிருந்தபடியினலே அகண்டபரிபூரணத்துக்கு 'மண்டலம்' என்னும் நாமம் உண்டாச்சுது. ஆகையினலே, மண்டலமாகிய பூரணத்தில் சத்திநிபாத விவேகமாகிய சித்து ஆதித்தன் உதயமாகையினலே 'மண்டலத்துள்ளே மலர்ந்தெழு வாதித்தன்' என்னும் சத்தத்துக்கு விபரம். சத்திநிபாத விவேகமாகிய சித்தாதித்தன் மண்டலத்தினுள்ளே பேரறிவாக விளங்குகையினலே 'பிண்டத்தினுள்ளே பேரொளியாயிடும்' என்னும் சத்தத்துக்கு விபரம். சத்திநிபாத விவேகம் ஆகிய சித்தாதித்தன்... திசையெட்டும் தன்னிடமாகையினலே 'சென்றெடுத் திட்டுத் திசைதொறும் போய்வரும்' என்னும் சத்தத்துக்கு விபரம். சத்திநிபாத விவேகம் ஆகிய சித்தாதித்தன் நிலையைக் காரணகுரு கைகாட்டும்படியே அறிவதல்லாமல் அறியாதார்க்கு அறியப்படாதாகையினலே 'நின்றிடத்தே நிலை நேரறியாரே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ—ள்) மண்டலத்து உள்ளே மலர்ந்து எழு ஆதித்தன் — அண்டமாகிய மண்டலத்தினுள்ளே அகண்டமாய் விரிந்தெழும் சோதியான பரம்பொருள், பிண்டத்தின் உள்ளே பேர் ஒளி ஆயிடும் — பிண்டமாகிய சரீரத்தினுள்

ளேயும் பெருஞ்சோதியாய் விளங்கித்தோன்றும், சென்று எடுத்திட்டு திசைதொறும் போய்வரும் — அது தன்னுள்ளே அநுக்கிரககுணத்தை எடுத்துச் திசைகளெல்லாம் வியாபக மாய் அநுக்கிரகத்தைச் செய்து வளராநிற்கும், நின்றிடத்தே நிலை நேர் அறியார் ஏ — இவ்வாறு வியாபகமாய் நின்று எவ்விடத்தும் அநுக்கிரகம் செய்து நிற்கும் நிலைமையை (அறிவில்லார்) அறியும் முறையாகிய நேர்மையைச் சிறிதும் அறியார் என்றவாறு.

சென்று, போய் எனக்கூட்டுக. சென்றுபோதல் என்பது வியாபகமாய் இருந்தாங்கு இருந்து எங்கும் நிகழ்வன வற்றை ஒருங்கே அறிதல் என்க. ஏ இரண்டும் அசைநிலை. வருதல் — வளர்தல்.

48 **ஆதித்த னோடி யடங்கும் தலமறிந்து**
**சாதிக்க வல்லவர் தம்மை யுணர்ந்தவர்**
**பேதித் துலகம் பிதற்றும் பிதற்றெலாம்**
**ஆதித்த னோடே அடங்கின வாறே.**

—1986.

— என்பது :— ஆதித்தனாவது சத்திநிபாத விவேகம். தலமாவது தலைவன். விபரம் எந்தப்படி ? என்றால், தலைவன் சராசரம் அனைத்தையும் தழுவாமல் தழுவி வாரி இடங்கொண்டிருந்த விசும்பு, வாரியில் தோயாததுபோல யாவையுள்ளும் தோயாமல் தான் பொதுவாயிருந்தபடியினாலே தலைவனுக்குத் ‘தலம்’ என்னும் நாமம் உண்டாச்சுது. ஆகையினாலே, சீவாத்மா ஆதித்தனாகிய சத்திநிபாத விவேகத்தைக்

கொண்டு காரணகுரு முன்னிலையாகப் பஞ்சபூதவடிவாகிய,தூலதனுவும் சூக்குமபுரியட்டகாயமும் சுழுத்தியாகிய காரணதனுவும்(ஆகிய)தனுத்திரய சம்பந்தமான தத்துவம் முப்பத்தாறையும் கடந்து ஆறுதாரத்தை ஊடுருவி ஐம்பத்தொரு நிலையைவிட்டு அஷ்டாங்க யோகமாகிய படியைப்பற்றி நடந்து ஆதியந்தமாகிய இருவினையைச் சாராமல் காலமும் கற்பனையும் கடந்த தலமாகிய தலைவனை அறிந்து கர்ப்பூரமும் சோதியும் கலந்தாற்போல ஐக்கியபதம் பெற்ற படியினாலே 'ஆதித்தனோடி அடங்கும்தலமறிந்து—சாதிக்கவல்லவர் தம்மை யுணர்ந்தவர்' என்னும் சத்தத்துக்கு விபரம். அண்டாதித்த நிரதமாகிய சிங்காசனத்திருந்து சக்கர வாளகிரி மேற்பத்தியைத் தொடர்ந்து மேரு வலம்வர மேரு சம்பந்தமான நிழல் இராத்திரியாகவும் ஆதித்தன் சம்பந்தமாகிய பிரகாசம் திவா சொரூபமாகவும் திவா ராத்திரியென்று இரு பயனைகவும் பூலோக சம்பந்தமாகிய ஆத்மவர்க்கம் தன்னையும் தலமாகிய தலைவனையும் அறியாமல் நடத்துகிற கிரியாவிதியெல்லாம் ஆதித்தன் உதயத்தில் நடந்து ஆதித்தன் மேரு மறைவாக இராத்திரியில் அந்தக் கிரியாவிதியெல்லாம் அழிந்தபடியினாலே 'பேதித்துலகம் பிதற்றும் பிதற்றெல்லாம் ஆதித்தனோடே அடங்கினவாறே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ—ள்) ஆதித்தன் ஓடி அடங்கும் தலம் அறிந்து — (சிவஞானம் ஆகிய) சூரியன், (இருவகைப்பற்றினையும் விட்டு)

ஓடி (ஞானசாரியருடைய அநுக்கிரகத்தினலே தத்துவ தாத்துவிக நிலைகளை உணர்ந்து) ஆன்மா ஒடுங்கிநிற்கும் இடமாகிய பதியை அறிந்து, சாதிக்கவல்லவர் — (சிவோகம் பாவனை செய்து முறைப்படி) சாதிக்கவல்ல பெரியோர்களே, தம்மை உணர்ந்தவர் — தம்மை அறிந்தவராவார், பேதித்து உலகம் பிதற்றும் பிதற்று எல்லாம் — (இவ்வாறன்றி) வேறுபடுத்து உலகத்தில் ஏனையோர் (தானம் முதலாகிய சாதனங்களால் எய்தும் பயன்களை மெய் என்று) பிதற்றுகின்ற முழக்காகிய ஆரவாரங்கள் எல்லாம், ஆதித்தனோடே அடங்கின வாறே — சூரியன் இயங்கி ஒடுங்குமாறு போல (ச்சிறுகாலையிலே உளபோலத்தோன்றி) ஒழியும் என்றவாறு.

ஆதித்தன் ஓடி அடங்கும் இடம் அறிந்து எனப்பாடம் கொண்டு சூரியகலை சந்திரகலையுடன் சென்றோடிச் சுழுமுனை வழியால் எய்தி ஒடுங்கும் தானத்தை அறிந்து எனக் கூறலுமாம் என்பர் பெரியோர்.

தானமுதலிய சாதனப்பயன் இவை என்பதை,—

" தானமியா கந்தீர்த்தம் ஆச்சிரமம் தவங்கள்
சாந்திவிர தம்கன்ம யோகங்கள் சரித்தோர்
ஈனமிலாச் சுவர்க்கம்பெற் றிமைப்பளவில் மீள்வர்
ஈசனியோ கக்கிரியா சரியையினில் நின்றோர்
ஊனமிலா முத்திபதம் பெற்றுலகம் எல்லாம்
ஒடுங்கும்போ தரன்முனிலா தொழியினுற்ப வித்து
ஞானநெறி யடைந்தடைவர் சிவனை யங்கு
நாதனே முன்னிற்கின் நணுகுவர்நற் றூளே. " என்னும்

சிவஞானசித்தியார் சுபக்கம் எட்டாம் சூத்திரத்து 25-ஆம் திருவிருத்தத்தானுணர்க.

49 முற்பதி னைந்தின் முளைத்துப் பெருத்திடும்
பிற்பதி னைந்தில் பெருத்துச் சிறுத்திடும்
அப்பதி னைந்தை அறியவல் லார்க்குச்
செப்பரி யான்கழல் சேறலு மாமே.

—......

— என்பது :— பசுவாகிய சீவாத்மாவுக்கும் சந்திரனுக்கும் உவமை ஒன்றே: விபரம் எந்தப்படி? என்றால், உற்பத்தி திதி சங்காரம் திரோபவம் அநுக்கிரகம் என்னும் பஞ்சகிருத்தியம் பொது ஆகையினாலே பஞ்சகிருத்தியத்துக்கு உள்ள விபரம் எந்தப்படி? என்றால், உற்பத்தி உற்பத்தி உற்பத்தி...சங்காரம் இவை மூன்றும் உற்பத்தி என்னும் சத்தத்துக்கு விபரம். சங்கார உற்பத்தி சங்காரத்திதி சங்காரசங்காரம் இவை மூன்றும் சங்காரம் என்னும் சத்தத்துக்கு விபரம். திதியில் உற்பத்தி திதியில்திதி திதியில் சங்காரம் இவை மூன்றும் திதி என்னும் சத்தத்துக்கு விபரம். ஆகையினாலே முன் சொன்ன பஞ்சகிருத்தியம் உள் விபரத்துக்குத் திரோபவம் அநுக்கிரகம் பொதுவாகையினாலே முற்பதினைஞ்சும் பிற்பதினைஞ்சும் அஞ்சஞ்சாச்சுது. ஆன்படியினாலே, பசுவாகிய சீவாத்மா முற்பதினைஞ்சில் சில முளைத்துப் பெருத்திடும்; பிற்பதினைஞ்சில் சில பெருத்துச் சிறுத்திடும். அப்பதினைஞ்சும் விந்து. காரணகுரு கைகாட்டும்படியே உற்பத்திமுதல் அநுக்கிரகம் ஈறாகப் பஞ்சகிருத்தியபாசத்தைப் பொய்

என உணர்ந்து தலைவனை அறியவல்லார்க்கு 'செப்பரி யான்கழல் சேறலு மாமே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ—ள்) சந்திரன்தோன்றிப்பூர்வபக்கத்தில் பதினைந்து திதியினும் ஒவ்வொரு கலையானது முறையே எய்தி வளரா நிற்கும்; அவ்வாறு வளர்ந்து சென்று அபரபக்கத்தில் பதினைந்து திதியினும் அக்கலைகள் பெருத்தவாறே வாவாச் சிறுகாநிற்கும். அப்பதினைந்தை அறியவல்லார்க்கு — அப் பதினைந்து கலைகளும் வளர்தல் தேய்தல்களுக்குக் காரணம் ஆகிய அப்பதினைந்து திதிகளும் காலதத்துவம் காரணமாகத் தோன்றியவை என்றறிய வல்லவர்களுக்கு, செப்ப அரியான் கழல் சேறலும் ஆம் ஏ — (காலாதீதனாகிய) வாக்கிறந்த பூரண சிவப்பொருளின் திருவருளை அடைதலும் கை கூடும் என்றவாறு.

திங்கள் தோன்றி வளர்ந்து தேய்தலின் குறிப்பை, "மாய்தலும் பிறத்தலும் வளர்ந்து வீங்கலும் — தேய்தலு முடைமையைத் திங்கள் செப்புமால்" என்று சீவகசிந்தாமணி முத்தியிலம்பகம் கூறும். தாயுமானவ அடிகள் – "மாதத்தி லேயொரு திங்களுண் டாகி மடிவதைநின், போதத்தி லே சற்றும் வைத்திலை யேவெறும் புன்மை நெஞ்சே" எனக் கூறியருளியமையும் காண்க.

50 உருவிலி ஊணிலி ஒன்று மொன்றிலி
திருவிலி தீதிலி தேவர்க்கும் தேவன்
பொருவிலி பூதப் படையுடை யாளி
மருவிலி வந்தென் மனம்புகுந் தானே.

— 2941.

— என்பது :- யாவையுள்ளும் பற்றில்லாத ஒருவனுக்குப் பற்றில்லாமையினாலே இல்லை என்னும் சத்தத்துக்கு விபரம். ஆகையினாலே, யாவையுள்ளும் பற்றில்லாத ஒருவன் பாலின்கண் நெய்யிருந்தாற் போலவே காரணகுரு கைகாட்டும்படியே தன்னிடமாயிருந்தபடியினாலே 'உருவிலி ஊணிலி ஒன்றும் ஒன்றிலி—திருவிலி தீதிலி தேவர்க்கும் தேவன்—பொருவிலி பூதப் படையுடை யாளி—மருவிலி வந்தென் மனம் புகுந்தானே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ—ள்) உரு இலி — உருவெல்லாம் கண்டிதப் பொருளாம்; ஆதலால், நம்மனோர்போல் ஒரு மாயாகாரிய உருவமில்லாதவன் (எனவே, திருவருளே திருமேனியாகவுடையான் என்றபடி); ஊண் இலி — நுகர்ச்சியில்லாதவன்; ஒன்றும் ஒன்று இலி—ஒருபொருளையும் பொருந்தாதவன்; திரு இலி தீது இலி—ஆக்கக் கேடுகள் உடைய திருவில்லாதவன்; தேவர்க்கும் தேவன் — 'ஆதியும் அந்தமும் இல்லா அரும்பொரு'ளாதலின் எல்லாக்கடவுளர்க்கும் தெய்வமாகவுள்ள மகாதேவன் என்னும் பேருடையான்; பொரு இலி — தன்னோடு ஒத்தபொருள் ஒன்றையுமில்லாதோன் ஆகலின் ஒப்பில்லாதவன், பூதம் படை உடையாளி—பூதப்படையுடையவன்; மருவஇலி—யாவருணர்வாலும் சென்று எட்டுதற்குப் பொருந்தாதவன்; வந்து என் மனம் புகுந்தான் ஏ—பேரருளுடையவனாகலின் தானே எளிவந்து என்மனத்துட்புகுந்தருளினன் என்றவாறு.

இஃது ஓர் வியப்பா யிருந்தவாறு என்னே! என்பது எஞ்சி நின்றது. 'அருளே திருமேனியாகவுடையான்' என்

பதனை, 'மாயைதான் மலத்தைப் பற்றி வருவதோர் வடிவ மாகும்—ஆயவா ணவம கன்ற அறிவொடு தொழிலை யார்க் கும் — நாயகன் எல்லா ஞானத் தொழில்முதல் நண்ண லாலே — காயமோ மாயையன்று காண்பது சத்திதன்னால்" எனவும், "உருவருள் குணங்களோடும் உணர்வருள் உருவில் தோன்றும் — கருமமும் அருள ரன்றன் காசர ணாதி சாங் கம் — தருமருள் உபாங்க மெல்லாம் தானருள் தனக்கொன் றின்றி — அருளுரு உயிருக்கென்றே ஆக்கினன் அசிந்தன் அன்றே" எனவும் வரும். (சிவஞானசித்தியார் முதற்சூத் திரம் செய்-41, 47) திருவிருத்தம் நோக்கியுணர்க. 'நுகர்ச்சி யிலாதோன்' என்பதனை, "வெறுப்பொடு விருப்புத் தன்பால் மேவுத லிலாமை யானும்" (சித்தி சூத்-1, செய்-45) என வரும் திருவிருத்தப்பகுதியால் உணர்க. 'விசுவாதிகன், விசுவகாரணன், விசுவாந்தர்யாமி, விசுவரூபி என வேதத் துள் கூறப்படினும் "இவற்றின் தன்மை தனக்கெய்தலின் றித் தானே — நிலவுசீர் அமலனாகி நின்றனன் நீங்கா தெங்கும்" என்னும் (சித்தியார் சூத்-2, செய்-1) வாக்குப் பற்றி 'ஒன்றும் ஒன்றிலி' என்பதனைத் தெளிக. இனி, "கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார்" எனத் திருவுளத் தடைத்துத் தன்னடியார்க்கு அருள்புரிவோன் இறைவனாக லின் 'திருவிலி தீதிலி' என்றருளினர். "உணர்ந்தார்க் குணர்வறியோன்" எனவும், "தெரியலா நிலையலாற் றெரி யாத அரிய காட்சியன் எனவும் வருவதுகொண்டு 'மருவிலி' என்பதன் பொருளறிக தெரியலாம் நிலையாவது" சிந்திக்கச் சிந்திக்கத் தர்ப்பணத்தை விளக்க வந்திடும் அவ் வொளி போல" என்க. 'உருவிலி ஊனிலி' என்பது பிரதிபேதம்: ஊனிலி என்பதற்கு மாயாரகிதன் எனவும், திரு விலி —

அழகிய மேருவை வில்லாகவுடையான் எனவும், மரு விலி — குற்றமில்லாதவன் எனவும் சிலர் பொருள்கூறுவர்.

51 **வாயு மனமும் கடந்த மனோன்மனி**
**பேயும் கணமும் பிறந்திட்ட பெண்பிள்ளை**
**ஆயும் அறிவைக் கடந்த அரனுக்குத்**
**தாயும் மகளும்நற் றாரமு மாமே.**

— 1178.

— என்பது :— மனோன்மனியாவது அபின்ன சத்தி: விபரம் எந்தப்படி ? என்றால், அபின்னசத்தி பொன்னும் மாற்றும்போலவே தலைவனை மருவி மறைதி முப்பத்தாறு தத்துவத்தையும் கடந்திருக்கையினாலே அபின்னசத்திக்கு 'மனோன்மனி' என்னும் நாமம் உண்டாச்சுது. ஆகையினாலே 'வாயும் மனமும் கடந்த மனோன்மனி' என்னும் சத்தத்துக்கு விபரம். பேயாதி கணம் ஈறாகச் சராசரம் அனைத்தும் தன்னிடமாகையினாலே 'பேயும் கணமும் பிறந்திட்ட பெண்பிள்ளை' என்னும் சத்தத்துக்கு விபரம். ஆயும் அறிவாகிய ஐம்பத்தோரெழுத்தையும் கடந்த தலைவனை விசாரித்துக்கொண்டு சிவம் எனப் பேரிட்ட பெற்றாள் ஆகையினாலே 'தாய்' என்னும் சத்தத்துக்கு விபரம். சிவன் முன்னிலை மனோன்மனி தோற்றம் ஆகையினாலே 'மகள்' என்னும் சத்தத்துக்கு விபரம் சிவசத்தியின் னை யோகத்தில் சராசரம் அனைத்தும் உற்பத்தியாகையினாலே 'நற்றாரமும் ஆம்' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ-ள்) வாயும் மனமும் கடந்த மனோன்மனி—வாக்கு மனோதீதமாய் (பூவண்ணம் பூவின்மணம் போலப் பிரியாமல் சிவத்துடன்) நின்ற மனோன்மனி சத்தி, பேயும் கணமும் பிறந்திட்ட பெண்பிள்ளை—பேய்களும் ஏனைச் சராசரங்களாகிய கூட்டங்களும்(ஆதாரமாய்க் கொண்டு நிற்க அவைகள்) பிறந்த இடமாகிய பெண்பிள்ளையானவள், ஆயும் அறிவை கடந்த ஆனுக்கு—ஆராய்கின்ற பாச அறிவு பசு அறிவுகளைக் கடந்து நின்ற 'அரன்' என்னும் திருநாமத்தையுடைய சிவபிரானுக்கு, தாயும் மகளும் நல் தாரமும் ஆம் ஏ—தாயாகியும் மகளாகியும் நல்ல மனைவியாகியும் ஆயினாள் என்றவாறு.

பேய்க்கணத்தைக் கூறவே ஏனைக்கணங்களும் அதனுள் அடங்கும் என்க. பிறந்த என்னும் பெயரெச்சத்து அகரவீறு தொக்கது. அரன்—உயிர்கட்குப் பாசங்களை அரிப்பவன். சத்திதத்துவத்தினின்றும் சதாசிவதத்துவம் தோன்றுதலின் 'தாய்' எனவும், சிவதத்துவத்தினின்று சத்திதத்துவம் தோன்றுதலின் 'மகள்' எனவும், 'போகியாயிருந்து உயிர்கட்குப் போகத்தைப் புரியுமாறு' சிவமும் சத்தியுமாக விளங்குதலின் 'தாரம்' எனவும் கூறியருளியமை காண்க. இதனை, "தவளத்த நீறணி யுந்தடந் தோளண்ணல் தன்னொருபால்—அவளத்த னுமக னுந்தில்லையான்"(திருக்கோ–112)எனவும், "இமவான் மகட்குத் தன்னுடைக் கேள்வன்மகன் றகப்பன்" (திருவாச–திருப்பொற்சு–13) எனவும் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் அருளிச்செய்தமை காண்க. "சிவஞ்சத்தி தன்னை யீன்றும் சத்திதான் சிவத்தை யீன்றும், உவந்திருவரும் புணர்ந்திங் குலகுயி ரெல்லா மீன்றும்" (சித்தியார் சூத்–2, செய்–77) எனவும், "கனகமார் கவின்செய் மன்றில் — அனக நாடகற் கெம்மன்னை — மனைவி தாய் தங்கை மகள்"

(சிதம்—செய்யுட்கோ—33) எனவும் வரும் திருவாக்குக்களான் உணர்க.

52 இருவர் இருந்திடம் எண்டிசை அண்டம்
அரிபிர மாதிகள் ஆரும் அறிந்திலர்
பரிதியும் சோமனும் பாருமும் மிடத்தே
சுருதி முடிந்திடம் சொல்லவொண் ணுதே.
—......

— என்பது :— இருவராவது சிவசத்தி. இடமாவது நிராமயபூரணம். விபரம் எந்தப்படி? என்ருல், நிராமயபூரணம் சிவசத்தியும் எண்டிசை யண்டமும் எண்பத்துநான்கு நூருயிரம் சீவாத்மாவும் கரணுதி முப்பத்தாறு தத்துவமும் மற்றுமுள்ள பலவித கற்பனையும் இவையெல்லாம் சித்திரவடிவமும் படமும் போலவே தன்னிடமாகக் கொண்டிருக்கையினுலே நிராமய பூரணத்துக்கு 'இடம்' என்னும் நாமம் உண்டாச்சுது. ஆகையினுலே, 'இருவர் இருந்திடம் எண்டிசை அண்டம்' என்னும் சத்தத்துக்கு விபரம். இடம் என்னும் பூரணத்தை அரிபிரமாதி அனேவோரும் தேராமையினுலே 'அரிபிரமாதிகளாருமறிந்திலர்' என்னும் சத்தத்துக்கு விபரம். நீருடன் நீர்க்குமிழியும் மருவிநடந்தாற்போலவே இடைபிங்கலே இவை இரண்டும் நிராமய பூரணத்தை மருவி நடக்கையினுலே 'பரிதியும் சோமனும் பாரும் இடத்தே' என்னும் சத்தத்துக்கு விபரம். ஆகையினுலே சுருதியாகிய சீவாத்மா விசாரித்துக் காரணகுரு கைகாட்டும்படியே கர்ப்பூரமும் சோதியும்

கலந்தாற்போலவே இடம் என்னும் பூரணத்தில் மருவி இரகசியபதம் பெற்றபடியினலே 'சுருதிமுடிந்திடம் சொல்லவொண்ணதே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ-ள்) இருவர் இருந்திடம் எண்திசை அண்டம் — சிவமும் சத்தியுமாகிய இருவரும் இருந்த இடம் யாதென வினவில் எண்டிசையோடு கூடிய அண்டமுழுவதுமாம்: (எனவே, அண்டத்தினுள்ளும்புறம்பும் ஆகிய எவ்விடத்தும் நிறைதலாம், அண்டபிண்டம் முழுவதுமாம் என்றபடி) அரி பிரமாதியர் ஆரும் அறிந்திலர்-(இவ்வாறு அண்டபிண்டமாகிய எங்கும் நிறைந்திருக்கும் சிவசத்திகளைச் சத்திநிபாத முறுமையால்) பிரமவிஷ்ணுக்கள் முதலிய பெருந்தேவரும் அறிந்தாரிலர், (ஆகலின்) உம்மிடத்தே பரிதியும் சோமனும் பாரும் –உம்மிடத்தே நடக்கும் பிங்கலை இடைகலை ஒடுங்கும் முறையை அறிந்து கண்டறியுங்கள், சுருதி முடிந்திடம்–(அதுவே) வேதாந்தமாகிய இடமாம், சொல்ல ஒண்ணது ஏ — (வாக்கிறந்த பூரணப்பொருள் ஆதலால் அப்பொருளை உணர்ந்தார் உணர்வதன்றி இவ்வாறென்று)சொல்ல எவர்க்கும் முடியாததொன்றாம் என்றவாறு.

ஏ – இரண்டும் அசை நிலை. 'அண்டங்களெல்லாம் அணுவாக அணுக்களெல்லாம், அண்டங் களாகப் பெரிதாய்ச் சிறிதாயி னனும், அண்டங்க ளுள்ளும் புறம்பும் கரியாயி னனும், அண்டங்கள் ஈன்றாள் துணை' என்றமை காண்க.

**53 வாழையைச் சூரை வலிந்திடங் கொண்டது**
**வாழைக்குச் சூரை வலிதுவலி தென்பார்**

**வாழையின்சூரையைவன்றுண்டம்செய்தக்கால்**
**வாழை யிடங்கொண்டு வாழலு மாமே.**
—2922.

— என்பது :— வாழையாவது சீவாத்மா: சூரையாவது ஆணவமலம்: விபரம் எந்தப்படி? என்றால், வாழையாகிய சீவாத்மாவைச் சூரையாகிய ஆணவ மலம் தொடர்ந்திருக்கையினாலே 'வாழையைச்சூரை வலிந்திடங்கொண்டது' என்னும் சத்தத்துக்கு விபரம். வாழையாகிய சீவாத்மாவைச் சூரையாகிய ஆணவமலம் மேலிட்டுச் சீவாத்மாவுக்கு விவேகம் தோன்றவொட்டாமல் மறைத்திருந்தபடியினாலே 'வாழைக்குச் சூரை வலிதுவலிதென்பர்' என்னும் சத்தத்துக்கு விபரம். வாழையாகிய சீவாத்மா சூரையாகிய ஆணவமலத்தைப் பொய்யெ [னப்பட்ட] படியினாலே 'வாழையின் சூரையை வன்றுண்டம் செய்தக்கால்' என்னும் சததத்துக்கு விபரம். சீவாத்மாவிடமாகக் காரணகுரு கை காட்டும்படியே இடமாகிய பூரணத்தை மெய்க்கொண் ......இருவினைச் செனனம் ஒழிந்தபடியினாலே 'வாழை இடங்கொண்டு வாழலுமாமே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ—ள்) வாழையாகிய ஆன்மாவைச் சூரையாகிய ஆணவ மலமானது (கண்விழியை மறைக்கும் இருள்போல அறிவை மறைத்து மூடுதலால்) தனக்கு இடமாகக்கொண்டது. (அவ்வாறு மறைக்கும் வலியுடைமையால்) இவ்வான்மாவினும் ஆணவமலம் பெரிதும் வலியுடையது என்பர். அவ்வினிய

வாழையாகிய ஆன்மா (குருவருள்பெற்றுச் சிவஞானமாகிய திருவருட்கருவியைக்கொண்டு) சூரையாகிய ஆணவமலத்தை வன்மையாகக் கூறுபடுத்திச் சிதைத்தால் அவ்வாழையாகிய ஆன்மாவானது சிவப்பொருளை ஆதாரமாகக்கொண்டு பேரானந்தப் பெருவாழ்விலே வாழ்தல் கை கூடும் என்றவாறு.

"கரிய ஆணவந் தேயுமா கலந்த நஞ்சத்தி, உரியதாஞ் சிவ புண்ணிய முடன்விரா யூட்டும், பெரிய வாட்கணுய் பின் மல பாகமாம் பின்னர், விரியும் சத்திநி பாதம்பின் வினை யொப்ப மேவும்" எனத்திருவானைக்காப்புராணத்து ஞானோபதேசப்படலத்தில் கூறியவாறு ஆணவமலம் திருவருளாலன்றி நீங்காதென்பது பெறப்படும் 'ஆணவமலம் வலிது வலிது' என்பார் இதனை "ஓங்கும் ஆணவத் தெறுழ்வலி யுரைப் பரிது" எனவும் அருளினர். ஆன்மாவை 'வாழை' எனவும், ஆணவமலத்தைச் 'சூரை' எனவும் உருவகம் செய்தருளினர்.

54 கோத்த கோவை குலையக் குருபரன்
சேர்த்த சேவடி சென்னியில் வைத்தொரு
வார்த்தை சொல்லி வழக்கறுத் தாண்டவன்
பார்த்த பார்வை பசுமரத் தாணியே.

—......

— என்பது :— ஆணவமலம் சீவாத்மாவைத் தொடர்ந்திருக்கையினலே காரணகுரு வந்து சீவாத்மாவுக்கு ஆக்ஞா தீட்சை என்னும் சேவடியைச் சென்னியில் வைத்து ஒருவார்த்தையினல் 'பொருள் இது' எனப்படுத்திக் காலன் அதிகாரம் கைவிட மாற்றினபின் பார்த்தவிடமெல்லாம் பரமாகத் தோற்றுகையினலே

**'கோத்த கோவை குலைபக் குருபரன் —சேர்த்த சேவடி சென்னியில் வைத்தொரு — வார்த்தை சொல்லி வழக் கறுத் தாண்டவன் — பார்த்த பார்வை பசுமரத் தாணியே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.**

(இ-ள்) கோத்த கோவை குலைய —(செம்பிற்களிம்பு போல) அநாதியே பற்றி நின்ற ஆணவம் முதலிய பாசக் கொத்தின் வலிமை கெட, குருபரன் — (மானைக்காட்டி மானைப் பிடிப்பதுபோல நம்மை உய்யக்கொள்ளவேண்டித்திரு வருளே திருமேனியாகக்கொண்டு மானிடச்சட்டை சாத்தி இந்நிலவுலகத்திலே) ஞானசாரியராக எளிவந்து, சேர்த்த சே அடி சென்னியில் வைத்து — இணையார்ந்த சிவந்த அருள்வடியாகிய ஸ்ரீ பாதங்களை (புன்) தலையிலே சூட்டி, ஒரு வார்த்தை சொல்லி—ஒப்பற்ற மகாவாக்கியமாகிய திருவைந்தெழுத்தை உபதேசித்து, வழக்கு அறுத்து ஆண் டவன் — அப்பாசத்தின் தொடர்ச்சியை முற்றக்கெடுத் தாண்ட நாயனாகிய பரசிவன், பார்த்த பார்வை பசு மரத்து ஆணி ஏ—நோக்கிய திருவருட்பார்வையானது பசுமரத்திலே இருப்பாணி சென்றிருந்தாற்போல மீளாது அழுந்தியிருந்தது என்றவாறு.

ஞானசாரியனாக எழுந்தருளிவருதல் இருவினை யொப் பின்கண் மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் என்னும் நால்வகைச்சத்திநிபாதத்தின் வைத்து அரிதின் உணர்த்த வேண்டுதலின் சகலவர்க்கத்துக்கு என்க. இதனை, "உரை தருமிப் பசுவர்க்கம் உணரின் மூன்றாம் உயரும் விஞ்ஞா னகலர்பிர ளயாகலர் சகலர்—நிரையின்மல மலங்கன்ம மலங் கன்ம மாயை நிற்குமுத லிருவர்க்கு நிராதாரமாகி—கரை

யிலருட் பரன்துவிதா சத்திநிபா தத்தால் கழிப்பன்மலம் சகலர்க்குக் கன்ம வொப்பில் — தரையிலா சான்மூர்த்தி யாதார மாகித் தரித்தொழிப்பன் மலஞ்சதுர்த்தா சத்திநிபா தத்தால்'' (சித்தியார் சுபக்கம் சூத்-8. செய்-2) என வரும் திருப்பாட்டிற் காண்க. ''இணையார் திருவடியென் தலைமேல் வைத்தலுமே—துணையான சுற்றங்கள் அத்தனை யும் துறந்தொழிந்தேன்'' என ஸ்ரீ மாணிக்கவாசகசுவாமிகள் சிவன் திருவடி சூட்டி யாட்கொண்ட திறத்தைத் திருவாசகத் தில் பல இடங்களில் வைத்துக் காட்டியருளுதல் அறியத்தக் கது. ''......பதகமலமுஞ்சூட்டி, வண்ண மாமலர்ச் செங்கரம் சென்னிமேல் வையா'' என வாதவூராடிகளுக்கு உபதேசித்த படலத்தில் ஸ்ரீ பரஞ்சோதிமுனிவர் கூறியமையும் காண்க. திருவடி சூட்டுதல் கூறவே அதன்பின் கரமலர் சிரத்தின் மேல் வைத்தலாகிய அஸ்தமஸ்தகசையோகம் என்னும் பரிச தீட்சையும் அடங்கும். தீட்சைவகையின் விரிவைப் ''பல விதமாசான்பாச மோசனந்தான் பண்ணும் படிநயனத் தருள் பரிசம் வாசகமான தமும் — அலகில்சாத் திரம்யோக மவுத் திராதி அநேகமுள...'' என்னும் திருவிருத்தத்தானுணர்க. இவ்வெழுவகைத் தீக்கையுள் பரிசம் மானதம் வாசகம் திருநோக்கு என்னும் நான்கு உரைத்தமை காண்க. பாவனை யால் ஆணவமலமும், மந்திரோபதேசத்தால் கன்மமலமும், பரிசத்தால் மாயையும் நீங்கும் என்பர்.

55 தான்வரை வற்றபின் ஞுரை வரைவது
தானவ ஞனபின் ஞுரை நினைவது
காமனை வென்றகண் ஞுரை யுகப்பது
தூமொழி வாசகம் சொல்லுமின் னீரே.

—2954

—என்பது:— சீவாத்மா சத்திநிபாத விவேக த்தைக்கொண்டு தன்னை ஆராய்ந்து விசாரிக்குமளவில் தனக்குச் சாதி வருணாச்சிரமம் இல்லாமையினாலே 'தான்வரை வற்றபின் னாரை வரைவது' என்னும் சத் தத்துக்கு விபரம். காரணகுரு கைகாட்டும்படியே கர்ப்பூரமும் சோதியும் கலந்தாற் போலவே நிராமய பூரணத்தில் ரகசியபதம் பெற்றபின் பொருள் தான் ஆகையினாலே 'தானவ னானபின் னாரை நினைவது' என் னும் சத்தத்துக்கு விபரம். சராசரம் அனைத்தும் தன் இனமாகத் தோற்றுகையினாலே 'காமனை வென்ற கண் ணாரை யுகப்பது' என்னும் சத்தத்துக்கு விபரம். ...... இந்தப்படி அறியாதாரை வினைக் கொண்டாராகையினா லே 'தூமொழி வாசகம் சொல்லுமின் நீரே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க

(இ—ள்) தான் வரைவு அற்ற பின் ஆரை வரைவது— தான் முன்பு தன்னை ஆராய்ந்து "சாதிகுலம் பிறப்பு என்னும் தடஞ்சுழியில் தடுமாறுதல் ஆகிய" கொள்கை நீங்கிய பின்பு "அப்பனீ அம்மைநீ ஐயனுநீ அன்புடைய மாமனும் மாமியுநீ— ஒப்புடைய மாதரும் ஒண்பொருளும்நீ ஒருகுலமும் சுற்றமும் ...நீ..." எனக்கொள்வதன்றி எவரைத் தனக்கு உரிமை யாகக் கொண்டுவப்பது, தான் அவன் ஆனபின் ஆரை நினை வது—"சிவன்றன் திருக்கடைக்கண் சேர்த்திச் செனன மொன்றிலே சீவன் முத்தாக—வைத்தாண்டு மலங்கழுவி ஞானவாரி மடுத்தானந் தம்பொழிந்து வரும்பிறப்பை அறுத்து — முத்தாந்தப் பாதமலர்க் கீழ்" வைத்தருளுமாறு சிவோகம் பாவனை முதிர்ச்சியால் தான் சிவமாந்தன்மைப்

பெருவாழ்வை யடைந்தபின் 'பசுகரணங்களெல்லாம் பதிகரணங்களாக' மாறிச் சிவானந்த மொன்றிலேயே திளைத்திருத்தலையன்றி எவரையும் நினைந்திருத்தல் கூடாது, காமனை வென்ற கண்ணுரை உகப்பது—ஆதலால் (பெத்ததசை முத்திதசை இரண்டினும் அதனைச் செயித்த) நெற்றிக்கண்ணுடையாரையே உகந்து கொள்ளத்தக்கதாம், தூமொழி வாசகம் சொல்லுமின் நீரே—(அதற்கு உபாயமாவது) எல்லா மொழியினும் மிகப்பரிசுத்த மொழியாகிய "பெருவான் பொருள் தன் பெரும்பெய"ராகிய பஞ்சாக்கரத்தை விதிப்படி கணிப்பீராக என்றவாறு.

இனி, பாசத்தை ஒருவி ஞானத்தைப்பெற்று ஞேயத்தைக்கண்டகாட்சி சலியாமைப்பொருட்டு அப்பொருள் பயக்கும் திருவஞ்செழுத்து அவ்விதிப்படி யறிந்து கணிக்கப்படும் என்பது கருத்து.

**56 வேதாந்தம் சித்தாந்தம் என்னும் இரண்டுக்கும்**
**போதாந்த மான புரந்தரன் வாழ்வொன்று**
**நாதாந்த மான ஞானங்கை கூடாதேல்**
**சேதாந்த மான செனனம் ஒழியாதே**

— ......

— என்பது :– வேதாந்தம் சித்தாந்தம் இவை இரண்டுக்கும் அநாதிபுரந்தரன் போதாந்தம் ஆகையினாலே 'வேதாந்தம் சித்தாந்தம் என்னும் இரண்டுக்கும் — போதாந்த மான புரந்தரன் வாழ்வொன்று' என்னும் சத்தத்துக்கு விபரம். சத்திநிபாத விவேகத்துக்கு நாதாந்த ஞானம் என்னும் நாமம் உண்டாச்சுது.

ஆகையினாலே, சத்திநிபாத விவேகம் இல்லாத ர்க்கு இருவினைச் செனனம் ஒழியாதாகையினாலே 'நாதாந்த மான ஞானம் கைகூடாதேல்—சேதாந்தமான செனனம் ஒழியாதே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க

(இ—ள்) வேதாந்தம் சிந்தாந்தம் என்னும் இரண்டுக்கும் — வேதத்தின் முடிவாகிய வேதாந்தம் ஆகமத்தின் முடிந்த முடிபாகிய சித்தாந்தம் என்னும் இரண்டற்கும், போத அந் தம் ஆன புரந்தரன் வாழ்வு ஒன்று — ஞானானந்தமாய் விளங் கும் புரந்தரன் என்னும் பெயரையுமுடைய சிவபரம்பொருள் நிற்கும் நிலை ஒருவகையேயாம்: இருவகையன்று (இதனை அறியும் உணர்ச்சியில்லாதார் வேறுவேறாகப்பிணங்கிக்கூறு வர் என்றபடி), நாத அந்தம் ஆன ஞானம் கை கூடாதேல்— நாததத்துவத்தின் (முப்பத்தாறு தத்துவங்களின்) முடிவாக வுள்ள சிவத்தை உணரவல்ல சிவஞானமானது (மேலான சிவ புண்ணியமிகுதியால் சைவ சம்ஸ்கார முறையால்) கிட்டா தாயின், சேதாந்தம் ஆன செனனம் ஒழியாது ஏ — மிக்க கேட்டை விளைப்பதாகிய வினைப்பயன்களை நுகரச் சென்மம் நீங்காது என்றவாறு.

இதனை, "வேதநூல் சைவநூல் இரண்டே நூல்கள்" எனவும், "வேதாந்தத் தெளிவாம் சைவசித்தாந்தம்" எனவும் வரும் வாக்குகள் பற்றி வே தா ந் த சித்தாந்த உண்மை தெளிக.

57 ஆதாரம் ஆறல்ல அப்பால் நடமல்ல
ஓதா ஒளியல்ல உன்மந் திரமல்ல
வேதா கமத்தில் விளங்கும் பொருளல்ல
சூதான நந்தி சொல்லுப தேசமே.

—......

—என்பது:— காரணகுரு கைகாட்டியபொருள் காலமும் கற்பனையும் கடந்திருக்கையினாலே 'ஆதாரம் ஆறல்ல அப்பால்நடமல்ல ஓதா ஒளியல்ல உன்மந்திர மல்ல வேதாகமத்தில் விளங்கும் பொருளல்ல சூதான நந்தி சொல்லுபதேசமே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ—ள்) என் ஞானசாரியராகிய திருநந்திதேவர் திருவாய்மலர்ந்தருளிய தந்திரமான உபதேசப்பொருள் மூலாதாரம் முதலாகக் கூறப்படும் ஆறு ஆதாரங்களிலுமுள்ள பொருளல்ல; அவைகளுக்கப்பாலுள்ளதாகிய பிரமரந்திரத்திலே நடம்புரியும் ஒப்பற்றபொருளுமல்ல; சொல்லவொண்ணாததாகிய பரஞ்சோதியுமன்று; தியானிக்கத்தக்க மந்திரமூர்த்திகளுமல்ல, வேதாகமங்களால் விளக்கப்பட்ட பொருளுமல்லவாம் என்றவாறு.

இவைகளேயன்றி என்னுட்கலந்து பேதம் அபேதம் பேதாபேதமாகிய மூவியல்பும் தோன்ற நின்றருளும் பொருளுமாம் அது என்றபடி.

58 முப்பதும் முப்பதும் முப்பத் தறுவரும்
செப்பும் மதிலுடைக் கோட்டையுள் வாழ்பவர்
செப்பு மதிலுடைக் கோட்டை சிதைந்தபின்
ஒப்பில் அனைவரும் ஓட்டெடுத் தாரே.
—154.

—என்பது:—செப்பும் மதிலாவது ஐம்பூதம் ஆகையினாலே ஐம்பூதகாயத்துக்குச் 'செப்பும் மதிலு

டை ' என்னும் நாமமுண்டாச்சுது. ஐம்பூத காயம் தொண்ணூற்ருறு தத்துவத்தையும் உட்கொண்டிருக் கையினலே 'முப்பதும் முப்பதும் முப்பத்தறுவரும் செப்பும் மதிலுடைக் கோட்டையுள் வாழ்பவர்' என் னும் சத்தத்துக்கு விபரம். காயசம்பந்தம் சீவாத்மா காரணகுரு கைகாட்டும்படியே கர்ப்பூரமும் சோதியும் கலந்தாற்போலவே பதியுடன் ரகசியபதம் பெற்றபின் ஐம்பூதகாயம் அநித்தியம் ஆகையினலே 'செப்பும் மதி லுடைக் கோட்டை சிதைந்தபின் ஒப்பில் அனைவரும் ஓட்டெடுத்தாரே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ—ள்) முப்பதும் முப்பதும் முப்பத்து அறுவரும்—(புறக்கருவி அகக்கருவிகள் ஆகிய தொண்ணூற்ருறு தத்து வங்களுள்) புறக்கருவியாகிய அறுபது தத்துவங்களும் அகக் கருவியாகிய முப்பத்தாறு தத்துவங்களும் ஆக, செப்பும் மதில் உடை கோட்டையுள் வாழ்பவர்—சொல்லப்படும் மதில் களையுடைய கோட்டையாகிய உடம்பிலே வாழ்பவராவார், செப்பும் மதில் உடை கோட்டை சிதைந்தபின்—சிறப்பித் துச் சொல்லப்படுகின்ற மதில்களையுடைய கோட்டையாகிய சரீரம் சிதைந்தபின், ஒப்பு இல் அனைவரும் ஓட்டெடுத்தார் ஏ—ஒன்ருேடொன்று ஒப்பில்லாத தத்துவங்களாகிய அனை வரும் அக்காயத்தை விட்டு உடனே புறப்பட்டு ஓடிவிட்டார் கள் என்றவாறு.

தத்துவங்கள் முப்பத்தாறனையும் அவற்றின் இயல்பை யும் உண்மைவிளக்கம் முதலிய மெய்கண்ட நூல்களினும், சித்தாந்தப்பிரகாசிகை, ஞானமிர்தக்கட்டளை முதலியவற்றி னும் காண்க. "திருமருவு பிருதிவிநீ டப்புத் தேயு திகழ்வாயு

வாகாயம் பூத மைந்தாம்—மருவுபொறி சோத்திரநற் றுவக்குச் சட்சு வளர்ந்திகழும் சிங்நுவையாக் கிராண மைந்தாம்—பொரு வரிய சத்தமிகு பரிச ரூபம் பொருந்திரத கந்தமெனப் புலன்க ளைந்தாம்—கருமமலி யிந்திரியம் வாக்குப் பாதம் கவின்பாணி பாயுருவோ டுபத்த மைந்தே." "பொற்பமரொப் பருமந்தக் கரணம் சித்தம் புத்தியுட னகங்காரம் மனநான் காகும் — விற் பரவும் கலைகாலம் நியதி தானும் வித்தையரா கம்புருடன் மாயை யேழாம்—தற்பரமா கியசுத்த வித்தை யீசம் சாதாக்கி யஞ்சத்தி சிவமைந் தாகும்—முற்பொலியு மூவகையாய் விரி ந்த வெல்லாம் மொழிந்திடுவர் தத்துவங்கள் முப்பத்தாறே" எனவரும் சிவஞானதீபத் திருவிருத்தங்களானும் இதனை அறிக. சம்பந்தசாணுலயர் அருளிய தத்துவ விளக்கமும் இதனை நன்குணர்த்தும்.

59 ஏற்றம் இரண்டுள ஏழு கிணறுள
மூத்தான் இறைக்க இளையான் மடைமாறப்
பாத்தியிற் பாயாமற் பாழெங்கும் பாய்ந்தது
கூத்தி வளர்த்ததோர் கோழிப்புள் ளாமே.
—2873.

—என்பது:—ஏற்றமாவது புண்ணிய பாவம். ஆகையினாலே, 'ஏற்றம் இரண்டுள' என்னும் சத்தத் துக்கு விபரம். புண்ணிய பாவத்தின் பகுதி விடயம் ஏழும் கிணறு ஆகையினாலே 'ஏழுகிணறுள' என்னும் சத்தத்துக்கு விபரம். ஏழு விடயத்துக்கும் உள் விபரம் எந்தப்படி? என்றால், தனுவிடயம், மனவிட யம், தனவிடயம், இராச்சிய விடயம், விசுவ விடயம்,

உச்சாயவிடயம், சேவகவிடயம் ஆகிய ஏழு விடயத்துக்கும் உள் விபரம் எந்தப்படி? என்றால், தனுவிடயம் எடுத்தால் தேகம் இளைச்சுப்போச்சென்றிருப்பன். மனவிடயம் எடுத்தால் கனவும் . . . மனமும் விரும்பியிருப்பன். தனவிடய மெடுத்தால் திரவியத்தை விரும்பியிருப்பன், இராச்சியவிடய மெடுத்தால் வாகனம் வஸ்து ஆபரணம் மற்றுமுள்ள இராச்சியத்தை மேன்மேலும் விரும்பி யிருப்பன். விசுவவிடயம் எடுத்தால் கிரகம் சேத்திரம்..... வதரிக்க வேணுமென்றிருப்பன். உச்சாயவிடயமெடுத்தால் புத்திர மித்திர களத்திராதிகளை விரும்பி யிருப்பன். சேவக விடய மெடுத்தால் போகிறேன் வருகிறேன் வாங்குகிறேன், கொடுக்கிறேன், என்றிருப்பன். ஆகையினாலே உள்ளமாகிய சீவாத்மா மனாதி கரணத்துக்கு மூப்பு ஆகையினாலே சீவாத்மாவுக்கு 'மூத்தான்' என்னும் நாமம் உண்டாச்சுது. ஆகையினாலே முன்சொன்ன ஏழுவிடயத்தையும் சீவாத்மாவினுடைய புத்தி விசாரமில்லாமல் மாயா சம்பந்தமாகிய புலன்வழியே நடத்துகையினாலே 'மூத்தானிறைக்க இளையான் மடைமாற' என்னும் சத்தத்துக்கு விபரம்.........கூத்தியரும் 'கூத்தியர் வளர்த்ததோர் கோழிப் புள்ளும்' இவை இரண்டுக்கும் உடையாளி ஒருவன் இல்லாதது போலவே சீவாத்மாவுக்குத் தலைவன் வெளிப்படாமையினாலே 'பாத்தியிற் பாயாமல் பாழெங்கும் பாய்ந்தது கூத்தி வளர்த்ததோர் கோழிப் புள்ளாமே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ-ள்) ஏற்றம் இரண்டு உள—(புண்ணியபாவங்களாகிய துலாமரம் என்னும்) ஏற்ற மரங்கள் இரண்டு உள்ளன. ஏழு கிணறு உள—(அவற்றைப்பற்றி நின்று முகந்து கொள்ளப்படுகின்ற சுவாசம் ஆகிய நீர் உள்ள) எழுவகைத் தோற்றங்களாகிய கிணறுகள் ஏழு உள்ளன, மூத்தான் இறைக்க—(பிங்கலை என்று சொல்லப்படும் சூரியகலையாகிய) மூத்தவன் நிச்சுவாசம் பண்ணுமல் உச்சுவாசம் பண்ண, இளையான் மடை மாற—இடைகலை என்று சொல்லப்படும் சந்திரகலையாகிய) இளையவன் (அச்சுவாசம் ஆகிய நீர் போவதற்குரிய வழியிலே போகாவண்ணம்) தடுத்து மாறிவிட, (எனவே நிச்சுவாசம் பண்ணுமல் தானும் உச்சுவாசமே பண்ண என்றபடி), பாத்தியில் பாயாமல் பாழ் எங்கும் பாய்ந்தது — (ஒவ்வொரு நாளும் விடும் சுவாசம் இருபத்தோராயிரத்து அறுநூறு எனக் கணக்கிடப்படும் பிராணவாயுவாகிய நீர்) சுழுமுனை வழியே சென்று கும்பகம் ஆகிய பாத்தியிலே பாயாமல் பாழாக வெளியிடங்களில் எல்லாம் பாய்ந்து பயனின்றி ஒழிந்தது, கூத்தி வளர்த்தது ஓர் கோழிப்புள் ஆம் எ — (தலைவன் ஒருவனைப் பெருத) கூத்தியானவள் வளர்த்துவிட்ட கோழிப்புள்ளைப்போலப் பயனற்றுப்போயிற்று என்றவாறு.

தலைவன் விசாரணையில்லாமையால் பயனற்றது என்பது கருத்தாகக்கொள்க. ஏற்றம் இரண்டு – இடைகலை பிங்கலை எனவும், ஏழுகிணறு – ஆதாரம்ஆறு அமுத ஊற்று ஒன்று எனவும், பாத்தி – நாடி எனவும் கூறுவாருளர்.

**60 உருகிப் புறப்பட் டுலகை வலம்வந்து**
**சொருகிக் கிடக்கும் துறையறி வாரில்லை**

**சொருகிக் கிடக்கும் துறையறி வாளர்க்கு**
**உருகிக் கிடக்குமென் உள்ளன்பு தானே.**

—......

—என்பது:— மாயாசம்பந்தமாகிய எண்பத்து நான்கு நூறாயிரம் கடங்கள் தோறும் சித்து சித்தாங்கிசம் சீவாத்மா என வேற்றுப்பேர் கொண்டிருந்து தனு கரண புவனபோகம் இருவினை முன்னிலையாக அநுபவித்து அநுபவம் தீர்ந்தபின் சத்தினிபாத விவேகத்தைக்கொண்டு காரணகுரு முன்னிலையாகக் கடோபாதியைப் பொய் எனக் கொண்டு கர்ப்பூரமும் சோதியும் கலந்தாற்போலவே ஐக்கியபதம்பெற்ற சீவாத்மா நிலைமையை அறியாதார்க்கு அறியப்படாதாகையினலே 'உருகிப் புறப்பட்டுலகம் வலம் வந்து – சொருகிக் கிடக்கும் துறையறி வாரில்லை' என்னும் சத்தத்துக்கு விபரம். சீவாத்மா தன்னுடைய நிலைமையைக் காரண குரு முன்னிலையாக அறிந்தபின் சீவாத்மா தனக்கு வேற்றுமையில்லாத படியினலே 'சொருகிக்கிடக்கும் துறையறி வாளர்க்கு–உருகிக் கிடக்குமென் உள்ளன்பு தானே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க

(இ–ள்) உருகி புறப்பட்டு உலகை வலம் வந்து — (மனத்திலே அன்பானது முதிரமுதிரக் கனிந்து) உருகி வெளியே புறப்பட்டு உலகத்தை வலமாக (பூப்பிரதக்ஷிணம்) வந்து, (அங்ஙனம் பூப்பிரதக்ஷிணமாக வந்து மூர்த்தி தலம் தீர்த்தம் முதலியவற்றை முறையாகத்தொழுது வலம் வருதலால் சிவபுண்ணியம் மேலிட்டு ஓங்க, அச்சிவபுண்ணியம்

மேலிடலால் இருவினையொப்பு மலபரிபாகம் சத்திநிபாத நிகழ்ச்சி தோன்றக் குருவருளாலே சிவோகம் பாவனையில் தலைப்பட்டு), சொருகி கிடக்கும் துறை அறிவார் இல்லை — அதன் கண் அடங்கிக் கிடக்கும் மார்க்கத்தை அறிகின்றோர் அரியர் ஆயினர், (ஆயினும்) சொருகி கிடக்கும் துறை அறிவாளர்க்கு—அங்ஙனம் அடங்கிக்கிடக்கின்ற துறையை அறிகின்றவர்களாகிய சிவஞானிகளுக்கு, உருகிகிடக்கும் என் உள் அன்பு தான் ஏ — என்னுள்ளே அன்புருவாய் விளங்கும் சிவப்பொருள் தானே திருவுளம்பற்றி விடாது பற்றிக்கொள்ளும் என்றவாறு.

"அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்" என அருளியமை காண்க. "கசிந்த தொண்டினொடும் உளத்தவன் றன் நின்றகலப்பாலே சோகமெனப்பாவிக்கத் தோன்றுவன் வேறின்றி" எனவரும் (சிவஞானசித்தியார் சூத்-9: செய்–7) திருவிருத்தத்தால் சிவபரம்பொருள் கருணை கொண்டு விடாதுபற்றிக்கொள்ளும் என்பதனை அறிக. இனி, "...... ஈசன் நேசரொடுஞ் செறிந்திட்டு — அங்கவர்தம் திருவேடம் ஆலயங்க ளெல்லாம் அரனெனவே தொழுதிறைஞ்சி ஆடிப் பாடி" எனச் சித்தியார் பன்னிரண்டாம் சூத்திரத்தில் அருளிச் செய்தவாறே அங்ஙனம் அடங்கிக்கிடக்கின்ற துறையறிவாளராகிய மெய்ஞ்ஞானிகட்கு 'என் உள்ளன்பு உருகி (என் வசமற்று அவன் வசத்தே தங்கிக்) கிடக்கும்' என உரைப்பினும் ஆம் என்பர் பெரியோர்.

61 எட்டினி லெட்டு மதிலொட் டிரட்டியும்
கட்டியை விட்டுக் கலந்துண்ண மாட்டாமல்

**பட்டினி விட்டும் பலவிதம் தேடியும்**
**எட்டும் இரண்டும் அறியாத மாக்களே.**

— ......

— என்பது :— எட்டாவது புரியட்டகாயம். இரண்டாவது தானும் தலைவனும்; விபரம் எந்தப்படி? என்றால், எட்டாவது புரியட்டகாயத்துள் மருவி சீவாத்மா இருந்தபடியினாலே சீவாத்மாவுக்கு 'எட்டினி லெட்டு' என்னும் நாமம் உண்டாச்சுது. சத்தினிபாத விவேகம் மேற்பத்தியாகையினாலே 'எட்டினிலெட்டும் அதிலொட்டிரட்டியும்' என்னும் சத்தத்துக்கு விபரம். முன் சொன்ன புரியட்டகாயமாகிய கட்டியும் தன்னை யும் தலைவனையும் காரணகுரு முன்னிலையாக விசாரித் துக்கொள்ளாமல் பட்டினி விட்டும் பாஷாணம் முதல் பலவித பணதியை மூர்த்தியாகவும் மற்றுமுள்ள தீர்த் தம் கேத்திரத்தை மெய்க்கொண்டிருந்தபடியினாலே 'பட்டினிவிட்டும் பலவிதம் தேடியும் எட்டும் இரண்டும் அறியாத மாக்களே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ—ள்) எட்டும் இரண்டும் அறியாத மாக்கள் ஏ—எட் டாகிய அகாரமும் இரண்டாகிய உகாரமும் ஆகிய பிரணவ நிலையை அறியாத மனிதர்கள், கட்டியை விட்டு — (என்பு தசைபோர்த்த உடம்பாகிய) கட்டியின் பற்றை விட்டு, எட்டி னில் எட்டும் அதில் ஒட்டு இரட்டியும் — சோடசகலைகளை யுடைய சத்தியையும் அதனுடன் மருவியுள்ள சிவத்தையும், கலந்து உண்ண மாட்டாமல்—கலந்து நின்று சிவபோகத்தை

நுகரமாட்டாமல், பட்டினி விட்டும் பலவிதம் தேடியும் — உணவொன்றுமின்றிப் பட்டினி கிடந்து வாடியும் காயகற்பம் முதலியவற்றை யெல்லாம் ஆராய்ந்தும் (வருந்துவர்) என்றவாறு.

வருந்துவர் என்றது எஞ்சிநின்றது: இசையெச்சம். சோடசகலையின்விவரம் ஞானமிர்தம்,சோடசகலாப்பிராசாதஷட்கம் முதலிய நூல்களிற்காண்க. கலந்து உண்ணுதலாவது "தாயுடனேசென்று தாதையைக்கூடிப்பின் தாயைமறந் — தேயுமதேநிட்டை யென்றான் எழிற்கச்சி யேகம்பனே"எனப் பட்டினத்துப் பிள்ளையார் திருவாக்குண்மையால் உணர்க. இத்திருப்பாட்டுக் கொண்டுகூட்டுப் பொருள்கோள்.

**62 ஈசன் இருப்பன் இருவினைக் கப்புறம்**
**ஈசன் உலகுக் கிறைதெய்வ மாவது**
**ஈசன் அதுவிது என்பர் அறிவிலார்**
**தூசு பிடித்தவர் தூரறிந் தாரே.**

— ......

— என்பது :– ஈசன் இருவினைக் குட்படாமையினலே 'ஈசன் இருப்பன் இருவினைக் கப்புறம்' என்னும் சத்தத்துக்கு விபரம். ஈசன் எல்லா உலகுக்கும் உடையாளி ஆகையினலே 'ஈசன் உலகுக்கிறைதெய்வ மாவது' என்னும் சத்தத்துக்கு விபரம். ஈசனகிய ஒருவனை விசாரித்துக்கொள்ளாமல்கிரியாசம்பந்தமாகிய சேத்திரம் தீர்த்தம் பாஷாணம் முதல்பலவிதபணதிகை மூர்த்தியாக மெய்க்கொண்டிருந்தபடியினலே 'ஈசன் அதுவிது என்பர் அறிவிலார்' என்னும் சத்தத்

துக்கு விபரம். காரணகுரு கைகாட்டும்படியே விசாரித்துக்கொண்டார்க்குத் தலைவன் வெளிப்படும் ஆகையினாலே 'தூசு பிடித்தவர் தூரறிந் தாரே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ–ள்) ஈசன் இருப்பன் இரு வினைக்கு அப்புறம் — (நம்மனோர் போல வினைவயத்தான் அன்றி இயல்பாகவே பாசங்களின் நீங்கியோன் ஆதலால்) ஈசன் இருவினையைக் கடந்து அப்புறத்தே இருப்பன், ஈசன் உலகுக்கு இறை தெய்வம் ஆவது—உலகத்துக்கு இறையாகிய தெய்வமாவது (இயல்பாகவே பாசங்களின் நீங்கிய) அவ்வீசனே(ஆம்),ஈசன் அது இது என்பர் அறிவிலார்—(எண்குணங்களையும் உடையவன் ஆகிய அவ்) ஈசன் (எண்குணத்தொருவன் என) அறியாதார் சுட்டிறந்து நிற்கும் பழம்பொருளை அது என்றும் இது என்றும் வெவ்வேறு வகையாகச் சுட்டிக்கூறுவர், தூசு பிடித்தவர் தூர் அறிந்தார் ஏ — தூசிப்படையாகிய முன்னணியை அறிந்து பிடித்தவரே மூலப்படையையும் அறிந்து பிடித்தோர் ஆவார்; அஃது அல்லாதவர் ஆகார் என்றவாறு.

இஃது எடுத்துக்காட்டுவமை இறை — எட்பொருள்களிலும் தங்கியிருப்பவன். ஈசன் இருப்பை அறிந்தோரே இறையாகிய அத்தெய்வத்தின் உண்மை நிலையை அறிந்தோராவார் என்றபடி. ஈசன் மாயா குணங்களின்றி அருட்குணங்களையுடையோன் என்க. எண்குணம் ஆகமங்களிற் காண்க. "எண்குணத்தான்–றாளை வணங்காத் தலை" என்பது திருக்குறள்.

**63 பெண்ணல்ல ஆணல்ல பேடல்ல மூடகம்**
**உண்ணின்ற சோதியை உற்றறி வாரிலைக்**

**கண்ணின்றிக் காணும் செவியின்றிக் கேட்கும்**
**அண்ணல் பெருமையை ஆய்ந்தவர் மூப்பே.**

—1872.

— என்பது :— பெண் ஆண் அலி என்னும் கற்பனையில்லாமல் இருந்தபடி யாயப்படாதாகையினு லே 'பெண்ணல்ல ஆணல்ல பேடல்ல மூடகம்' என்னும் சத்தத்துக்கு விபரம். பாலின்கண் நெய்யிருந்தாற் போலவே காயத்துட் பொருளைச் சீவாத்மா அறியா மல் இருந்தபடியினுலே உண்ணின்றசோதி தன்னைக் கண்ணில்லாமை உருவத்தைக் காண்கையினுலே 'கண் ணின்றிக்காணும்' என்னும் சத்தத்துக்கு விபரம். தனக்குச் செவியில்லாமைச் சத்தத்தைக் கேட்கை யினுலே 'செவியின்றிக்கேட்கும்' என்னும் சத்தத்துக்கு விபரம். உண்ணின்ற சோதியாகிய தலைவனைக் காரண குரு கைகாட்டும்படியே விசாரித்துக் கொண்டோர் குருபுத்திரர் ஆகையினுலே 'அண்ணல் பெருமையை ஆய்ந்தவர் மூப்பே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ—ள்) பெண் அல்ல ஆண் அல்ல பேடு அல்ல மூடகம் — தூலவடிவங்களிலே வைத்துக்காணப்படுகின்ற பெண்வடிவ மல்ல ஆண்வடிவமல்ல அலி வடிவமுமல்ல அஃது இரகசிய மானது, உள் நின்ற சோதியை உற்று அறிவார் இல்லை — தன்னுள்ளே விரவி நிற்கும் ஒளிப்பொருளை (ஞானசாரியாது அநுக்கிரகத்தைப்பெற்று ஆராயும் முறைப்படி ஆராய்ந்து அறிந்து) உணர்ந்து நிற்பார் அரியராயினர், கண் இன்றி

காணும் செவி இன்றி கேட்கும் — (எல்லாமாய் அல்லது மாய்த் தன்வயத்தனுய் இருத்தலின்) நம்மனோர்போல ஓர் உறுப்பால் காணுதலும் ஓர் உறுப்பால் கேட்டலும் ஆகிய (ஏகதேச) அறிவின்றி முற்றுணர்வுடைய, அண்ணல் பெருமையை ஆய்ந்தவர் மூப்பே — தலைவன் பெருமையை ஆராய்ந்தறிந்து (அடங்கி) நின்றவரே யாவர்க்கும் தலைவ ராவார் என்றவாறு.

மூப்பு — தலைமை. திருவாசக முதலியன இம்மந்திரக் கருத்தை நன்கு விளக்குவனவாம்.

**64 விண்ணின்றிழிந்துவினைக்கீடாமெய்கொண்டு**
**தன்னின்ற தாளைத் தலைகாவல் மேல்வைத்து**
**உண்ணின் றுருக்கியோ ரொப்பிலா ஆனந்தக்**
**கண்ணென்று காட்டிக் களிம்பறுத் தானே.**
**—113.**

— என்பது :— விண்ணாகிய பதி, பசுவர்க்கத் துக்குப்பாசத்தை விடப்படுத்தி ஐக்கியபதம் கொடுக்க வேண்டிக்குருவடிவு கொண்டபடியினாலே 'விண்ணின் றிழிந்து வினைக்கீடாமெய்கொண்டு' என்னும் சத்தத் துக்கு விபரம். சத்திநிபாதவிவேகம் சீவாத்மாவுக்கு முன்னிலைபாகையினாலே 'தன்னின்றதாளைத் தலைகாவல் மேல்வைத்து' என்னும் சத்தத்துக்கு விபரம். சீவாத் மாவுக்கு மல மாயை கன்மம் விந்து திரோதமாகிய ஐவகைப்பாசத்தை விடப்படுத்திக் கற்பூரமும் சோதி யும் கலந்தாற் போலவே விண்ணாகிய பூரணத்தில்

ஐக்கியபதம் கொடுத்தபடியினலே 'உண்ணின்றுருக்கி யோர் ஒப்பிலா வானந்தக் — கண்ணென்று காட்டிக் களிம்பறுத்தானே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க

(இ—ள்) விண்ணின்று இழிந்து — பாநாதவெளியினின்றும் வெளிப்பட்டு (வேடாயினர் மானைக்காட்டி மானைப் பிடிப்பது போல என்னை அடிமை கொள்ளுமாறு), வினைக்கு ஈடாக மெய் கொண்டு—இருவினைக்கு ஈடாக (எடுக்கப்பட்ட நம்மனோர் உடம்புபோல) மானிட வுடம்பைக் கொண்டுஎழுந் தருளி வந்து, தன் நின்ற தாளை — (உலகமெல்லாம் ஒடுங்குதற்கும் மீளத்தோன்றுதற்கும் காரணமாக) நின்ற தன்னுடைய திருவடியை, தலை காவல் மேல் வைத்து—காப்பாக என்புன் தலைமேல் சூட்டி, உள் நின்று உருக்கி—என்னுள்ளே அறிவுக்கறிவாக விளங்கி நின்று தற்போதத்தைக் கரையச் செய்து, ஓர் ஒப்பு இலா ஆனந்தம் — ஓர் உவமானமில்லாத ஆனந்தத்தைக் (கொள்ளவல்லது ஆகிய), கண் ஒன்று காட்டி — (சிவஞானமாகிய) கண் ஒன்றை உதவியருளி, களிம்பு அறுத்தான் ஏ—களிம்பாகிய ஆணவமலத்தை அறுத்(து வலி இழுக்கச்செய்)தான் என்றவாறு.

அவன் அருளிருந்தவாறு என்னே! என்பது குறிப்பெச்சம். செம்பிற்களிம்புபோல அநாதியே ஆன்மாவினிடத்து ஆணவமலக்குற்றம் உண்மையின் அதனைக்'களிம்பு' என உருவகம் செய்தார். அநாதியாகஉள்ள தெவ்வாறு நீங்கும்? என்னில், ''செம்பிற்—காணலுறு களிம்பிரத குளிகைபரி சிக்கக் கழியுஞ்செம் புருநிற்கக் கண்டா மன்றே—தாணுவின்றன் கழலணையத் தவிருமலம்'' (சித்தியார் சுபக்கம் சூத்-11: செய்-5) என்றருளியமையும் காண்க.

65 வண்ணான் ஒலிக்கும் சதுரப் பலகைமேல்
கண்ணாறு மோழை படாமற் கரைகட்டி
விண்ணாற்றைத் தேக்கிக் குளத்தை நிரப்பிட்டு
அண்ணாந்து பார்க்க அழுக்கற்ற வாறே.
—800.

—என்பது:— வண்ணானவது சீவாத்மா: விபரம் எந்தப்படி ? என்றால், சீவாத்மா மனதி கரணத்தைக்கொண்டு ஐம்பத்தோரெழுத்தையும் நடத்துகையினாலே 'வண்ணா னொலிக்கும் சதுரப் பலகைமேல்' என்னும் சத்தத்துக்கு விபரம். சத்தினிபாத விவேகம் முன்னிலையாகச் சீவாத்மாவுக்கு மனதிதத்துவம் முப்பத்தாறும் பொய்யாகத் தோற்றுகையினாலே 'கண்ணாறு மோழை படாமற் கரைகட்டி' என்னும் சத்தத்துக்கு விபரம். சதானந்தவாரி சத்திநிபாதத்தில் நிறைந்திருந்தபடியினாலே 'விண்ணாற்றைத் தேக்கிக் குளத்தை நிரப்பிட்டு' என்னும் சத்தத்துக்கு விபரம். காரணகுரு கைகாட்டும்படியே சதானந்தவாரியில் சீவாத்மா செனனம் ஒழிந்தது ஆகையினாலே 'அண்ணாந்து பார்க்க அழுக்கற்ற வாறே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ—ள்) வண்ணான் ஒலிக்கும் சதுரம் பலகைமேல் — வண்ணான் ஆகிய ஆன்மாவானவன் ஒலித்தல் செய்யப்படும் சதுரப்பலகையாகிய அந்தக்கரணங்களின்மேல் உள்ள, கண்ணாறு மோழை படாமல் கரைகட்டி — (இந்திரியங்களாகிய)

கண்ணுற்றின் வழியும் (ஐம்புலன்களாகிய) மோழையின் வழியும் புகாமல் கரையடைத்து, விண் ஆற்றை தேக்கி — விண்ணுறுகிய (சுழுமுனைவழியே) பிராணவாயுவைச் சலனமற நிறுத்தி, குளத்தை நிரப்பிட்டு — (சந்திரமண்டலத்தை மூலக்கனலால் இளகப்பண்ணி யொழுகும் அமுதத்தை) குளமாகிய உடம்பு முழுவதும் நிரம்பச்செய்து, அண்ணாந்து பார்க்க — மேல் நோக்கிப் (பரஞ்சோதி வடிவாகிய பரம் பொருளைப்) பாரத்துத்தியானம் செய்ய, அழுக்கு அற்ற ஆறு ஏ—(உயிர்க்குற்றமாகிய) ஆணவமலம் நீங்கியவாறும்; எனவே, சிவசாரூபம் எய்துவர் என்றவாறு.

ஒலித்தல் — ஆடையின் அழுக்குப்போமாறு கல்லில் தோய்த்தல். நால்வகை வாக்கும் அந்தக்கரணங்களுடன் கூடி ஒலித்தலால் அந்தக்காணத்தைச் 'சதுரப்பலகை' என்றருளினர். கண் ஆறு — ஒவ்வோரிடங்களிலும் சென்று பாயும் வாய்க்கால். மோழை — கீழாறுகிய மோட்டை. இதன் கருத்தை "சகமார்க்கம் புலனொடுக்கித் தடுத்துவளி யிரண்டும் சலிப்பற்று முச்சதுரம் முதலாதா ரங்கள் — அகமார்க்கம் அறிந்தவற்றின் அரும்பொருள்கள் உணர்ந்தங் கணைந்து போய் மேலேறி அலர்மதிமண் டலத்தின் — முகமார்க்கம் அமுதுடலம் முட்டத் தேக்கி முழுச்சோதி நினைந்திருத்தல் முதலாக வினைகள் — உகமார்க்க அட்டாங்க யோக முற்றும் உழத்தலுழந் தவர்சிவன்றன் உருவத்தைப் பெறுவர்" என்னும் சிவஞானசித்தியார் (சுபக்கம்-எட்டாம் சூத்திரம் 21-வது திருவிருத்தம்) நோக்கி அறிக.

66 மூல நாடி முகட்டறை யுச்சியில்
நாலு வாசல் நடுவே சிவாலயம்

**மேலை வாசல் வெளியுறக் கண்டபின்**
**காலன் வாசல் கனவிலு மில்லையே.**

—......

— என்பது :— மூல நாடியாவது சுழுமுனை: விபரம் எந்தப்படி? என்றால், சுழுமுனை எழுபத்திரா யிரம் நாடியை நடத்துகையினாலே சுழுமுனைக்கு 'மூல நாடி' என்னும் நாமம் உண்டாச்சுது. முகட்டறை உச்சியாவது சித்து: விபரம் எந்தப்படி? என்றால், சித்து சுழுமுனைமுதல் எழுபத்திராயிரம் நாடிக்கும் பொது ஆகையினாலே சித்துக்கு 'மூலநாடி முகட் டறை யுச்சி' என்னும் நாமம் உண்டாச்சுது. சித்தி னுடைய புத்தி வித்தாரம். சரியை கிரியை யோகம் ஞானம் இவை நாலுவாசல் ஆகையினாலே 'மூலநாடி முகட்டறை யுச்சியில் நாலுவாசல்' என்னும் சத்தத் துக்கு விபரம். நாலுவாசல் மத்தியத்தில் நிராமயபூர ணம் சிறந்திருக்கையினாலே 'நாலுவாசல் நடுவே சிவா லயம்' என்னும் சத்தத்துக்கு விபரம். காரணகுரு கை காட்டும்படியே பூரணமாகிய சிவாலயத்தைக் கண் டோர்க்கு இருவினைச் செனனம் ஒழிந்தபடியினாலே 'மேலைவாசல் வெளியுறக் கண்டபின் — காலன்வாசல் கனவிலும் இல்லையே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ—ள்) மூலநாடி முகடு அறை உச்சியில்—எழுபத்திரா யிரம் நரம்புக்கு மூலமாக உள்ள சுழுமுனை நாடியின் மேல் உள்ளதாகிய கபாலத்தின் உச்சியாகிய பிரமரந்திரத்தின்,

நாலுவாசல் நடுவே சிவாலயம் — நடுவிலே (நான்கு திசைகளிலும்) வாசலையுடைய சிவாலயம் (ஒன்று உள்ளது), மேலை வாசல் வெளி உற கண்டபின் — மேல் வாசலிலே நின்று வெளியாகிய சத்துச் சித்து ஆனந்தமாகிய சிவப்பொருளைப் பொருந்தத் தரிசித்த பின்பு, காலன் வாசல் கனவிலும் இல்லை ஏ — இயமனுடைய நகரத்தின் வாயிலைக் காண்பது கனவினிடத்தும் இல்லையாம் என்றவாறு.

எனவே, என்றும் நீங்காத பேரின்பம் எய்தும் என்பது குறித்தபடி. மேலை—ஐ சாரியை. புறத்திலே உள்ள சிவாலய சேவை செய்வதுபோல அகத்திலேயுள்ள சிவாலய சேவையும் செய்ய வேண்டும் என்பது வற்புறுத்தியவாறு. சரியை கிரியை யோகம் ஞானம் என்பன 'நான்குவாசல்' என்றமை காண்க. வாசல் – வாயில்.

67 அப்பினிற் கூர்மை ஆதித்தன் வெம்மையால்
உப்பெனப் பேர்பெற் றுருச்செய்த வவ்வுரு
அப்பினிற் கூடியங் கொன்றான வாறுபோல்
செப்பிடிற் சீவன் சிவத்து ளடங்குமே.

— ......

— என்பது :— சித்தாங்கிசம் மாயோபாதியாகிய ஐம்பூத காயத்துடன் சீவாத்மாவென வேற்றுமைப்பேர் கொண்டிருந்தபடியினாலே 'அப்பினிற் கூர்மை ஆதித்தன் வெம்மையால் — உப்பெனப் பேர் பெற் றுருச்செய்த வவ்வுரு' என்னும் சத்தத்துக்கு விபரம். சீவாத்மா விசாரித்துக்கொண்டு காரணகுரு கைகாட்டும்படியே கர்ப்பூரமும் சோதியும் கலந்தாற்

போலவே பூரணமாகிய சிவபதம் பெற்றபடியினாலே 'அப்பினிற் கூடியங் கொன்றான வாறுபோல் - செப்பிடிற் சீவன் சிவத்து ளடங்குமே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க

(இ-ள்) அப்பினில் கூர்மை ஆதித்தன் வெம்மையால்— நீரிலே கூடியிருந்த உவர்ப்பானது சூரியனுடைய வெப்பம் கூடினகாலத்து, உப்பு என பேர் பெற்று உரு செய்த அ உரு — திரண்டு உப்பு என்னும் நாமத்தைப்பெற்று ரூபமாகச் செய்த அவ்வுப்பின் வடிவமானது, அப்பினில் கூடி அங்கு ஒன்று ஆன ஆறுபோல் — நீருடனே கூடி அதனிடத்துக் கலந்து தன்னுடைய கண்டித வடிவம் நீங்கி அங்கே ஒன்றான விதம்போல, செப்பிடில் சீவன் சிவத்துள் அடங்கும் எ — பேசுமிடத்து சீவன் சகசமலமாகிய ஆணவமலசத்தி கெடப் பரசிவத்தினுட் கலந்து ஆன்மபோதம் நீங்கச் சிவபோதமே நிறைந்து சிவத்தின் அடிமையாய்ச் சிவாநுபவம் ஒன்றையே நுகர்ந்திருக்கும் என்றவாறு.

இத்திருமந்திரத்தின் கருத்து " — நசித்துமலம், அப்பணைந்த உப்பின் உளமணைந்து சேடமாம் — கப்பின்றாம் ஈசன் கழல்." என்னும் (சிவஞானபோதம் பதினோராம் சூத்திரம் உதாரணத்) திருவெண்பாவானுணரத் தக்கது; ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள் உரையையும் காண்க.

68 கோயிலும் அஞ்சுள கோபுரம் மூன்றுள
கோயி லடைக்கக் கதவோ ரிரண்டுள
கோயில் திறந்து கும்பிட வல்லார்க்குக்
கோயிலுக் குள்ளே குடியிருந் தானே.

— ......

— என்பது.— ஞான இந்திரியம் அஞ்சும் விசாரிக்குமளவில் சித்தாங்கிசம் ஆகையினலே 'கோயி லும் அஞ்சுள' என்னும் சத்தத்துக்கு விபரம். இடை கலை பிங்கலை சுழுமுனை இவைமூன்றும் ஞான இந்திரியத் துக்கு முகனையாகையினலே 'கோபுரம் மூன்றுள' என்னும் சத்தத்துக்கு விபரம். ஞான இந்திரியத்துக்கு யான் எனது என்னும் இவை இரண்டும் அடைப்பா கையினலே 'கோயிலடைக்கக் கதவோ ரிரண்டுள' என்னும் சத்தத்துக்கு விபரம். காரணகுரு கைகாட்டும் படியே யான் எனது என்னும் கோயிலடைப்புத்திறந்து பூரணத்தை மெய்க்கொண்ட பின் ஞான இந்திரியம் அஞ்சும் சிவ இந்திரியமாகத் தோற்றுகையினலே 'கோயில் திறந்து கும்பிடவல் லார்க்குக் --- கோயிலுக் குள்ளே குடியிருந் தானே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ-ள்) ஞானேந்திரியம் அந்தக்கரணம் சிவதத்துவம் சத்திதத்துவம் ஆன்மா ஆகிய ஐவகைக் கோயில்கள் உள்ளன. அவற்றிற்கெல்லாம் இடைகலை பிங்கலை சுழுமுனை ஆகிய கோபுரங்கள் மூன்றுள்ளன. அக்கோயிலை அடைப் பதற்குரியனவாக யான் எனது என்னும் அகங்கார மமகாரங் களாகிய இரண்டு கபாடங்கள் உள்ளன. ஆகலின், கோயிற் கபாடங்களாகிய யானெனதென்னும் செருக்கினையகற்றிப் பரம்பொருளை அபேதமாக நின்று வணங்க (சிவோகம்பாவனை செய்ய) வல்லார்க்கே அக்கோயிலினுள்ளேயிருந்து விளங்கி யருளினன் என்றவாறு.

''யானென தென்னும் செருக்கறுப்பான் வானோர்க்— குயர்ந்த வுலகம் புகும்'' (குறள்—346) என்னும் திருக்குறள் சிந்தித்தற்குரியது. ''எனதியா னெனுமால்போத வாருயிர் அபேத பாவனை புரிவதே'' எனத் திருவானைக்காப்புராணம்— ஞானவுபதேசப்படலத்திலே கவிராக்ஷஸ ஸ்ரீ கச்சியப்பமுனிவர் அருளியமையும் காண்க.

69 நாத னிருக்கு நடுமண்ட பத்துள்ளே
நாதாங்கி யில்லாமல் நாலஞ்சு வாசல்
ஆதார மேதென் றறியவல் லார்க்கு
வேதாவி னேலை வீணேலை யாமே.

— ......

— என்பது :— சித்தறிவு காயத்துக்கும் அதிகம் ஆகையினாலே சித்தறிவுக்கு நடுமண்டபம் என்னும் நாமம் உண்டாச்சுது. பாலின்கண் நெய்யிருந்தாற்போலவே தலைவன் சித்தறிவை மருவியிருக்கையினாலே 'நாதனிருக்கு நடுமண்டபத்துள்ளே' என்னும் சத்தத்துக்கு விபரம். காயத்துக்கு நவத்துவாரம் வாசலாகையினாலே 'நாதாங்கி யில்லாமல் நாலஞ்சு வாசல்' என்னும் சத்தத்துக்கு விபரம் சித்தறிவாகிய சீவாத்மா சத்தினிபாத விவேகத்தைக்கொண்டு காரண குரு கைகாட்டும்படியே தலைவனை விசாரித்துக்கொண்ட பின் சீவாத்மாவுக்கு இருவினைச் செனனம் ஒழியாதபடியினாலே 'ஆதார மேதென் றறியவல் லார்க்கு—வேதாவினேலை வீணேலை யாமே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ—ள்) நாதன் இருக்கும் நடு மண்டபத்துள்ளே — உலக முழுதுடைய நாயகனுகிய சிவபரம்பொருள் இருந்தருளும் நடு மண்டபம் ஆகிய காயத்திலே, நாதாங்கி இல்லாமல் நால் அஞ்சு வாசல் — நாதாங்கி (யும் கதவும்) இல்லாமல் நவத்துவாரங்கள் ஆகிய வாசல்கள் உள்ளன, ஆதாரம் ஏது என்று அறிய வல்லார்க்கு – இந்த மண்டபத்துக்கு ஆதாரம் யாது? என்று விசாரித்து அறிய வல்லவர்களுக்கு, வேதாவின் ஓலை வீண் ஓலை ஆம் ஏ — (செனனமரணம் இல்லாமையால்) பிரமதேவர் ஆயுளை வரையறை செய்து எழுதியுள்ள ஓலையானது பயனில்லாத ஓலையாம் என்றவாறு.

இந்திருமந்திரப்பாட்டும் முன்பு கூறியபடியன்றி வேருெரு பிரகாரமாக அதனையே அருளிச்செய்தமை காண்க. 'காயமேகோயிலாக'என்றருளியபடியே ஈண்டு'மண்டபம்'என அருளிச்செய்தார். ஆதாரம் யாதென விசாரித்தறிதலாவது காயத்திற்காதாரம் மாயை, மாயைக்கு ஆதாரம் சத்தி, சத்திக்கு ஆதாரம் சிவம் எனத் தெளிதல். இவற்றை முறைப்படி சிந்தித்துக் குருவருளால் ஆராய்ந்தறிவது அரிதாகலின் 'அறியவல்லார்க்கு' என்றருளினர்.

70 கண்ணுக்கு மூக்குச் செவிஞானக் கூட்டத்தில்
பண்ணுக்கி வைத்த பழம்பொருள் ஒன்றுண்டு
அண்ணுக்கி னூடே அகண்ட வெளி காட்டிப்
புண்ணுக்கி நம்மைப் பிழைப்பித்த வாறே.
— ......

— என்பது :— சித்து ஐயறிவுக்குப் பொதுவாகையினலே பொதுவாகிய சித்துக்குக் 'கண்ணுக்கு மூக்குச் செவிஞானக் கூட்டம்' என்னும் நாமம் உண்

டாச்சுது ஆகையினாலே, பாலின்கண் நெய்யிருந்தாற் போலவே சித்துடன் பழம்பொருளாகிய பூரணம் மருவியிருக்கையினாலே 'கண்ணுக்கு மூக்குச் செவி ஞானக் கூட்டத்தில்—பண்ணுக்கி வைத்த பழம்பொரு ளொன்றுண்டு' என்னும் சத்தத்துக்கு விபரம். கண் ணுக்காவது சத்திநிபாத விவேகம். ஆனபடியினாலே சீவாத்மா சத்திநிபாத விவேகத்தைக்கொண்டு கர்ப்பூர மும் சோதியும் கலந்தாற்போலவே காரணகுரு கை காட்டும்படியே அகண்டபரிபூரணத்தில் ஐக்கியபதம் பெற்றபின் இருவினைச் செனனம் ஒழிந்தபடியினாலே' 'அண்ணுக்கி னூடே அகண்ட வெளிகாட்டிப் புண் ணுக்கி நம்மைப் பிழைப்பித்த வாறே' என்னும் சத்தத் துக்கு விபரம் என்க.

(இ—ள்) கண் நாக்கு மூக்கு செவி ஞானக் கூட்டத்தில் —கண் முதலாகிய ஞானேந்திரிய சமூகத்திலே, (அவற்றால் இருவினைப் பயன் நுகர ஆன்மாவை), பண் ஆக்கிவைத்த பழம்பொருள் ஒன்று உண்டு — அமைத்தல் செய்துவைத்த மூலப்பொருள் ஒன்று உள்ளது, அண் நாக்கின் ஊடே அகண்டவெளிகாட்டி — (அம் மூலப் பரம்பொருளே குரு வடிவாக வந்து)அண்ணுகின்ற வாக்காகிய சத்தத்தினுள்ளே விளங்கும் அகண்டிதமாயுள்ள பரமாகாசம் ஆகிய தன்னை (அறிவிக்கும் முறையாக) அறிவித்து புண் ஆக்கி — நகார மகாரங்களைக் கெடப்பண்ணி, நம்மை பிழைப்பித்த ஆறு ஏ— நம்மை உய்ய கொண்டவாறே சிறந்ததாம் என்ற வாறு.

சிறந்ததாம் என்பது எஞ்சிநின்றது. கண் முதலிய வற்றைக் கூறவே இனம்பற்றிக் காயத்தையும் கூட்டிக் கொள்க. பண்ணுக்கி — அமைத்து. மூலமொன்றில்லா முழுமுதற் பரம்பொருள் ஆகலின் பழம்பொருள் என்றருளி னர். நாக்கு என்பது ஆகுபெயராய் வாக்கை யுணர்த்தி நின்றது 'அண்ணுக்கினூடே அகண்டவெளிகாட்டி' என் பதை விநாயகரகவலில் "சத்தத்தினுள்ளே சதாசிவங்காட்டி" என்றமையும் காண்க. நகாரம் திரோதான சத்தியும் மகாரம் ஆணவமும் ஆகலின் அவ்விரண்டும் கெட என்பார் புண் ணுக்கி என்ருர். பிழைப்பித்தலாவது யகாரமாகிய ஆன்மாவை வகாரமாகிய அருளால் சிகாரமாகிய தன்னுடன் இரண்டறக் கலந்து பேரின்பத்தை அநுபவிக்கவும் செய்தது என விரித்துரைக்க. "நகர மகரந் தகர்த்தா ளிறைவர்க்கு" எனத் துறைசையந்தாதியினும் கூறியிருத்தல் காண்க. இனி, திருமந்திரசிந்தனையில் இத்திருமந்திரத்துக்குக் கூறிய விரி வுரை நோக்கியும் அறிக.

71 **மண்ணை யிடந்து வருகின்ற மாமணி**
**விண்ணை யிடந்து வருகின்ற மெய்ச்சுடர்**
**கண்ணை யிடந்து கனிதரு மானந்தம்**
**எண்ணிய கிழமைக் கிசைந்திடுந் தானே.**

— 1983 (?)

— என்பது :— மாமணியாவது சீவாத்மா: விவரம் எந்தப்படி ? என்ருல், சீவாத்மாவை விசாரிக்கு மளவில் சிவாங்கிசமாகையினுலே சீவாத்மாவுக்கு 'மாமணி' என்னும் நாமம் உண்டாச்சுது. ஆகையி னுலே மாமணியாகிய சீவாத்மா ஐம்பூத வடிவுடன்

நடந்து வருகையினுலே 'மண்ணையிடந்து வருகின்ற மாமணி' என்னும் சத்தத்துக்கு விபரம். விண்ணுவது அந்தச் சீவாத்மாவினுடைய சித்தறிவு. ஆகையினுலே விண்ணுகிய சித்தறிவுடன் பாலின்கண் நெய்யிருந்தாற் போலவே தலைவனிருந்து ஐம்பத்தோரெழுத்தையும் நடத்துகையினுலே 'விண்ணை யிடந்து வருகின்ற மெய்ச்சுடர்' என்னும் சத்தத்துக்கு விபரம். மாமணி யாகிய சீவாத்மா காரணகுரு கைகாட்டும்படியே கர்ப் பூரமும் சோதியும் கலந்தாற்போலவே தலைவனுகிய நிராமய பூரணத்தில் ரகசியபதம் பெற்றபடியினுலே 'கண்ணை யிடந்து கனிதரும் ஆனந்தம்' என்னும் சத்தத்துக்கு விபரம். ஆகையினுலே, நிராமயமாகிய தலைவன் யாவையும் தெரியாமலிருந்தபடியினுலே' 'எண்ணிய கிழமைக் கிசைந்திடுந்தானே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

**72 கொட்டியும் ஆம்பலும் பூத்த குளத்திடை**
**எட்டியும் வேம்பும் இனியதோர் வாழையும்**
**கட்டியும் தேனும் கலந்துண்ண மாட்டாதார்**
**எட்டிப் பழத்துக் கிளைக்கின்ற வாறே.**

— 2901.

— என்பது :— கொட்டியாவது புறநிலைத் தத்துவம் இருபத்தஞ்சு. ஆம்பலாவது உள் நிலைத் தத்துவம் இருபத்துநாலு. குளமாவது ஐம்பூதகாயம். விவரம் எந்தப்படி ? என்றுல், ஐம்பூதகாயத்தில்

தத்துவம் அனைத்தும் சிறந்திருக்கையினாலே 'கொட்டியும் ஆம்பலும் பூத்த குளத்திடை' என்னும் சத்தத்துக்கு விபரம். எட்டியாவது ஆணவமலம். வேம்பாவது மாயை. வாழையாவது சீவாத்மா. ஆகையினாலே 'எட்டியும் வேம்பும் இனியதோர் வாழையும்' என்னும் சத்தத்துக்கு விபரம். வாழையாகிய சீவாத்மா கட்டியாகிய சததிரிபாதவிவேகத்தைக்கொண்டு காரணகுரு கைகாட்டும்படியே கர்ப்பூரமும் சோதியும் கலந்தாற்போலவே தேனாகிய தலைவனுடன் ஐக்கியபதம் பெறுமல் எட்டியாகிய மாயாசமுசாரத்தை மருவியிருந்தபடியினாலே 'கட்டியும் தேனும் கலந்துண்ணமாட்டாதார்—எட்டிப்பழத்துக் கிளைக்கின்றவாறே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க

(இ—ள்) கொட்டியும் ஆம்பலும் பூத்த குளத்திடை — ஆன்மாவாகிய கொட்டியும் பதியாகிய ஆம்பலும் மலர்ந்திருக்கின்ற காயமாகிய குளத்தினிடத்து, எட்டியும் வேம்பும் இனியது ஓர் வாழையும்—மாயையாகிய எட்டியும் ஆணவமாகிய வேம்பும் திரோதன சத்தியாகிய இனியதொரு வாழையும் உள்ளன, கட்டியும் தேனும் கலந்து உண்ணமாட்டாதார்—உறுதியாகிய ஆம்பல் மலர்த்தேனும் (வாழைக்கனியும்) கலந்துண்டு அநுபவிக்க அறியாதார் (மாயாசம்பந்தமாகிய பொருளை அநுபவிப்பது: நல்ல தேனும் இனிய கனியுமிருக்க அவற்றை யுண்ணமாட்டாமல்), எட்டிப் பழத்துக்கு இளைக்கின்ற ஆறே — எட்டிப்பழத்தை யுண்ண விரும்பி அக்கனியைப் பெற வருந்துகின்றபடியேயாம் என்றவாறு.

•

உள்ளன என்பது இசை எச்சம். "கரிய ஆணவந் தேயுமா கலந்த நம் சத்தி" எனவும், "தூய இன்னருளாகியே நின்றிடும் தோகாய்" எனவும் கூறுவர்; ஆகலின், திரோதன சத்தியை 'இனியதோர் வாழை' என உருவகம் செய்தருளினர். கலந்துண்ண என்றதற்கியைய 'வாழைக்கனி' யையும் என வருவித்துரைக்கப்பட்டது. இத்திருப்பாட்டுக்கு வேறு வகையாகவும் சிலர் பொருள் கூறுவர்.

73 **முக்காத ஆற்றினின் மூன்றுள வாழைகள்**
**செக்குப் பழுத்துத் திரிமாங்கா யற்றது**
**அக்க ணரிக்காயி லடங்கினர் கன்னியர்**
**நக்கு மலரடி நடுவில் நின்றுனே.**

—2916.

—என்பது:—முக்காதமாவது அகார உகார மகாரம். ஆறுவது ஓங்காரம். விபரம் எந்தப்படி? என்றால், அகார உகார மகாரம் கூடி ஓங்காரமாகையினாலே ஓங்காரத்துக்கு முக்காத ஆறென்னும் நாமம் உண்டாச்சுது. அந்த ஓங்காரத்தில் இடைகலை பிங்கலை சுழுமுனை தோற்றுகையினாலே 'முக்காத ஆற்றினில் மூன்றுள வாழைகள்' என்னும் சத்தத்துக்கு விபரம். செக்காவது சீவாத்மா. விபரம் எந்தப்படி? என்றால், ஆங்காரத்தை உட்கொண்டிருந்தபடியினாலே சீவாத்மாவுக்குச் செக்கென்னும் நாமம் உண்டாச்சுது. செக்காகிய சீவாத்மா சத்திநிபாத விவேகத்தைக்கொண்டு தனுத்திரயம் பொய்யென உணர்ந்தபடியினாலே 'செக்குப்பழுத்துத் திரிமாங்காயற்றது' என்னும் சத்தத்

துக்கு விபரம். தனுத்திரயமாவது ஐம்பூதவடிவாகிய தூலதனு, சூக்குமதனுவாகிய புரியட்டகாயம், சுழுத்தியாகிய காரணதனு ஆகையினாலே கிரியாசத்தி இச்சாசத்தி ஞானசத்தி ஆதிசத்தி பராசத்தி ஆகப் பஞ்சசத்திகளும் தனுத்திரயத்துடன் காரணங்களும் பொய்யாகையினாலே 'அக்கணரிக்காயில் அடங்கினர் கன்னியர்' என்னும் சத்தத்துக்கு விபரம். சீவாத்மாவுக்குக் காரணகுரு கைகாட்டிய பொருள் சுருதி குரு சுவானுபூதிக்குப் பொதுவாக நின்றபடியினாலே 'நக்குமலரடி நடுவு நின்றானே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ-ள்) முக்காத ஆற்றினின் மூன்று உள வாழைகள்—அகார உகார மகாரம் ஆகிய முக்காதமும் கூடிய ஓங்காரமாகிய ஆற்றின் சம்பந்தத்துடன் தோன்றிய மூன்று வாழைகளாகிய இடைகலை பிங்கலை சுழுமுனைகள் உள்ளன. செக்கு பழுத்து திரிமாங்காய் அற்றது — ஆணவாதிகளைக்கொண்டு முற்றுணர்ச்சி முதலிய குணங்களும் வியாபகமுமின்றிக் கிடக்கையால் 'செக்கு' எனப் பெயர் கூறப்பட்ட ஆன்மா அவ் இடைகலை முதலியவற்றால் ஆகிய யோக முதிர்ச்சியால் சிவஞானம் முதிர மூன்று மாங்காயாகிய தனுத்திரயங்களின் சம்பந்தம் நீங்கப்பெற்றது. அக்கண் அரிக்கு ஆயில் அடங்கினர் கன்னியர் — நீங்கிய அவ்விடத்து ஆராயுங்கால் ஒளியாகிய சிவத்தில் பரை முதலிய பஞ்ச கன்னியர்களும் ஒடுங்கியிருந்தார்கள். நக்கு மலர் அடி நடுவில் நின்றானே—பூசைத்தானமாகிய இதய கமலமலரடி நடுவிலே (அச்சிவமாகிய பரமான்மா) விளங்கி நின்றான் என்றவாறு.

•

எனவே, அதில் கலப்புறுக என்பது எஞ்சி நின்றது. அக்கண் என வலித்தல் விகாரமாயிற்று. அரி—ஒளி, ஆயில்—ஆராயுமிடத்து, நக்கு—விளங்கி. சிவத்தில் சத்தி அடங்கலால் அரியிற் கன்னியர் அடங்கினர் என அருளினர். அரிக்கு என்பதில் குவ்வுருபு 'மணற்கீன்றமுளை' என்றதுபோல நின்றது. இத்திருப்பாட்டுக்கு வேறு வகையாகவும் பொருளுரைப்பர்.

74 **கூகையும் பாம்பும் கிளியொடு பூனையும்**
**நாகையும் புள்ளும் நடுவில் உறைந்தன**
**நாகையைக் கூகை நணுக லுறுதலும்**
**கூகையைக் கண்டெலி கூப்பிடு மாறே.**

— 2891.

— என்பது:— கூகைபாவது அஞ்ஞானம். பாம்பாவது காலசரம். கிளியொடு பூனைபாவது புண்ணிய பாவம். நாகைபாவது சித்தறிவு. புள்ளாவது மனதிகரணம். இவையெல்லாம் கூடின சந்தியில் சீவாத்மா அகப்பட்டதாகையினாலே சீவாத்மாவுக்கு எலி என்னும் நாமம் உண்டாச்சுது. ஆகையினாலே 'கூகையும் பாம்பும் கிளியொடு பூனையும் — நாகையும் புள்ளும் நடுவில் உறைந்தன' என்னும் சத்தத்துக்கு விபரம். நாகை என்னும் சித்தறிவை கூகை என்னும் அஞ்ஞானம் தொடர்ந்திருக்கையினாலே 'நாகையைக் கூகை நணுக லுறுதலும்' என்னும் சத்தத்துக்கு விபரம். ஆகையினாலே, சீவாத்மா சத்திநிபாத விவேகத்தைக்கொண்டு காரணகுரு கைகாட்டும்படியே

தன்னை வினையைத் தலைவனை விசாரித்துக்கொண்டபடி யினாலே 'கூகையைக் கண்டெலி கூப்பிடு மாறே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ—ள்) கூகையும் பாம்பும் கிளியொடு பூனையும் — கூகையாகிய ஆன்மாவும் பாம்பாகிய ஆணவமும் கிளியாகிய நல்வினையும் அதனொடு தீவினையாகிய பூனையும், நாகையும் புள்ளும் நடுவில் உறைந்தன——நாகையாகிய சிற்றறிவும் புள்ளாகிய மனமுதலிய அந்தக்கரணங்களும் என்று சொல்லப் படும் இவைகள் மாயையிடையே சந்தித்து உறைந்தன, நாகையை கூகை நணுகல் உறுதலும் – நாகையாகிய சிற்றறிவைக் கூகையாகிய ஆன்மாச் சேர்ந்த அளவிலே, கூகையை கண்டு எலி கூப்பிடும் ஆறே—(பந்தத்தில் அகப்பட்டுக்)கூகையைக்கண்டு நடுநடுங்கி எலி கதறுமாறு துன்புற்றுப் புலம்புவன் என்றவாறு.

கூகை பாம்பு கிளி பூனை நாகை புள் என்பன உருவகம். ஒருகால் அறிவு விளங்காமையும் ஒருகால் அறிவு விளங்கலு முடைமைபற்றி ஆன்மாவைக் கூகை எனவும், விடமுண்டவன் மயங்கி ஒன்றும் தோன்றாமல் கிடத்தல்போல ஆணவ மலத்தில் அழுந்தி மயங்கிக்கிடத்தலால் ஆணவத்தைப் பாம்பு எனவும்; மகிழ்ச்சியூட்டுவதால் நல்வினையைக் கிளி எனவும், அருவருப்பு முதலிய குணங்களுண்மையால் தீவினையைப் பூனை எனவும், அற்பவுணவை விரும்புதலுண்மையின் சிற்றறிவை நாகை எனவும், பயன் உள்ள இடங்தேடி அப் பயனை நுகரச் செல்லுதலின் அந்தக்கரணத்தைப் புள் எனவும் குறித்தருளினர்.

75 அற்ற வெளியில் அறப்பா ழதனில்
உற்ற பொருளின் உணர்வை அறியார்
உற்ற பொருளின் உணர்வை அறிந்தபின்
பெற்ற பொருளே பிறவா நெறியே.

— ......

— என்பது :— அற்ற வெளியாவது சத்திநி பாத விவேகம்: விவரம் எந்தப்படி ? என்றால், சத்திநி பாதம் முன்னிலையாக சிவதத்துவம் முதல் முப்பத் தாறு தத்துவமும் பொய்யாகையினாலே 'அற்ற வெளி யில் அறப்பாழதனில்' என்னும் சத்தத்துக்கு விபரம். உற்ற பொருளாவது சீவாத்மா. சத்திநிபாத விவேகத் தைக்கொண்டு காரணகுரு கைகாட்டும்படியே உணர் வாகிய பொருளை அறிந்தபின் அந்தச் சீவாத்மாவுக்கு இருவினைச் செனனம் ஒழியாதானபடியினாலே 'உற்ற பொருளின் உணர்வை அறிந்தபின் பெற்ற பொருளே பிறவாநெறியே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க

(இ—ள்) அற்ற வெளியில் அறப்பாழ் அதனில் உற்ற பொருளின்—(இருவகைப் பற்றும் இயல்பாகவே) அற்றிருக் கின்ற வெளியில் பெரும்பாழ் போல விளங்குதலுற்ற ஆனந் தப்பொருளாகிய சிவத்தை அறியும், உணர்வை அறியார் — உணர்வாகிய சிவஞானத்தை (அறிவில்லாதார் பலர்) அறிய மாட்டார்கள், உற்ற பொருளின் உணர்வை அறிந்தபின் — அங்ஙனம் உற்ற பொருளை அறியும் அவ் அத்துவிதமாகும் அறிவை அறிந்தபின், பெற்ற பொருளே பிறவா நெறி ஏ — அதனாற் பெற்ற பொருளாகிய சிவபோகமாம் பயனே முத்தி நிலையாம் என்றவாறு.

இனி, அறப்பாழ் என்பது — பெரும்பாழ். இதனைக் கவிராக்ஷஸ—ஸ்ரீ கச்சியப்பமுனிவர் திருவானைக்காப்புராணம் ஞானவுபதேசப்படலத்தில் "...மன்னுமுப் பாழும், ஒருவி மேற்பெரும் பாழெனும் உலப்பிலா னந்தப், பொருளோடேகமாய்ப் பொருந்திடும் முத்தா யிருந்தார்" என உணர்த்தியருளியது காண்க. முப்பாழ் என்பது மாயைப்பாழ் சீவப்பாழ் அருட்பாழ் என்பன. இதனைக் கடந்து நிற்கு நிலையே இங்குப் 'பெரும்பாழாகிய அறப்பாழ்' என்றுணர்க. இனி, போதப்பாழ், சீவப்பாழ், சிவப்பாழ் எனினும் ஆம். போதப் பாழாவது தத்துவரூபம் முதலிய மூன்றையும் அறிந்து பாழ் படுத்தி நீங்கல். சீவப்பாழாவது ஆன்மரூபம் முதலிய மூன்றையும் அறிந்து நீங்குதல். சிவப்பாழாவது சிவரூபம் முதலிய இரண்டனையும் அறிந்து நீங்குதல் என்க. இனி, "மாறுத சிவஞானப் பேறளிக்கும் வலியனைத்தும் வாவித் தாக்கிப், பாறுத வினைவலியும் முப்பாழுக்கப்பாலாம் பாழி னின்று, வேறுக வொருவுமவர் தாமன்றே யுலகமெலாம் விரியத் தோற்றும், ஆறுறும் கடந்ததிருத் தணிகைவரை யாற்குரிய அடிமையாவார்" என்பது திருத்தணிகைப்பதிற்றுப்பத்தந்தாதி — (செய்-70). 'முப்பாழும் பாழாய் முடிவிலொரு சூனியமாய்' எனக் கூறுவதும் காண்க. விரிந்த நூல்களிற் பரக்கக் காண்க: உபதேசமுறையால் இதனைத் தெளிந்துணர்க.

**76 ஆயத்துள் நின்ற அறுசமயத் தோரும்**
**காயத்துள் நின்ற கடவுளைக் கண்டிலர்**
**மாயக் குழியில் வழுவா மனைமக்கள்**
**பாசத்துள் நின்று பதைக்கின்ற வாறே.**

— 1530.

— என்பது:— அறுசமயத்தோரும் பொதுவாகிய பொருளை விசாரித்துக்கொள்ளாமல் ஆனையைப் பரிசித்த குருடர்போலவே வேற்றுமைப் புத்தியைக் கொண்டிருந்தாராகையினாலே 'ஆயத்துள் நின்ற அறுசமயத்தோரும்' என்னும் சத்தத்துக்கு விபரம். பாலின்கண் நெய்யிருந்தாற்போலவே காயத்துட் பொருளைக் காரணகுரு முன்னிலைபாகத் தேராமையினாலே 'காயத்துள் நின்ற கடவுளைக்கண்டிலர்' என்னும் சத்தத்துக்கு விபரம். மாயா சமுசாரத்தை மருவியிருந்தார் ஆகையினாலே 'மாயக்குழியில் வழுவா மனைமக்கள்' என்னும் சத்தத்துக்கு விபரம் மாயா சமுசாரசம்பந்தம் மருவி விடாதார்க்கு இருவினைச் செனனம் ஒழியாது ஆகையினாலே 'பாசத்துள் நின்று பதைக்கின்ற வாறே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ–ள்) ஆயத்துள் நின்ற அறுசமயத்தோரும் — கூட்டத்தினகத்தேயுள்ள அறுவகைப்பட்ட சமயத்தோர்களும், காயத்துள் நின்ற கடவுளை கண்டிலர் — காயத்தினுள்ளும் (பாலில் நெய்போலக்கலந்து மறைந்து) நிற்கின்ற கடவுளை(க்காணும் முறைப்படி) கண்டாரில்லை, (அங்ஙனம் காணாமையால்) மாயம் குழியில் — மாயமாகிய பிறவிக்குழியினின்று, வழுவா — தவறாமல் (அழுந்திக்கிடக்கின்ற), மனைமக்கள் பாசத்துள் நின்று பதைக்கின்ற ஆறே — மனைவி மக்களாகிய பாசத்தினுள்ளே அகப்பட்டு(க்கிடந்து) நடுங்குகின்றவாறுயிற்று என்றவாறு.

அறுசமயம் — அறுவகைச்சமயம் என்க. பாடாண வாத சைவ முதல் சிவாத்துவிதசைவம் ஈறாகவுள்ள அகச் சமயம் எனினும் ஆம். இனி, மாவிரதம் முதலிய அகப்புறச் சமயம் எனினும் ஒக்கும். "அறுவகைச் சமயத்தோர்க்கும் அவ்வவர் பொருளாய் வேறும் — குறியது வுடைத்தாய்" நிற்கும் பரம்பொருளை 'ஆனைகண்ட குருடர்போல்' கண்டு உரைத்தாராகலின் கண்டிலர் என்று அருளினர். மனை மக்களைக் கூறவே இனம்பற்றித் தந்தை தாய் உடன்பிறந்தார் முதலியோரையும் கூறியதாகக்கொள்க. இதனை, "தந்தையார் தாயாருடன் பிறந்தார் தாரமார் புத்திரரார் தாந்தா மாரே — வந்தவா றெங்ஙனே போமா றேதோ மாயமாம்" எனத் திருநாவுக்கரசுசுவாமிகள் தேவாரத்து அருளிச்செய்தமையும் காண்க.

77 கத்தும் கழுதைகள் போலும் கலாதிகள்
சுத்த சிவமெங்கும் தோய்வுற்று நிற்கின்ற
குற்றம்தெரியாமல்குணங்கொண்டுகோதாட்டிப்
பித்தேறி நாளும் பிறந்திறப் பாரே.
— 1538.

— என்பது :— பயனறியாமல் கழுதை கத்துகிறாப்போலவே அறுசமயத்தோரும் பொதுவாகிய பொருளை விசாரித்துக்கொள்ளாமல் வேற்றுமைச் சமயத்தைக்கொண்டிருந்தார் ஆகையினாலே 'கத்துங் கழுதைகள் போலும் கலாதிகள்' என்னும் சத்தத்துக்கு விபரம். காரணகுரு முன்னிலையாகப் பொதுவாகிய பொருளை விசாரித்துக்கொள்ளாமையினாலே 'குற்றம் தெரியாமல் குணங்கொண்டு கோதாட்டி' என்னும்

சத்தத்துக்கு விபரம் பொதுவாகிய பொருளைக் காரணகுரு கைகாட்டும்படியே விசாரித்துக்கொள்ளாதார்க்கு இருவினைச் செனனம் ஒழியாது ஆகையினாலே ‘பித்தேறி நாளும் பிறந்திறப்பாரே’ என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ-ள்) கத்தும் கழுதைகள் போலும் கலாதிகள் — கலையாதி மண் அந்தமாகிய அவைகள் எல்லாம் ஒரு பயனும் இல்லாமல் கத்துகின்ற கழுதைகளைப்போல இழிந்தனவாம், சுத்த சிவம் எங்கும் தோய்வுற்று நிற்கின்ற(து) — நின்மலமாக விளங்கும் பரசிவம் பாலில் நெய்போல அறியப்படாமல் எங்கும் கலந்து நிலைபெற்றுள்ளது, (குரு திருவருளால் அதனைத் தெரிந்து தெளியாமல் அக்கலையாதி மண் அந்தமான தத்துவங்களையே பற்றிநின்று) குற்றம் தெரியாமல் குணம் கொண்டு கோதாட்டி — குற்றமென்று களையாமல் குணமாகவே கொண்டு பாராட்டி, பித்து எறி — மயக்கம் மிகப்பெற்று, நாளும் பிறந்து இறப்பாரே — எந்நாளும் வீணாகப் பிறந்திறந்து கழிவரே என்றவாறு.

இஃதோர் கொடுமையிருந்தவாறு எவன்? என்பது எஞ்சி நின்றது. இதனை, “கலையாதி மண்ணந்தம் காணிலவை மாயை, நிலையாவாம் தீபமே போல — அலையாமல், ஞானத்தை முன்னுணர்ந்து நாடில் அது தனுவாம், தானத்தின் வேறாகும் தான்” என்னும் சிவஞானபோதம்—மூன்றாம் சூத்திரம் எழாம் அதிகரணத்து உதாரணவெண்பாவானுணர்க.

78 பாம்பு மதியைத் தினலுறு மப்பாம்பு
தீங்குக் கதிரையும் சேரத் தினலுறும்
பாம்பு மதியும் பகைதீர்த் துடன்கொளின்
நீங்கல் கொடானெம் நெடுந்தகை யானே.
— 871.

— என்பது :— பாம்பாவது காலசர்ப்பம்: மதியாவது சீவாத்மா: விபரம் எந்தப்படி? என்றால், காலசர்ப்பம் சீவாத்மாவைத் தொடர்ந்திருக்கையினாலே 'பாம்பு மதியைத் தினலுறும்' என்னும் சத்தத்துக்கு விபரம் தீங்குக்கதிராவது சீவாத்மாவினுடைய புத்தி. விபரம் எந்தப்படி ? என்றால், காலசர்ப்பம் சீவாத்மாவினுடைய புத்தியை ஒக்கத் தொடர்ந்திருக்கையினாலே 'அப்பாம்பு தீங்குக் கதிரையும் சேரத் தினலுறும்' என்னும் சத்தத்துக்கு விபரம். ஆகையினாலே காரணகுரு சீவாத்மாவைத் தொடர்ந்த காலசர்ப்பத்தின் பகை தீர்த்து நீரும் நீர்க்குமிழியும் கலந்தாற்போலவே நிராமய பூரணத்தில் ரகசியபதம் கொடுத்தபின் சீவாத்மாவுக்கு இருவினைச் செனனம் ஒழிந்தபடியினாலே 'பாம்பும் மதியும் பகைதீர்த் துடன்கொளின், நீங்கல் கொடான் எம் நெடுந்தகை யானே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ—ள்) பாம்பு மதியை தினல் உறும் — பாம்பாகிய ஆணவமலம் அறிவாகிய ஆன்மாவை விழுங்கலுறும், அ பாம்பு தீங்கு கதிரையும் சேர தினல் உறும் — (அத்துடன் அமையாது) அப்பாம்பானது தீங்குக்கதிராகிய பசுஞானத்தையும்

உடன் தின்னும், பாம்பும் மதியும் பகைதீர்த்து உடன் கொள்ளின்—(ஞானசாரியருடைய அநுக்கிரகத்தைப்பெற்று நின்று) அவ்வாணவமும் ஆன்மாவும் அநாதியே பற்றியுள்ள பகையைத் தீர்த்து அடக்கும் முறையிலே அடக்கி அத்துவித பாவனையைச் செய்யின், நீங்கல் கொடான் எம் நெடுந்தகையோனே — உயர்ந்த பண்பையுடைய பரசிவன் தன்னை விட்டு நீங்குதலைச் செய்யான் என்றவாறு.

"நெல்லிற்குமியும் நிகழ்செம்பினிற்களிம்பும், சொல்லிற் புதிதன்று தொன்மையே—வல்லி, மலகன்மம் அன்றுளவாம்" என்றருளியபடி ஆணவமலம் அநாதியே ஆன்மாவைப் பற்றியுள்ளதென்றறிக. "சிந்தைதனில் அர்ச்சிக்கச் சிவனை ஞானத்தால் சிந்திக்கச் சிந்திக்கத் தர்ப்பணத்தை விளக்க, வந்திடுமவ் வொளிபோல மருவியா னுளத்தே வரவாவந் திடுவன்பின் மலமான தறுமே" எனவும், "தெரிவரிய மெய்ஞ் ஞானம் சேர்ந்த வாறே சிவம்பிரகா சிக்குமிங்கே சீவன் முத்தனாகும் – உரியமலம் ஔடதத்தால் தடுப்புண்டவிடமும் ஒள்ளொளியின் ஒளிமுன்னர் இருளும் தேற்றின் — வருபால் சேர் நீர்மருவு கலங்கலும்போ லாகி மாயாதே தன்சத்தி மாய்ந்து காயம் — திரியுமள வும்முளதாய்ப் பின்பு காயம் சேராத வகைதானும் தேயுமன்றே" எனவும் வரும் திருவிருத்தங்களால் மலவலிகெடலுணர்க.

**79 திகைக்கின்ற சிந்தையுட் சிங்கங்கள் மூன்றும்**
**நகைக்கின்ற நெஞ்சில் நரிக்குட்டி நாலும்**
**அசைக்கின்ற நெஞ்சினுள் ஆனைக ளைந்தும்**
**பகைக்கின்ற நெஞ்சிற் பகையிவ ராமே.**
— 2214.

—என்பது:— சிங்கங்கள் மூன்ருவது முக்குணம். நரியாவது உள்ளம். குட்டிகளாவது மறைதி அந்தக் கரணம். ஆனைகள் ஐந்தாவது ஐம்புலாதிகள். ஆகையினலே, தன்னையும் தலைவனையும் அறியாத சித்தறிவுக்கு இவையெல்லாம் பகைவர் ஆகையினலே 'திகைக்கின்ற சிந்தையுட் சிங்கங்கள் மூன்றும், நகைக்கின்ற நெஞ்சில் நரிக்குட்டி நாலும், அசைக்கின்ற நெஞ்சினுள் ஆனைகள் ஐந்தும், பகைக்கின்ற நெஞ்சிற் பகையிவராமே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ—ள்) திகைக்கின்ற சிந்தையுள் — பந்தமுற்றுத் திகைப்பையடைகின்ற ஆன்மாவில், சிங்கங்கள் மூன்றும் — சிங்கங்களாகிய முக்குணங்களும் உள்ளன, நகைக்கின்ற நெஞ்சில் நரிக்குட்டி நாலும் — (மற்றும்) அவ்ஆன்மாவிலே நரிக்குட்டிகளாகிய அந்தக்கரணங்கள் நான்கும் விளங்குவன ஆம், அசைக்கின்ற நெஞ்சினுள் ஆனைகள் ஐந்தும் — அன்றியும், வேதனையுறுகின்ற அவ்வான்மாவினிடத்து ஆனைகளாகிய ஐம்பொறிகளும் பகைக்கின்றனவாம், பகைக்கின்ற நெஞ்சில் பகைஇவர் ஆம் ஏ — ஆகலின் அவ்வான்மாவுக்கு (முக்குணங்களும் அந்தக்கரணங்களும் ஐம்பொறிகளும் ஆகிய) இவைகளெல்லாம் பகையாகவே அமைந்துள்ளன என்றவாறு.

ஆகலின், இவற்றை அறிந்து ஞானசாரியரின் அநுக்கிரகத்தைப்பெற்று அப்பகைகளை வென்று மேம்படுவதே அறிவுடையோர் கடனும் என்க. பொறிகள் அந்தக்கரணங்களுக்கு மேற்பட்டு மூலப்பிரகிருதியின் தோற்றமாகலின் முக்குணத்தைச் சிங்கம் எனவும், சேட்டை செய்து வஞ்சிப்பதனல் அந்தக்கரணத்தை நரிக்குட்டி எனவும், களிப்புற்றுத்

திரிவதனால் பொறிகளை யானைகள் எனவும் உருவகம் செய்தருளினர். ஆன்மாவைச் 'சிந்தை' என்றார். இதனை, "சிந்தையைச் சீவனென்றும் சீவனைச் சிந்தையென்றும்" எனவரும் சிவஞானசித்தியார் (சூத்-4, செய்-28) திருவிருத்தத்தால் அறிக.

**80 தண்டுட னோடித் தலைப்பெய்த யோகிக்கு**
**மண்டலம் மூன்றும் மகிழ்ந்துட னைத்திடும்**
**கண்டவர் கண்டனர் காணார் வினைப்பயன்**
**பிண்டம் பிரியப் பிணங்குகின் றாரே.**

— 752.

— என்பது : - தண்டாவது சத்திநிபாத விவேகம்: விபரம் எந்தப்படி? என்றால், சீவாத்மா சத்திநிபாத விவேகத்தைக்கொண்டு காரணகுரு கைகாட்டும்படியே நிராமயபூரணத்தில் நீரும்நீர்க்குமிழியும் கலந்திருந்தாற்போலவே ரகசியபதம் பெற்றபின் நாதம் தலைவன் வசமாகையினாலே 'தண்டுடனோடித் தலைப்பெய்த யோகிக்கு - மண்டலம் மூன்றும் மகிழ்ந்துட னைத்திடும்' என்னும் சத்தத்துக்கு விபரம். கண்டவர் இந்தப்படி கண்டனர், காணாதார்க்கு இருவினைச் செனனம் ஒழியாதாகையினாலே 'கண்டவர் கண்டனர் காணார் வினைப்பயன் — பிண்டம் பிரியப் பிணங்குகின்றாரே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ—ள்) தண்டுடன் ஓடி தலைபெய்த யோகிக்கு — ஆதாரமாய் நின்று விளங்கும் தண்டாகிய சிவசத்தி துணை

*யாகச்சென்று சிவபரம்பொருளைக் கலந்தநுபவிக்கும் சிவயோகிகளுக்கு, மண்டலம் மூன்றும் மகிழ்ந்து உடன் ஒத்திடும் — சந்திரமண்டலம் சூரியமண்டலம் அக்கினிமண்டலம் ஆகிய இம்மூன்று மண்டலங்களும் தம் வசமாகையினாலே அவை மாறுபடாமல் இனிமையுற்று இசைந்திருப்பனவாம், (ஞானாசாரியருடைய அநுக்கிரகத்தைப்பெற்று அதனை நன்குணர்ந்து) கண்டவர் கண்டனர் — அவ்வாறு கண்டறிந்த அவரே சிவத்தைக்கண்டு கலந்து அநுபவித்தவராவார், காணார் வினைப்பயன் — அச்சிவயோகிகள் (சரீரத்தோடு கூடியிருப்பினும்) இருவினைப்பயனை அநுபவித்தறியார், பிண்டம் பிரிய பிணங்குகின்றார் ஏ — (அவ்வாறு சிவத்தை அறியப்பெறாதவரே) வினைப்பயனாகிய (சரீரத்தில் அகப்பட்டு வருந்திப் பின்) அச்சரீரம் நீங்கும் காலத்திலும் பெரிதும் துன்புறுவார் என்றவாறு.*

*சிவத்தைக்கலந்து அநுபவித்து இன்புறும் சிவயோகிகளுக்கு அநுபவிக்கக் கடவனவாகிய வினைப்பயன்கள் பொருந்தமாட்டாமையால் 'காணார் வினைப்பயன்' என்றருளிச் செய்தார். பிண்டம் — சரீரம். 'மகிழ்ந்துடலொத்திடும்' எனப் பாடம் கொள்ளுவர் சிலர். அது பொருட்சிறப்பின்மையால் பாடம் அஃதன்றென்பர் பெரியோர்.*

**81 பத்துப் பரும்புலி யானை பதினைந்து**
**வித்தகர் ஐவர் விநாயகர் ஈரெண்மர்**
**அத்தகு மூவர் அறுவர் மருத்துவர்**
**அத்தலை ஐவர் அமர்ந்துநின் றாரே.**

— 2888.

— என்பது :— பத்துப்பரும் புலியாவது தச நாடி. விபரம் எந்தப்படி? என்ருல் இடைகலே, பிங் கலே, சுழுமுனே, காந்தாரி, அத்தி, சிங்குவை, அலம் புடை, புருஷன், குகு, சங்குனி ஆக நாடி பத்தின் உள்விபரம் எந்தப்படி ? என்ருல், இடைகலே சந்திர நாளம், பிங்கலே சூரியநாளம், சுழுமுனே மத்திமநாளம், காந்தாரி வலது நேத்திரம், அத்தி இடது நேத்திரம், புருஷன் வலதுசெவி நாளம், சங்குனி இடதுசெவி நாளம் [பயோசனி என்பது பிரதிபேதம்] அலம்புடை நேத்திரநாளம், குகு மார்பினிற்கும், சங்கினி நாவிற ளம். யானேகள் பதினேந்தாவது வாயு. விபரம் எந்தப் படி? என்ருல், பிராணன் அபானன் உதானன் வியானன் சமானன் நாகன கூர்மன் கிரிகரன் தேவதத் தன் தனஞ்செயன் இவை பத்தும்: முக்கியன் பிரபஞ்ச னன் வயிரம்பு அந்தரியாமி மகாப்பிராணன் இவை அஞ்சுமாம். இவைகளுக்கு உள்விபரம் எந்தப்படி ? என்ருல், பிராணவாயு-இந்திரநீலவர்னம்; இருதயத் தானத்திலேயிருந்து அங்குஷ்டமுதலாக ரோமாக்ர பரியந்தமளவும் நின்று உச்சுவாச நிச்சுவாசமுண்டாக்கி அன்னரசத்தை சீரணத்துக்கு வரப்பண்ணும். அபான வாயு—அரிதவர்னம்; குதத்தானத்திலேயிருந்து மல மூத்திரங்களேக் கழித்துக் குதத்துவாரத்தை இறுக்கிப் பிடித்து அன்னரசத்தைக்கொண்டு வியாப்தி செய் திருக்கும். உதானவாயு-மின்னிறம். கண்டத்தானத் திலேயிருந்து தும்மல் இருமல் உண்டாக்கிக் கனைக் காணும்; எழுந்திருக்கும் சரித நிரோதனங்களும்

செய்யும். அன்னரசத்தை ஆகாரம் செய்வித்துக் கொண்டிருக்கும். வியானவாயு—பால் நிறம். சர்வ சந்திலுமிருந்து நீட்டுதல் முடக்குதல் செய்து அன்ன பானத்தை நிறைப்பிக்கும் சமானவாயு - நீல வர்னம். நாபித்தானத்திலேயிருந்து பாதமுதல் மத்தகபரியந்த மளவும் நிறைந்திருக்கிற அன்னரசத்தை யெல்லாம் ரோமநாமங்களிலும் பகுந்துகொண்டிருக்கும். நாகன் வாயு—பீதவர்னம். ரோமநாமங்களிலேயிருந்து சலன மலனமில்லாமல் ஆட்டிக்கொண்டிருக்கும். கூர்மன்—சுவேதவர்னம். உதரம்முதல் ...தானத்திலேயிருந்து சரீரத்தைப் புஷ்டிபூரணம் செய்வித்தும், வாய்மூடித் திறந்தும், கண் விழிக்கவும் மூடவும் செய்துகொண்டிருக்கும். கிரிகரன்—அஞ்சனவர்னம். நாசிபக்கிரத் திலேயிருந்து கமனகமனம் செய்துகொண்டிருக்கும். தேவதத்தன்-படிகவர்னம் குய்பம் குதத்தானத்திலே யிருந்து சயனம் செய்தவனை எழுந்திருக்க நிறுத்தத் தெளிவிக்க வசனிப்பிக்கச் செய்துகொண்டிருக்கும். தனஞ்செயன் - நீலவர்னம். பிரமரந்திரத்தானத்திலே யிருந்தும் கன்னத்திலேயிருந்தும் சமுத்திரகோஷமும் கோஷித்துக்கொண்டிருந்து மரணகாலத்திலே நிஷ் கோஷமாகி அச்சரீரத்தை வீக்கித் தலைகிழித்து நீங் கும். முக்கியன் பிரபஞ்சனன் வயிரம்பு அந்தர்யாமி மகாப்பிராணன் இவை அஞ்சுவாயுவும் உள்ளம் முதல் மனதிகரணத்துக்கு பிரேரகாண்டமாயிருக்கும் ஆகை யினலே, 'பத்துப் பரும்புலி யானை பதினைந்தும்' என் னும் சத்தத்துக்கு விபரம்.

வித்தகர் ஐவராவது சோத்திராதி இந்திரியம் விபரம் எந்தப்படி? என்றால், சோத்திர இந்திரியத்துக்கு ஆகாசம் மகாபூதம்......அதிதேவதை, தெசதிக்கு, சத்தம் விடயம், அட்சராரமாய் அனட்சராரமாய் இவை சத்தபேதம். ஆகமம் புராணம் சாஸ்திரம் காவியம் ஆக இவை அட்சராரம். கயிலாச வீணை சுரமண்டலம் ருத்திரவீணை கின்னரி ராவணாஸ்தம் நாகசுரம் கோவுபட்சி முதலான சத்தமே அனட்சராரம். இனி, தொக்கு இந்திரியத்துக்கு வாயு மகாபூதம். சந்திரன் அதிதேவதை. பரிசம் விடயம். கடினம் மிருது உட்டினம் சீதம் சயித்தியம் இவை அஞ்சும் பரிசபேதம். நேத்திர இந்திரியத்துக்கு அக்கினி மகாபூதம். சூரியன் அதிதேவதை. ரூபம் விடயம். பீதம் சுவேதம் ரத்தம் அரிதம் கிருட்டினம் இவை அஞ்சும் ரூப பேதம். சிங்குவை இந்திரியத்துக்கு அப்புமகாபூதம். வருணன் அதிதேவதை, இரதம் விடயம், மதுரம் துவர்ப்பு கசப்பு புளிப்பு எரிப்பு இவை அஞ்சும் இரதபேதம். ஆக்கிராண இந்திரியத்துக்குப் பிருவிதி மகாபூதம். அச்சுவினி அதிதேவதை. கந்தம் விடயம். சுகந்தம் துர்க்கந்தம் இவையிரண்டும் கந்தபேதம்.

விநாயகர் ஈரெண்மராவது — அந்தரங்கத்தட்டமதம்: விபரம் எந்தப்படி? என்றால், சங்குத்திதம் திருணீகிருதம் வர்த்தினி குரோதினி மோகினி அதிசாரிணி வாசினி ஆக இவை எட்டுக்கும் உள்விபரம் எந்தப்

படி? என்றால், நானாவித சங்கைகளும் மனத்திலே உட் கொண்டிருந்தும் அந்தச்சங்கையே விளங்கக் கேட்டுக் கொண்டிருந்தும் குருவிசுவாசமில்லாததே 'சங்யுத்தித மதம். திருணீகிருதமதம் ஏதென்னில்? நானாவித சங்கைகளையும் மனத்திலே வைத்துக்கொண்டு தான் அபிமானம் பிடித்துக்கொண்டு நல்லோர் பெரியோர் சொல்லப்பட்ட ஞானசாஸ்திரத்தைத் தள்ளித் தான் சொன்னதே மேலானபொருள் என்பதே 'திருணீகிருத' மதம். வர்த்தினி மதம் ஏதென்னில்? நான் செய்யப் பட்ட தொழிலுக்குப் பிரமாதிகளும் சமர்த்தர் அல்லர் என்று அவர்த்தம் செய்கிறதே 'வர்த்தினி' மதம். குரோதினி மதம் ஏது? என்னில், எக்காலமும் இராகத் துவேஷம் என்கின்ற அந்தகாரமாகிய தாமத ஆங்காரத் திலே முழுகி ஆசாரியர்முதல் சகல தேவர்களையும் தூஷணம் பண்ணுகிறதே குரோதினிமதம். மோகினி மதம் ஏது? என்னில்-மனததில் புத்திர மித்திர களத் திராதிகளில் மோகம்; யான் எனது என்கிறதே மோகினி மதம். அதிசாரணி மதம் ஏது? என்னில், தன்னிடத் திலே சுத்தமில்லாமல் சுத்தமாகவே நல்லொழுக்கத் தோடே இருக்கிற பெரியோர்களைக் கணியாமல் இருக் கிறதே அதிசாரணிமதம். டம்பாச்சாரிணிமதம் ஏது? என்னில், சிரத்தையுமில்லாமல் விசுவாசமும் இல்லா மல் பெருமை மிகத் தன்னை நன்கு மதிப்பதே டம்பாச் சாரிணிமதம். வாசினிமதம் ஏது? என்னில், எக்கால மும் துர்வாசமும் ஆடம்பர விடயங்களிலே மனமும் சந்தோஷம் முற்றுமில்லாததே வாசினிமதம்.

இனி, பகிரங்கத்து அட்டமதவிபரம் எந்தப்படி? என்ருல்,குலம் சலம் உறுப்புயெளவனம் வித்தைஇராச்சியம் தவம் ஆக இவைக்கு உள் விபரம் எந்தப்படி? என்ருல், குலமதம் ஏதென்னில்? தன்னுடைய குலம் மேலான குலம் என்றும் தான் எல்லார்க்கும் அதிகன் என்றும் அந்நிய குலத்தையெல்லாம் பழிக்கிறதே குல மதம். சலமதம் ஏதென்னில்? தான் சொல்லுகிற சொல்லே திடமென்று சத்தியசாத்திரங்கள் சொல்லுகிறதின் பேரிலே மனம் கொள்ளாதிருக்கிறதே சல மதம். ரூபமதம் ஏதென்னில்? தன்னுடைய ரூபத்துக்கு மன்மதனும் சரியல்ல அவ் அனங்கன் என்று தன்னை நன்கு மதிப்பதே ரூபமதம். யெளவனமதம் ஏதென்னில்? தன்னுடைய யெளவனபோகம் இந்திராணியைப் புணரப்பட்ட இந்திரனுக்கும் இல்லை என்பதே யெளவனமதம். வித்தை மதம் ஏதென்னில்? நான் சகல வித்தைக்கும் வல்லவன் என்று நல்ல சற்புருஷரைச் சற்றும் கணியாமல் தான் சொல்லுகிற டம்பமான வார்த்தைக் கெர்விதமே வித்தைமதம். இராச்சியமதம் ஏதென்னில்? தன்னுடைய ராச்சிய போகத்தையே மிகவும் வியாபரித்துக்கொண்டு தேவேந்திரபோகம் முதலான எல்லாருடைய போக மதங்களையும் திரணீகரித்துப் பாவ புண்ணிய மிரண்டையும் அறியாமல் கெர்ச்சிதமாய் இருக்கிறதே இராச்சியமதம். தவமதம் ஏதென்னில்? தன்னுடைய தவத்தின் மதத்தினலே சகல தேவாதிகளையும் உதாசினம் பண்ணிச் சாபம் கொடுப்பேன் என்கிறதே தவமதம் ஆகை

யினாலே, 'வித்தகர் ஐவர் விநாயகர் ஈரெண்மர்' என்னும் சத்தத்துக்கு விபரம். அத்தகு மூவராவது சத்துவ குணம் இராசதகுணம் தாமதகுணமாம். இவைகளுக்கு விபரம் எந்தப்படி? என்றால், சத்துவகுணம் சுவேத வன்னம். இராசதகுணம் ரத்தவன்னம் தாமதகுணம் கறுப்புவன்னம். இவைக்கு விபரம் எந்தப்படி? என்றால்—சத்தியம், ஞானம், தவம், மௌனம், சந்தோஷம், தன்மம், க்ஷமை, சாமர்த்தியம், நிச்சயம், தைரியம், விவேகம் இவை சத்துவகுண லட்சணம். கெர்வம், குரோதம், ஆங்காரம், விஷயம், அப்பிரிய வாசகம், உத்தியோகம், மச்சரம், அச்வகம், மந்தமதி, உரோசம் இவை இராசதகுணலட்சணம். அஞ்ஞானம், மோகம், நித்திரை, சாபல்லியம், ஈனவிருத்தி, பர நிந்தை, ஈங்கிஷேபாபிஷம், கெட்டுரம், துர்ப்புத்தி இவை தாமதகுணலட்சணம். இனி, அறுவர் மருததுவ ராவது காமக் குரோத லோப மோக மத மாற்சரியம். இவைக்கு உள்விபரம் எந்தப்படி? என்றால், யாவை யும விரும்பி வேண்டுகிறதே காமம் விரும்பின பதார்த்தம் வாராமலிருந்தால் மனத்திலே துக்கம் செய் கிறதே குரோதம் தான் தேடின பொருளைச் சற் பாத்திரம் அறிந்து கொடாமல் இருக்கிறதே லோபம் கண்டகண்ட பதார்த்தத்தை இச்சிக்கிறதே மோகம். தன்னை வியந்துகொண்டு ஒருவரையும் கெணியாம லிருக்கிறதே மதம். ஒருவர் மேல் சலம் சாதிப்பன் என்கிறதே மாற்சரியம். ஆகையினாலே, 'அத்தகு மூவர் அறுவர் மருத்துவர்' என்னும் சத்தத்துக்கு

விபரம அத்தலை ஐவராகிப பஞ்சபூதம் முதலி ... லோரும் ...... சீவாத்மாவுக்குக் காயமாக அமர்ந் திருந்தார்: ஆகையினாலே, 'அத்தலை ஐவர் அமர்ந்து நின்றாரே' என்னும சத்தத்துக்கு விபரம் என்க.

(இ—ள்) தச வாயுக்களாகிய பத்துப் பரும்புலியும், தன் மாத்திரையும் ஞானேந்திரியமும் கன்மேந்திரியமு மாகிய பதினைந்துயானைகளும், இவற்றைப் பிரேரித்து நிற்கின்ற சிவதத்துவங்களாகிய வித்தகர் ஐவரும், அவத்தையும் திரி காலமும் ஆகிய விசேடமுள்ள நாயகர் எண்மரும், அத் தன்மையுள்ள முக்குணமாகிய மூவரும், ஆறு தாரங்களாகிய ஆறு மருத்துவரும் அவ்விடத்துக்குமுன் உரிய ஐவகைப்பாச மாகிய ஐவரும் (பிண்டத்தள்ளே) தங்கிநின்றார் என்றவாறு.

இங்ஙனமே இவற்றைப் பகுத்தறிந்து இவற்றின் இயல்பை உணர்ந்து கொள்க என்பது எஞ்சி நின்றது. இம்மந்திரத்திலே குறித்தஉருவகத்திலே திணைவிரவி மிகுதி பற்றி நின்றார் என உயர்திணைமுடிபு எற்றமை காண்க. வாயு வாகிய புலியாதிகளை ஆறு தாரங்களாகிய மருத்துவரைக் கொண்டுவெல்லவேண்டும் எனக் கூறியருளியதாகக்கொள்க. தசவாயு முதலியவற்றின் இயல்புகளை யெல்லாம் ஞானமிர் தக்கட்டளை முதலிய சித்தாந்தக்கட்டளைகளிற் காண்க.

82 முன்னிக் கொருமகன் முத்திக் கிருவராம்
வன்னிக்கு மூவர் வதுவைக்கு நால்வர்
கன்னிக்கு வைவர்மின் ஞளில்லை கன்னியை
கன்னிக்குக் கன்னி காதலித் தாளே
—2152.

— என்பது :— முன்னியாவது ஆகாசம், முத்தியாவது வாயு, வன்னியாவது தேயு, வதுவையாவது அப்பு, கன்னியாவது பிருதிவி. ஆகையினலே பிருதிவியாதி பஞ்சபூதத்து மின்னளில்லாமல் தன்னில் தான் கூடிச் சத்த தன்மாத்திரை உற்பத்தியாச்சுது. விபரம் எந்தப்படி? என்றால், பிருதிவியில் ஆகாசம் சத்தம்; பிருதிவியில் வாயு பரிசம், பிருதிவியில் தேயு ரூபம், பிருதிவியில் அப்பு ரசம், பிருதிவியில் பிருதிவி கந்தம்; அப்புவில் ஆகாசம் சத்தம், அப்புவில் வாயு பரிசம், அப்புவில் தேயுரூபம், அப்புவில் அப்புரசம்; தேயுவில் ஆகாசம் சத்தம், தேயுவில் வாயு பரிசம், தேயுவில் தேயு ரூபம்; வாயுவில் ஆகாசம் சத்தம், வாயுவில் வாயு பரிசம்; ஆகாசத்தில் ஆகாசம் சத்தம் உற்பத்தியாகையினலே 'முன்னிக்கு ஒருமகன் முத்திக் கிருவராம் — வன்னிக்கு மூவர் வதுவைக்கு நால்வர் — கன்னிக்கு ஐவர்மின் னளில்லை கன்னிைக் — கன்னிக்குக் கன்னி காதலித் தாளே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ—ள்) முன்னிக்கு ஒருமகன்—ஆகாசம் ஆகிய முன்னி என்பவளுக்கு சத்தம் ஆகிய ஒரு மகன் (ஆம்), முத்திக்கு இருவர் ஆம் — வாயுவாகிய முத்தி என்பவளுக்கு சத்தம் பரிசம் ஆகிய இரண்டு பிள்ளைகளாம், வன்னிக்கு மூவர் — அக்கினியாக வன்னி என்பவளுக்கு சத்தம் பரிசம் ரூபம் ஆகிய மூன்று பிள்ளைகளாம், வதுவைக்கு நால்வர் (ஆம்) — அப்புவாகிய வதுவை என்பவளுக்கு சத்தம் பரிசம் ரூபம் ரசம் ஆகிய நான்கு பிள்ளைகளாம், கன்னிக்கு ஐவர்—பிருதிவி

யாகிய கன்னி என்பவளுக்கு சத்தம் பரிசம் ரூபம் ரசம் கந்தம் ஆகிய ஐந்து பிள்ளைகளாம், மின் ஆள் இல்லை கன்னியை — மின்னற்கொடிபோன்ற இம்மாதர் ஐவருக்கும் ஆளுதற்குரிய நாயகர்கள் இல்லை. ஆகையால், கன்னிப்பருவத்துடனேயே இவர் இருக்கின்றனர், கன்னிக்கு கன்னி காதலித்தாள் ஏ — (ஆயினும், இவர்கள் ஐவரும் மகவீன்றமை எவ்வாறு? என்னில்,) கன்னியைக் கன்னி கூடிப் பெற்றனர் என்றவாறு.

இந்த வியப்பு உணர்க என்பது எஞ்சி நின்றது.

83 அநாதி சொரூபி யாகிய வான்மாத்
தனாதி மலத்தால் தடைபட்டு நின்றன
தனாதி மலமும் தடையற நீங்கில்
அநாதி சிவத்துடன் ஒன்றான வாறே.

—......

— என்பது :— சீவாத்மாவை ஆராய்ந்து விசாரிக்குமளவில், சீவாத்மா அநாதியில் சித்தாங்கிச மாகையினாலே 'அநாதி சொரூபியாகிய ஆத்மா' என்னும் சத்தத்துக்கு விபரம். தனாதிமலமாவது மாயை. விபரம் எந்தப்படி? என்றால், கிளிஞ்சியில் வெள்ளி என்னும் கற்பனை காட்டிறைப்போலவும், நிராமய பூரணத்தில் மாயை கற்பனை; ஆகையினாலே, மாயைக்குத் 'தனாதிமலம்' என்னும் நாமம் உண்டாச்சுது. ஆகையினாலே தனாதிமாயா சம்பந்தமாகிய காயத்துடன் சித்தாங்கிசம் தோய்ந்து சீவாத்மா என வேற்றுமைப்பேர் கொண்டிருந்தபடியினாலே 'அநாதி சொரூ

பியாகிய ஆத்மாத் தனுதிமலத்தால் தடைபட்டு நின்றன' என்னும் சத்தத்துக்கு விபரம். அந்தச்சீவாத்மாவுக்குக் காரணகுரு மாயா சம்பந்தியாகிய தத்துவம் முப்பத்தாறும் விடப்படுத்திக் கர்ப்பூரமும் சோதியும் கலந்தாற்போலவே ஆட்கொண்ட பரிபூரணத்தில்ரகசிய பதம் பெற்றபடியினலே 'தனுதிமலமும் தடையற நீங்கில் அநாதி சிவத்துடன் ஒன்ருனவாறே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ-ள்) அநாதி சொரூபி ஆகிய ஆன்மா—அநாதியே சித்துவடிவமாகிய ஆன்மா, தனுதி மலத்தால் தடைபட்டு நின்றன — (செம்பிற்களிம்புபோல) தன்னேடுற்ற ஆணவ மலத்தினுலே (உயிர்க்குயிராக விளங்கும் பரம் பொருளாகிய சிவனை அறியாமல்) தடையுற்று நின்றன ஆம், தனுதி மலமும் தடை அற நீங்கில் — அநாதியே தன்னேடுற்ற ஆணவ மலமும் (இருவினையொப்பு மலபரிபாகம் சத்திநிபாதத்தால் இறைவனே குருவடிவமுங்கொண்டுவந்து அநுக்கிரகிக்க அதனுல்) சத்திகெட்டு நிற்கப்பெறின், அநாதி சிவத்துடன் ஒன்று ஆன வாறே — அநாதியாகவுள்ள பதிப்பொருளுடன் இரண்டறக்கலந்து (சிவானந்தத்தை அநுபவித்துக்கொண்டு) அத்துவிதமாய் இருக்கும் என்றவாறு.

ஆன்மா சிவம் ஆகிய இருபொருளும் சித்துப்பொருளே ஆயினும் பெரிதும் அவை தம்முள் வேறுபாடுடையன ஆம். இதனை, "சிவன் சீவன் என்றிரண்டும் சித்தொன்ரும் என்னில் சிவன் அருட்சித்து இவன் அருளைச் சேரும் சித்து அவன்ருன்—பவங்கேடு புத்தி முத்தி பண்ணுஞ்சித் திவற்றில் படியுஞ்சித் தறிவிக்கப் படுஞ்சித்து மிவன்தான், — அவன்

தானே அறியுஞ்சித் தாதலிஞ விரண்டும் அணேந்தாலும் ஒன்ருகா தநந்நியமா யிருக்கும் — இவன்ருனும் புத்தியுஞ்சித் திவனுமோ புத்தி யிதுவசித்தென் றிடிலவனுக் கிவனுமசித் தாமே" எனவும், "உயிர்தானும் சிவாநுபவம் ஒன்றினுக்கு முரித்தே" எனவும் வரும் சிவஞானசித்தித் திருவிருத்தங் களான் உணர்க.

**84 போக்கு வரவற்ற பூரண காரணன்**
**நோக்க வரிய நுண்ணியன் நுண்ணியன்**
**தேக்கு மலத்தன் சிவனுக் குரியவன்**
**பார்க்கில் வியாபி பலவணுத் தானே.**

—......

— என்பது:— போக்குவரவற்றபூரணமாவது நிர்க்குணப் பிரமம் விபரம் எந்தப்படி ? என்ருல், அந்த நிர்க்குணப் பிரமத்தில் குணமாகிய சீவாத்மா கல்லும் கல்லொளியும் போலவே, அக்கினியும் சூடும் போலவே கலந்து பிரபஞ்சத்துக்குக் காரணமானபடி யினுலே 'போக்குவரவு அற்ற பூரண காரணன்' என் னும் சத்தத்துக்கு விபரம். அந்தச் சித்தாத்மாவை ஆராய்ந்து விசாரிக்குமளவில் காரண குரு முன்னிலே அல்லாமல் அறியப்படாதாகையினுலே 'நோக்க வரிய நுண்ணியன் நுண்ணியன்' என்னும் சத்தத்துக்கு விபரம். அந்தச் சீவாத்மாவின்......இதம் அகிதம் இரு பயனுகத் தோற்றுகையினுலே 'தேக்குமலத்தன் சிவ னுக்குரியவன்' என்னும் சத்தத்துக்கு விபரம். பந்த மாகிய எண்பத்துநூருயிரம் கடங்கள்தோறும் சித்

தாத்மா சீவாத்மா என வேற்றுமைப்பேர் கொண்டிருந்தபடியினாலே 'பார்க்கில் வியாபி பலவணுத்தானே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ—ள்) பார்க்கில் வியாபி பல அணு தான் ஏதேக்கும் மலத்தன் — ஆராய்ந்து பார்க்குமிடத்து வியாபியாகவுள்ள பலவாகிய ஆன்மா ஆணவமலத்தில் அழுந்திக்கிடப்பன் (ஆதலால்,) போக்கு வரவு அற்ற பூரண காரணன் — இறப்புப் பிறப்புக்களில்லாத பூரணப்பொருளாய் நிமித்த காரணனுமாய், நோக்க அரிய நுண்ணியன் நுண்ணியன்—யாவருணர்வானும் நோக்குதற்கு அரியவனுமாயும் மிகநுணுகியவனுயும் உள்ள; சிவனுக்கு உரியவன்—சிவபெருமானுக்குரியவனாகிய அடிமையாவான் என்றவாறு.

"நோக்கரியநோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே — போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே" என்பதுதிருவாசகம். இனி, "நாமல்ல இந்திரியம் நம்வழியின் அல்லவழி, நாமல்ல நாமும் அரனுடைமை — ஆமென்னில், எத்தனுவில் நின்றும் இறைபணியார்க் கில்லைவினை,முற்செய்வினை யும்தருவான் முன்" (சிவஞானபோ—சூத்—11; அதிகா—2) என்னும் திருவெண்பாவான் இம்மந்திரக்கருத்துணர்க.

85 காயம் பலகை கயிறைந்து கண்மூன்று
ஆயம் பொருவதோ ரைம்பத்தோ ரக்கர
மேயெம் பெருமான் இருந்து பொருகின்ற
மாயக் கயிற்றின் மறைப்பறி யாரே.

—2866.

— என்பது :— காயம் பொதுவாகையினலே காயம் என்னும் சத்தத்துக்கு விபரம். காயத்துக்குப் பொறி அஞ்சும் கயிறுகையினலே 'காயம் பலகை கயிறைந்து' என்னும் சத்தத்துக்கு விபரம். முக்குணம் கண் ஆகையினலே 'காயம் பலகை கயிறைந்து கண் மூன்று' என்னும் சத்தத்துக்கு விபரம். கண் முன்னிலையாக ஐம்பத்தோரக்கரம் உருப்பட்டதாகையினலே 'ஆயம் பொருவதோ ரைம்பத்தோ ரக்கரம்' என்னும் சத்தத்துக்கு விபரம். ஆகையினலே, ஐம்பத்தோ ரக்கரமும் தோயாமல் தலைவன் நடத்துகையினலே எம்பெருமான் இருந்து பொருகின்றான்' என்னும் சத்தத்துக்கு விபரம். ஆகையினலே, சீவாத்மா சத்தினிபாதவிவேகத்தைக்கொண்டு காரண குரு கைகாட்டும்படியே காயம் பொய் எனக்கண்டு தலைவனைத் தேராமையினலே 'மாயக்கயிற்றின் மறைப்பறியாரே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ—ள்) காயம் பலகை – சரீரமே சூதாடும் பலகையாகவும், கயிறு ஐந்து – பஞ்சேந்திரியங்களே சூத்திரக் கயிருகவும், கண் மூன்று ஆ – (முக்குணவசமாக நடப்பதனலே) முக்குணங்களே மூன்று கண்ணுகவும், ஆயம் பொருவது ஓர் ஐம்பத்தோர் அக்கரமே – சூது பொருவதற்கு உரிய ஆயமாகிய அறைகள் ஐம்பத்தொரு அக்கரங்களே யாகவும் கொண்டு, எம்பெருமான் இருந்து பொருகின்ற – எம்பெருமானுகிய இறைவன் உலகெங்கும் வியாபகமாக இருந்து சூது பொருகின்ற, மாயம் கயிற்றின் மறைப்பு அறியார் – மாயமாகிய சூத்திரக்கயிற்றின் இரகசியத்தை ( அப்பெருமான்

ஞானசாரியனாக எழுந்தருளிவந்து அநுக்கிரகம்செய்து அறிவிக்க அறிவாரே யன்றி ) ஏனையோர் அறியார்என்றவாறு.

உயிர் அறிவித்தாலன்றி அறியமாட்டாது என்பதனைக் "ஆட்டுவித்தா ........... காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக்காலே" என்னும் திருநாவுக்கரசுசுவாமிகள்அருளிய (பொது — ) தனித்திருத் தாண்டகத்தான் உணர்க. "அறிவிக்க வன்றி அறியா வுளங்கள்" என்றதும் இக்கருத்தேபற்றி என்க. 'கவறைந்து' எனவும்பாடம், கவறு — சூதாடுகருவி.

**86 பன்றியும் பாம்பும் பசுமுசு வானரம்**
**தென்றிக் கிடந்த சிவகரிக் கூட்டத்தில்**
**குன்றுமற் கூடித் தராசு நிறுத்தபின்**
**குன்றி யறிவைக் குறைக்கின்ற வாறே.**
—2918.

— என்பது :— பன்றியாவது ஆங்காரம், பாம்பாவது கால சர்ப்பம், பசுவாவது மபக்கம், முசுவாவது காமம், வானரமாவது மனம்: ஆகையினாலே, 'பன்றியும் பாம்பும் பசுமுசு வானரம்' என்னும் சத்தத்துக்கு விபரம். தென்றிக்கிடந்த சிவகரிக்கூட்டமாவது பஞ்சபூதம், விபரம் எந்தப்படி? என்றால், பிருதிவி அப்புத் தேயு வாயு ஆகாசம்: விபரம் எந்தப்படி? என்றால், பிருதிவி மதமெடுத்தால் தனுகுண பூரணனாகி வஸ்திராபரணம் அநுலேபனம் விரும்பியிருப்பன். அப்பு மதமெடுத்தால் சமுசாரத்திலே பூரணனாகி எனக்கு என் வீட்டுக்கு வேணுமென்று காமியார்த்தம் விரும்பியிருப்பன். தேயு மதமெடுத்தால் காமாதிபூரணனா

ஸ்திரீ சனங்களை அழைக்கவேணுமென்று இச்சைப் பட்டிருப்பான். வாயு மதமெடுத்தால் பயண பூரண ணுகி வருகிறேன் போகிறேன் தருகிறேன் என்று இச் சைப்பட்டிருப்பான். ஆகாச மதம் எடுத்தால் வாகன பூரணனுகி ஆனை, குதிரை, தண்டிகை, சாமரை, தள தந்திரங்களும் இச்சைப்பட்டிருப்பான். ஆகையி ஞலே சீவாத்மா சத்தினிபாத விவேகத்தைக்கொண்டு காரணகுரு கைகாட்டும்படியே நிராமய பூரணத்தில் கர்ப்பூரமும் சோதியும் கலந்தாற்போலவே ரகசியபதம் பெற்றபின் சித்தறிவின் பயனுகிய இருவினைப் பாசம் பொய்யாகையினுலே 'குன்றுமற் கூடித் தராசு நிறுத்த பின் குன்றி யறிவைக் குறைக்கின்ற வாறே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ-ள்) பன்றியும் பாம்பும் பசுவும் மூசு வானரமும் அகங்காரமும் காலமும் மாயையும் மனமும், தென்றி கிடந்த சிவகரிக் கூட்டத்தில் – சிவ சாட்சி சம்பந்தமாயிருக்கும் காலத்தில் (நல்வினை தீவினைகள் விளைதற்குக் காரணமாய்) அவைகளெல்லாம் முரணிக்கிடந்தனவாம், குன்றுமல்கூடி– அவைகள் முரணுது தத்தம் நிலைமையிற் பொருந்துமாறு, தராசு நிறுத்தபின் – தராசுக்கோல்போல (இருவினை யொப் பாக) நிலைபெறச் செய்தபின்பு, குன்றி அறிவை குறைக் கின்ற ஆறு ஏ – (ஞானசாரியனுடைய அநுக்கிரகத்தால் தன்னையும் தலைவனையும் ஆராய்ந்து தெளிந்த அறிவைப் 'பாநுவின்விழி' எனச் சிவ வியாபகத்துள்ளே) சுருங்கு வித்து முறையே அழுத்துகின்றவாறும் என்றவாறு.

எனவே, பின்னர் சிவானந்தமே திளைப்பது என்பது எஞ்சி நின்றது. கூடி — கூட எனவும், குன்றி — குன்றுவித்து எனவும் திரித்துப் பொருள் கொள்க. முசு — குரங்கினுள் ஒரு சாதி என்க. அகங்காரம் உண்மையால் அகங்காரத்தைப் 'பன்றி' என்றும், நியதி நோக்கிப்பற்றலால் காலத்தைப் 'பாம்பு' என்றும், மருட்சியுடைமையால் மாயையைப் 'பசு' என்றும், பற்றுந் தன்மை விடாமையாலும் ஒன்றை விட்டொன்று தாவிச்செல்லலாலும் மனத்தைக் 'குரங்கு' என்றும் உருவகம்செய்து உணர்த்தியருளினர் என்பர்பெரியோர். இதனால், இருவினையொப்பினு லன்றி அத்துவித நிலை கைகூடாது என்பது பெறப்பட்டமை காண்க.

**87 தோட்டத்தின் மாம்பழம் தூங்கி விழுந்தக்கால்**
**நாட்டின் புறத்தே நரிகளே தின்றிடும்**
**மூட்டிக் கொடுத்த முதல்வனை முன்னிட்டுக்**
**காட்டிக் கொடுத்தபின் கைவிட்ட வாறே.**
—2933.

— என்பது :— தோட்டமாவது சித்து. விபரம் எந்தப்படி? என்றால்,சீவாத்மாவுக்கு செனனத்துக் கிடம் சித்தாகையினாலே 'தோட்டத்தின் மாம்பழம் தூங்கி விழுந்தக்கால்' என்னும் சத்தத்துக்கு விபரம். நாடாவது மாயை. நரிகளாவது மாயா சம்பந்தமாகிய பொறியைந்து. விபரம் எந்தப்படி? என்றால், பொறியைந்தும் சீவாத்மாவைத் தொடர்ந்திருக்கையினாலே 'தோட்டத்தின் மாம்பழம் தூங்கி விழுந்தக்கால் — நாட்டின் புறத்தே நரிகளே தின்றிடும்' என்

னும் சத்தத்துக்கு விபரம். காரணகுரு அந்தச் சீவாத்மாவுக்கு மாயா சம்பந்தமாகிய தத்துவம் முப்பத்தாறும் விடப்படுத்திக் கர்ப்பூரமும் சோதியும் கலந்தாற்போலவே நிராமய பூரணத்தில் ரகசிய பதம் கொடுத்தபின் அந்தச் சீவாத்மாவுக்கு இருவினைச் செனனம் ஒழிந்தபடியினாலே 'மூட்டிக் கொடுத்த முதல்வனை முன்னிட்டுக் காட்டிக்கொடுத்தபின் கை விட்டவாறே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ—ள்) தோட்டத்தில் – மாயாசம்பந்தமாகிய உலகிலே, மாம்பழம் தூங்கி விழுந்த கால் – மாம்பழமாகிய சரீரமானது உலாவித்தங்கி (ப் பின்பு அந்நிலை குலைந்து) விழுந்து விட்டால், நாட்டின் புறத்தே நரிகளே தின்றிடும் – நாட்டின் புறத்திலே திரிந்துழலும் நரிகள் ( அப்புலால் உடம்பைத் ) தின்று கொழுக்கும், மூட்டி கொடுத்த முதல்வனை முன்னிட்டு–( ஆன்மாக்கள் விரும்பியபடி இச்சரீரத்தையும் வேண்டும் கருவிகரணங்களையும் புவன போகங்களையும் ) கூட்டி முடித்துத்தந்த முதல்வனாகிய பதியை (ஞானாசாரியர்) முன்னிட்டு அநுக்கிரகிக்க, காட்டி கொடுத்தபின் கைவிட்ட ஆறே – அவர் காண்பித்துக்கொடுத்தருளிய பின்னே ( அச் சரீரம் தூங்குகிறவன் கைப்பொருள் போல) நீங்கியபடியாம் என்றவாறு.

ஆதலால், இச்சரீரமுள்ளபோதே விரைந்து ஞானாசாரியனைத்தேடி முதல்வனாகிய பதிப்பொருளை அறிந்துகொள்ள வேண்டும் என்பது கருத்து. நரிகள் என்பதை மண்ணும் தீயும் எனக் கொண்டுரைப்பினுமாம். நரிகள் முதலியன புசிப்பன என்பதனை " நாய்நம தெனநரி நமதெனப்பிதாத்,

தாய்நம தெனநமன் தனதெ னப்பிணி, பேய்நம தெனமனம் மதிக்கும்பெற்றிபோ,லாய்நம தெனப்படும் யாக்கை யாரதே" என்னும் பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் பகுதியும் நன்கு விளக்கும்.

88 **கொல்லைமுக் காதம் காடரைக் காதம்**
**எல்லை மயங்கிக் கிடந்த விருநெறி**
**எல்லை மயங்காமல் இயங்கவல் லார்க்கு**
**எல்லை கடந்துசென் றெய்தலு மாமே.**

—2912.

— என்பது :— கொல்லையும் காடும் எல்லைப் புறம்: விபரம் எந்தப்படி? என்றால், கொல்லை முக்காத மாவது பிருதிவி அப்பு தேயு: காடரைக்காதமா வது வாயுஆகாசம்: ஆகையினாலே 'கொல்லைமுக்காதம் காடு அரைக்காதம்' என்னும் சத்தத்துக்கு விபரம். சீவாத்மா காடாகிய ஐம்பூத காயத்தைக்கொண்டு மயங் கித்தன்னையும் தலைவனையும் தேராமையினாலே 'எல்லை மயங்கிக் கிடந்த இருநெறி' என்னும் சத்தத்துக்கு விபரம். சீவாத்மா சத்தினிபாத விவேகத்தைக்கொண்டு காடாகிய ஐம்பூத காயத்தைப் பொய் என உணர்ந்து காரணகுரு கைகாட்டும்படியே தலைவனைத் தேரவல் லார்க்கு இருவினைச்செனனம் நீங்கினபடியினாலே 'எல்லை மயங்காமல் இயங்கவல் லார்க்கு எல்லைகடந்து சென்று எய்தலுமாமே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ-ள்) கொல்லை முக்காதம்-(விரும்பி அடைந்தநுப விக்கும்) கொல்லையாகிய பதி நெடுந் தொலைவில் உள்ளது, காடு அரைக்காதம் — (யாவரும் விரும்பி யடையாமல் வெறுக் குந்தன்மையாகஉள்ள ) காடாகிய பாசம் (தநுகரணங்கள்) மிகச் சமீபத்தில் உள்ளன, எல்லை மயங்கிக் கிடந்த இரு நெறி – இவ்விரண்டின் நெறிகளாகிய எல்லைகள் (அறியாமை யால்) ஒன்றையொன்று மயங்கக் கிடந்தனவாம், எல்லை மயங் காமல் இயங்கவல்லார்க்கு – (பதிநிலையும் பசு பாசங்களின் நிலையும் என்று சொல்லப்படும் இருநெறிகளின் ) எல்லைகளும் (ஞானசாரியருடைய அநுக்கிரகத்தால்) மயங்காமல் அறிந்து கொண்டு ( அந்நெறியிற் பிழையாமல் ) செல்லவல்ல சிவ ஞானிகளுக்கு, எல்லை கடந்து சென்று எய்தலும் ஆம் ஏ – பசுபாச ஞானங்களாகிய காட்டைக்கடந்து சென்று தொலை வில் உள்ள பதியாகிய கொல்லையை அடைதலும் கூடும் என்றவாறு.

ஆன்மா, பொய்ம்மையாகிய பாசங்களையே பெரிதாக மதித்துழன்று மகிழ்தலின் காடாகிய பாசங்களை அண்மை யிலும் மெய்ப்பொருளாகிய பதியை அறிய வழியின்றி மயங் குதலின் கொல்லையாகிய பதிப்பொருளைச் சேய்மையிலும் உளதென மயங்கிற்று என்றருளினர்; பெத்த தசையையே முத்திதசை என மயங்கி அநுபவிப்பது கருதி என்க. மயங்கி – மயங்க எனத் திரித்துரைக்க,

**89 எண்ணு யிரத்தாண்டு யோக மிருப்பினும்**
**கண்ணு லமுதினைக் கண்டறிவா ரில்லை**
**உண்ணுடிக் குள்ளே ஒளியுற நோக்கினல்**
**கண்ணுடி போலக் கலந்திருந் தானே.**

—603.

— என்பது :— அட்டாங்கயோகத்தைக்கொண்டு பல்லூழிகாலம் இருந்தாலும் காலமும் கற்பனையும் கடந்த அமுதவாரியாகிய தலைவனை அறியப்படாதாகையினாலே 'எண்ணு யிரத்தாண்டு யோகமிருப்பினும் கண்ணு ளமுதினைக் கண்டறிவா ரில்லை' என்னும் சத்தத்துக்கு விபரம். சத்திநிபாத விவேகத்தைக்கொண்டு காரணகுரு கைகாட்டும்படியே விசாரித்துக்கொள்வார்க்கு வெளிப்படும் மாயையினாலே 'உண்ணுடிக்குள்ளே ஒளியுற நோக்கினல் கண்ணுடி போலக் கலந்திருந்தானே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ—ள்) மிகப்பல ஆண்டுகள் அங்கயோகம் முதலிய முயற்சிகளைச்செய்து மிகவருந்தினும் அமுதம்போன்ற பதிப்பொருளை ஊனக் கண்ணால்கண்டு இன்புறுவாரிலர், ஞானசாரியருடைய அநுக்கிரகத்தைப் பெற்றுச் சுழுமுனை நாடி வழியே ஆதாரங்கள் ஆறையும் கடந்து சென்று நிராதாரமாயுள்ள அப்பரம்பொருளைச் சிவஞானமே கண்ணுகக்கொண்டு உற்றுநோக்கித் தியானித்தால் நின்மல பூரணமாயுள்ள சிவம் வெளிப்பட்டு விளங்கித்தோன்றும் என்றவாறு.

குறையுணர்வாகிய பசுஅறிவானும், பாச அறிவானும் உணரப்படாத முதல்வனை அவனது திருவடிஞானத்தால் தன் அறிவின்கண்ணே ஆராய்ந்தறிக என உணர்த்தியருளிய படி. இனி, ''அறியாமை அறிவகற்றி அறிவினுள்ளே அறிவு தனை அருளினன் அறியாதே அறிந்து — குறியாதே குறித்தந்தக் கரணங்களோடும் கூடாதே வாடாதே குழைந்திருப்பையாகில் — பிறியாத சிவன்தானே பிரிந்து தோன்றிப் பிர

பஞ்ச பேதமெலாம் தானாய்த் தோன்றி—நெறியாலே இவை யெல்லாம் அல்ல வாகி நின்றென்றும் தோன்றிடுவன் நிரா தார னயே'' எனவும், ''ஆதாரத் தாலே நிராதாரத் தே சென்று, மீதானத் தேசெல்க வுந்தீபற, விமலற் கிடமதென் றுந்தீபற'' எனவும் வரும் திருவாக்குகள் பற்றியும் குரு உப தேசம் பற்றியும் உணர்க.

90 அஞ்சுள சிங்கம் அடவியுள் வாழ்வன
அஞ்சும்பொய் அஞ்சுந்தம் அஞ்சக மேபுகும்
அஞ்சின் உகிரும் எயிறும் அறுத்திட்டால்
எஞ்சா திறைவனை எய்தலு மாமே.
—2026.

— என்பது :— அஞ்சுள சிங்கமாவது தன் மாத்திரை விடயம் அடவியாவது காயம் விபரம் எந்தப்படி? என்றால், தத்துவம் முப்பத்தாறும் உட் கொண்டிருக்கையினாலே காயத்துக்கு அடவி என்னும் நாமம் உண்டாச்சுது. ஆகையினாலே தன்மாத்திரை விடயத்துக்கு இருப்பிடம் காயம் ஆனபடியினாலே, 'அஞ்சுளசிங்கம் அடவியுள் வாழ்வன' என்னும் சத் தத்துக்கு விபரம். அகமாவது ஞான இந்திரியம், விப ரம் எந்தப்படி? என்றால், சோத்திராதி ஞான இந்தி ரியம் அஞ்சும் தன்மாத்திரை விடயத்துக்கு அகம் ஆகையினாலே 'அஞ்சும் போய் அஞ்சும்தம் அஞ்சகமே புகும்' என்னும் சத்தத்துக்கு விபரம். சீவாத்மா சத் தினிபாத விவேகத்தைக் கொண்டு அடவியாகிய காயத் தில் தத்துவம் முப்பத்தாறும் பொய் என உணர்ந்த

படியினாலே 'அஞ்சின் உகிரும் எயிறும் அறத்திட்டால் என்னும் சத்தத்துக்கு விபரம். பொய்யென உணர்ந்தபின் காரணகுரு கைகாட்டும்படியே தலைவன் வெளிப்படும் ஆகையினாலே 'அஞ்சின் உகிரும் எயிறும் அறத்திட்டால் எஞ்சா திறைவனை எய்தலு மாமே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ-ள்) அஞ்சு உள சிங்கம் அடவியுள் வாழ்வன—பஞ்சேந்திரியங்களாகிய சிங்கங்கள் ஐந்து உள்ளன: அவை காயமாகிய காட்டிலே நிலைபெற்று வாழ்வனவாம், அஞ்சும் பொய்—பஞ்சேந்திரிய விடயங்கள் யாவும் நிலைபேறின்மையால் பொய்ம்மையே ஆம், அஞ்சும் தம் அஞ்சு அகமே புகும் — அப்பஞ்சேந்திரியங்கள் யாவும் தாம் தோன்றுதற்குக் காரணமாயுள்ள தன்மாத்திரைகளாகிய புலன்களிலே சென்றடங்குவனவாம், அஞ்சின் உகிரும் எயிறும் அறத்திட்டால் —பஞ்சேந்திரியங்களாகிய சிங்கங்களுடன் சென்று அவற்றிற் பற்றும் வலிமையை யுண்டுபண்ணும் மனமாகிய நகத்தையும் புத்தியாகிய பல்லையும் களைந்துவிட்டால்,எஞ்சாத இறைவனை எய்தலும் ஆம்-எவ்விடத்தும் குறைவில்லாது நிறைந்து தோன்றும் பூரணப் பொருளாகிய சிவத்தை அடைதல் கூடும் என்றவாறு.

பஞ்சேந்திரியங்கள் மனத்துடன் கூடியே தொழிற்படும். மனம் கூடாது போயின் அவைகளிருந்தும் பயனிலவாம். ஆகலின் மனமாகிய நகம் பஞ்சேந்திரியங்களாகிய சிங்கங்கள் ஒருபொருளைப்பற்றுதற்கு உபகாரமாம். மனம் பற்றும், புத்தி நிச்சயிக்கும். ஆதலால், புத்தியாகிய பற்கள் மனநகத்தாற் பற்றிய பொருளைக் கிழித்து உண்ணுதற்குப்

பேருபகாரமாம். எனவே, நகமும் பற்களு மின்றிச் சிங்கம் வலியுடன் கூடி வாழாமை போல மனமும் புத்தியுமின்றிப் பஞ்சேந்திரியம் சேட்டிக்க மாட்டாவாம். இதனை, "உயிர்பஞ் சேந்திரியங்களைப் பற்றுகையினாலே தன்னையும் அறியமாட் டாது. உயிர் பஞ்சேந்திரியங்களில் பற்றற்றால் தன்னையும் அறியும்" என்னும் சூர்ணிக் கொத்தினால் அறிக குருவருளான் மனம் முதலியன சிவகரணங்களாயின் பிறவியறும் என்பதே கருத்தாகக் கொள்க.

**91 புலமைந் துளமைந்து புட்சென்று மேயும்**
**நிலமைந்து நீரைந்து நீர்மையு மைந்து**
**குலமொன்று கோல்கொண்டு மேய்ப்பா னொரு**
**உலமந்து போம்வழி யொன்பது தானே. [வன்**
**—2025.**

—என்பது:— புலமைந்தாவது ஐம்பூதம் புள் ஐந்தாவது பொறிகள். புட்சென்று மேயும் நிலம் ஐந் தாவது தன்மாத்திரை. நீர் ஐந்தாவது தன்மாத்திரைப் பகுதி. நீர்மையும் ஐந்தாவது தன்மாத்திரை விடய சுகம். இவை எல்லாத்துக்கும் சுக்கிலம் பொதுவாகை யினாலே 'குலம் ஒன்று' என்னும் சத்தத்துக்கு விபரம். சுக்கில சம்பந்தியாகிய சீவாத்மாவுக்குப் பிராரத்தகன் மம் தன்மாத்திரை விடய சுகத்தை உள்ளபடி ஊட் டுகையினாலே 'கோல் கொண்டு மேய்ப்பானொருவன்' என்னும் சத்தத்துக்கு விபரம். சுக்கில சம்பந்தியாகிய சீவாத்மாவுக்கு ஐம்பூத காயத்துடனே தன்மாத்திரை விடய சுகத்தை அநுபவித்து அநுபவம் தீர்ந்தபின்

ஐம்பூத காயசம்பந்திபாகிய ஒன்பது வாசலும் போம் வழி ஆகையினாலே 'உலம்வந்து போம்வழி ஒன்பது தானே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ—ள்) புலம் ஐந்து உளம் ஐந்து புள் — பூதங்கள் ஐந்து உள்ளத்துடன்கூடிய பஞ்சேந்திரியங்கள் ஆகிய பறவைகள் ஐந்து, சென்றுமேயும் நிலம் ஐந்து — பொறிகளின் வழியே சென்று விடயங்களையறியும் இடமாகிய தன்மாத்திரை ஐந்து, நீர் ஐந்து — அப்பஞ்சேந்திரியங்களின் குணம் ஐந்து, நீர்மையும் ஐந்து — பஞ்சேந்திரியங்களால் நுகரப்படும் விடய சுகமும் ஐந்தாம், குலம் ஒன்று கோல் கொண்டு — சிறப்புப்பொருந்தும் வினைப்பயனையே பற்றாகக்கொண்டு (அவ்வினைக்கு ஈடாகத்தனுகரணபுவன போகங்களைக் கொடுத்து அவ்வினைப்பயன்களை), மேய்ப்பான் ஒருவன் — (ஆன்மாக்களுக்கு) ஊட்டுவிப்பவனாகிய முதல்வன் ஒருவன் (உண்டு) உலம் வந்து போம் வழி ஒன்பது தான் ஏ—(ஆன்மாக்களின் வினைக்கு விளைவாகவுள்ள காயத்தில்) துன்புற்றுச் செல்லும் வழிகள் ஒன்பது உள்ளனவாம் என்றவாறு.

ஆகலின், இவ்வொன்பது வழிகள் இருந்தும் வெளிச்செல்லாமல் மேய்ப்பானுடைய ஆணையின் வழி அடங்கியிருந்து ஆன்மாக்கள் அவ்வொன்பது வாயிலும்ஒக்கஅடைக்கும்போது வெளிப்படுதலால் இவ்வுண்மையை ஆராய்ந்து அறிந்து உடம்புடன்கூடி வாழுங்காலத்திலேயே ஞானாசாரியரை அடைந்து வழிபட்டு உய்வதே அறிவுடையோர் செய்யத்தக்கதாம் என்பது கருத்தாகக்கொள்க.

92 மூன்றுள மாளிகை மூவர் இருப்பிடம்
மூன்றினின் முப்பத் தாறு முதிப்புள

**மூன்றி னுள்ளே முளைத்தெழுஞ் சோதியைக்**
**கான்றிடிற் காயம் கணக்கற்ற வாறே.**

—2479

—என்பது:— மூன்ருவது அகார உகார மகாரம். விபரம் எந்தப்படி? என்ருல், அகார உகார மகாரம் கூடி ஓங்காரம் ஆகையினலே அந்த ஓங்காரத்துக்கு மூன்றுள மாளிகை என்னும் நாமம் உண்டாச்சுது. இடைகலை பிங்கலை சுழுமுனை மூன்றுக்கும் இருப்பிடம் ஓங்காரம் ஆகையினலே 'மூன்றுள மாளிகை மூவர் இருப்பிடம்' என்னும் சத்தத்துக்கு விபரம். அகார உகார மகாரத்தில் தத்துவம் முப்பத்தாறு தோற்றுகையினலே 'மூன்றினில் முப்பத்தாறும் உதிப்புள' என்னும் சத்தத்துக்கு விபரம் அகார உகார மகாரத்துக்குத் தலைவன் உட்பொருள் ஆகையினலே 'மூன்றினுள்ளே முளைத்தெழு சோதியை' என்னும் சத்தத்துக்கு விபரம். காரணகுரு கைகாட்டும்படியே உட்பொருளாகிய தலைவனைக் கண்டோர்க்கு இருவினைச் செனனம் ஒழிந்தபடியினலே 'கான்றிடிற் காயம் கணக்கற்ற வாறே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ—ள்) மூன்று உள மாளிகை—அகார உகார மகாரம் ஆகிய மூன்று மாளிகை உள்ளன, மூவர் இருப்பிடம் — அம்மூன்றும் அதிதெய்வங்களுக்குத் தங்கும் இடமாம், மூன்றினில் முப்பத்தாறும் உதிப்பு உள—அகாரம் முதலிய மூன்றனுள்ளே முப்பத்தாறு தத்துவங்களும் தோன்றுவன ஆம், மூன்றின் உள்ளே முளைத்து எழும் சோதியை — அந்த அகாரம் முதலிய அம்மூன்றினுள்ளே நின்று மேலாய் முளைத்து எழும்

பரஞ்சோதிவடிவாகிய சிவப்பொருளை, கான்றிடில் —(ஞானு சாரியருடைய அநுக்கிரகத்தைப்பெற்று (அப்பொருளை) அநுபவியாமல்) அறியாமையால் விட்டுவிடின், காயம் கணக்கு அற்ற ஆறே — (இருவினைக்கு ஈடாக மாறிமாறி வரும்) உடம்புகள் எண்ணில்லாதனவேயாம் என்றவாறு.

அகாரம் முதலிய மூன்றினுக்கும் அதிதெய்வம் அயன் அரி அரன் ஆகலின் அவை மூவர் இருப்பிடம் என்றருளினர். "ஆதியிலான்ம தத்துவமான அலர்மகன் பாகமும் நடுவில், நீதியில் விச்சா தத்துவமான நெடியவன் பாகமும் முடிவில், ஓதிய சிவதத் துவமென லான உருத்திர பாகமும் உதிக்கும், பேதியிம் மூன்றில் எண் ணில் தத்துவங்கள் பிறக்குமிம் மூன்றினும் முறையால்" எனப்பரஞ்சோதி திருவிளையாடல் வேதத்துக்குப் பொருளருளிய படலம்—தத்துவங்கள் பிறக்கும் முறையைக்கூறும். "அகார வுகாரம் அகங்காரம் புத்தி, மகாரம் மனம்சித்தம்விந்து—பகாதிவற்றை, நாதம் உளவடிவா நாடிற் பிரணவமாம்,போதம் கடற்றிரையே போன்று" (சிவஞானபோதம்—சூத்தி—4: வெண்பா—3) எனவரும் திருவெண்பாவானுமுணர்க.

93 **மொட்டித்தெழுந்ததோர்மொட்டுண்டம்மொட்
கட்டுவிட்டோடிமலர்தலும்காணலால் [டினைக்
பட்டுவிட் டம்மனை பாழ்பட நோக்கிட்டுக்
கட்டுவிட் டார்க்கன்றிக் காணவொண் ணுதே.**
—2919.

— என்பது :— எட்டுத்திசையும் தன்னிடமாகக்கொண்டு ஓங்காரம் தோற்றுகையினுலே 'மொட்

டித் தெழுந்ததோர் மொட்டுண்டம் மொட்டினை' என்னும் சத்தத்துக்கு விபரம். அந்த ஓங்காரத்தில் மாயாப் பிரபஞ்சம் அனைத்தும் தோற்றுகையினாலே 'கட்டுவிட்டோடி மலர்தலுங் காணலால்' என்னும் சத்தத்துக்கு விபரம். சீவாத்மா சத்திநிபாத விவேகத்தைக் கொண்டு ஓங்காரம் முதல் மாயாப்பிரபஞ்சத்தைப் பொய்யென உணர்ந்தபடியினாலே 'பட்டுவிட்டம்மனை பாழ்பட நோக்கிட்டு' என்னும் சத்தத்துக்கு விபரம். பொய்யென உணர்ந்தபின் காரணகுரு கைகாட்டும்படியே விசாரித்துக்கொள்வார்க்குத் தலைவன் வெளிப்படும் ஆகையினாலே, கட்டுவிட் டார்க்கன்றிக் காணவொண்ணாதே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ-ள்) (இருதயத்தானத்திலே வாழைப்பூவைப் போலக் கீழ்நோக்கி) முகிழ்த்து எழுந்ததாகிய ஓர்அரும்பு உள்ளது. முறுக்கவிழ்ந்து விசாலித்து நன்றாக மலர்ந்த அளவிலே அவ்வரும்பின்கண் சோதிமயமாகச் சிவப்பொருள் தோன்றுதலால் அதனை, பிறவிக்கு இடமில்லாததாய் கருவி நீங்கிப் பாழ்பட நோக்கிப் பந்தம் நீங்கினார்க்கு அன்றிக் காண முடியாது என்றவாறு.

இதயத்தில் மலருண்டு என்பதைச் சிவஞானசித்தியாரில் (சூத்–9: செய்யு–9) காண்க. மொட்டினை — உருபு மயக்கம். அம்மனை–தாய் என்க. ஞானாசாரியருடைய அநுக்கிரகத்தினால் இதயகமலத்தில் வைத்துப்பூசிக்க இறைவன் வெளிப்பட்டுத் தோன்றுவர் என்றபடி. இனி, "அண்டமோர் அணுவாம் பெருமைகொண்டு கரணங்கள் எல்லாம் கடந்து நின்ற அவ்விறைவனே அணுவோர் அண்டமாம் சிறுமை

கொண்டு ஆன்மாக்கள் உய்தற்பொருட்டு உடம்பினுள்ளும் அவ்வாறு நிற்கின்ருன் அதனை அறிந்து செய்யாதவழிப்பூசை யாற் பயனில்லை என்பார், 'இந்த விளைவறிந்து போற்றே' என்ருர்." என ஸ்ரீமாதவச்சிவஞானயோகிகள் அருளிச்செய் தமையும் நோக்கி உணர்க.

94 கரடிக ளைந்தும் கடுங்கானம் வாழ்வன
திருடி இராப்பகல் தின்று திரிவன
கரடிகள் ஐந்தும் கடைத்தலைப் பட்டால்
குருடியர் குத்தினும் குண்டுர லாமே.

—......

—என்பது.— கரடிகள் ஐந்தாவது பஞ்சேந் திரியம். கடுங்கானமாவது காயம். விபரம் எந்தப்படி? என்ருல், தத்துவம் முப்பத்தாறும் உட்கொண்டிருந்த படியினுலே காயத்துக்குக் கடுங்கானம் என்னும் நாமம் உண்டாச்சுது. ஆகையினுலே பொறிகள் அஞ்சுக்கு இருப்பிடம் காயமானபடியினுலே 'கரடிகள் ஐந்தும் கடுங்கானம் வாழ்வன' என்னும் சத்தத்துக்கு விபரம். காயசம்பந்தியான பொறிகளைந்தும் புண்ணிய பாவத் தை அநுபவித்துக்கொண்டிருந்தபடியினுலே 'திருடி இராப்பகல் தின்று திரிவன' என்னும் சத்தத்துக்கு விபரம். சீவாத்மா சத்தினிபாத விவேகத்தைக்கொண்டு காரணகுரு கைகாட்டும்படியே தலைவனை உணர்ந்தபின் பொறிகளைந்தும் பொய்யான படியினுலே 'கரடிகள் ஐந் தும் கடைத்தலைப்பட்டால் குருடியர் குத்தினும் குண் டுரலாமே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க

(இ-ள்) காடிகள் ஐந்தும் கடும் கானம் வாழ்வன — இந்திரியங்கள் ஐந்தும் கொடிய (தத்துவக்) காடாகிய உடம்பிலே வாழ்ந்திருக்கின்றன, திருடி இரா பகல் தின்று திரிவன—அக்காடிகள் (தமக்குரிய பொருள்களையன்றிப் பிறருக்குரிய பொருள்களையும்) இராப்பகலாக அநுபவித்துக்கொண்டு சஞ்சரிப்பனவாம், காடிகள் ஐந்தும் கடைத்தலைப்பட்டால் — அக்காடிகளாகிய பஞ்சேந்திரியங்கள் தம்மிடங்களிலே செயலற்று ஒடுங்கினால், குருடிகள் நுத்தினும் குண்டு உரல் ஆமே — குருடிகளாகிய இருவினைகள் வந்து தாக்கினாலும் நல்ல கல்லுரல்போல அஞ்சுமாறில்லை என்றவாறு.

இருவினைகள் நியதியின்படியே அன்றித்தாமே செல்லுமாறில்லை ஆகலின் அவைகளைக் குருடிகள் என்றார். பஞ்சேந்திரிய நிக்கிரகம் செய்த பெரியோர்களுக்கு வினைகள் வந்து தாக்கினும் அவர் அவற்றால் சிறிதும் சலனமடையார் என்பது கருத்தாகக்கொள்க. விடாது பற்றிக்கொள்ளுதலின் இந்திரியங்களைக் காடிகள் என்று உருவகம் செய்தார். "இந்திரியம் எனைப்பற்றி நின்றே என்வசத்தின் இசையாதே தன் வசத்தே எனையீர்ப்ப திவற்றைத் — தந்தவன்றன் ஆணை வழி நின்றிடலால் என்றும் தானறிந்திட் டிவற்றினொடும் தனையுடையான் தாள்கள், வந்தனைசெய் திவற்றின்வலி அருளினால் வாட்டி வாட்டமின்றி இருந்திடவும் வரும் செயல்கள் உண்டேல், முந்தனுடைச் செயலென்று முடித்தொழுக வினைகள் மூளா.............." என ஸ்ரீ அருணந்தி தேவநாயனார் சிவஞானசித்தியாரி சூத்—10: செய்—3)ல் அருளிச்செய்தமை காண்க. "வாட்டமின்றியிருந்திடவும் வருஞ் செயல்கள் உண்டேல் முந்தனுடைச் செயலென முடித்தொழுகுதல் "யானுமதுவே வேண்டினல்லால்—வேண்டும்

பரி சொன்றுண்டென்னின் அதுவு முன்றன் விருப்பன்றே"
என்ற திருவாக்கினும் அறிக" என ஸ்ரீ மாதவச் சிவஞான
யோகிகள் அருளிச் செய்த உரைப்பகுதி நோக்கியும் அறிக.

**95 விச்சுக் கலமுண்டு மேலைச்செய் ஒன்றுண்டு**
**உச்சிக்கு முன்னே உழவு சமைந்தது**
**அச்சைக்கொண்டச்சையறுத்துண்ணறியாமல்**
**இச்சைக்குப் பிச்சை இரக்கின்ற வாறே.**

—......

— என்பது :— விச்சுக்கலமாவது சித்தறிவு:
விபரம் எந்தப்படி? என்றால், சித்தறிவு சிறந்து சீவாத்
மாவுக்கு விளங்கியிருக்கையினாலே 'விச்சுக்கலமுண்டு'
என்னும் சத்தத்துக்கு விபரம். மேலைச் செய்யாவது
சத்திநிபாத விவேகம் மேற்பத்தியாகையினாலே மேலைச்
செய் ஒன்றுண்டு' என்னும் சத்தத்துக்கு விபரம்.
உச்சியாவது புண்ணியபாவம்: விபரம் எந்தப்படி ?
என்றால், சீவாத்மா புண்ணிய பாவ வடிவாகிய காயத்
தைத் கொண்டிருக்கையினாலே 'உச்சிக்கு முன்னே
உழவு சமைந்தது' என்னும் சத்தத்துக்கு விபரம்
ஆகையினாலே, சீவாத்மா முன் சொன்ன சத்திநிபாத
விவேகத்தைக்கொண்டு காயமாகிய அச்சைப் பொய்
என உணர்ந்து காரணகுரு கைகாட்டும்படியே தலை
வனைத் தேர்ந்து கர்ப்பூரமும் சோதியும் கலந்தாற்
போலவே ரகசியபதம் பெறாத படியினாலே 'அச்சைக்
கொண்டச்சை அறுத்துண் ணறியாமல்' என்னும்
சத்தத்துக்கு விபரம். அறியாமல் காமியார்த்தமாகிய

கிரியா தீட்சையைக்கொண்டு மற்றும்பல பதத்தை விரும்பியிருந்தாராகையினாலே 'இச்சைக்குப் பிச்சை இரக்கின்ற வாறே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க

(இ-ள்) விச்சு கலம் உண்டு — விதையாகிய அறிவு மிகுதியாக உள்ளது, மேலைச்செய் ஒன்று உண்டு — மேம்பட்ட திருவருட்சத்தியாகிய வயல் ஒன்றும் உள்ளது, உச்சிக்கு முன்னே உழவு சமைந்தது — உச்சிப்போதாகிய ஐம்பது வயதுக்குள்ளேயே சரியை கிரியை யோகம் ஞானம் ஆகிய உழவுகளும் நன்றாகப் பொருந்தியுள்ளன, அச்சை கொண்டு—எடுத்த இந்தச்சரீரத்தைக் கொண்டு (அவ்வுழவுகளை நன்கு செய்து), அச்சை அறுத்து — வினைக்கீடாக மேலும்வரும் சரீரத்தை நீக்கி, உண்ண அறியாமல்—விளைந்த சிவானந்தப் பேரமுதம் துய்த்தலை அறியாமல், இச்சைக்கு பிச்சை இரக்கின்ற ஆறு எ—உடலைவளர்க்கும் விருப்பத்தால் பிச்சையை விரும்பி இரந்துண்டு காலங்கழிப்பிக்குமாறு என்னே! என்றவாறு.

எனவே, இதனல் பயனில்லை என்பதை வருவித்துரைக்க. "காலமுண்டாகவே காதல் செய்துய்ம்மின்"என்று திருவாசகத்தில் அருளிச்செய்தமை காண்க. "முப்பதாமாண்டளவில் மூன்றற் றொருபொருளைத் — தப்பாமற் றன்னுட் பெறுனுகில்" என ஔவைப்பிராட்டியார் அருளியமையும் சிந்திக்கத்தக்கது. விரைவிலே ஞானசாரியருடைய அநுக்கிரகத்தைப் பெற்றுச் சரியை கிரியை யோக ஞானங்களை முறையே திருவருட்டுணைகொண்டு அநுட்டித்து நின்று சாதித்துச் சிவபோகந்துய்த்து வாழக்கடவர் என்றருளினமை காண்க. உண்ண என்பது ஈறு கெட்டு நின்றது.

96 உச்சிக்கு மேலே உணர்வுக்கும் கீழே
வைச்ச பொருளின் வகையறிவா ரில்லை
வைச்ச பொருளின் வகையறி வாளர்க்கு
எச்ச எருதும் இளவெரு தாமே.

—......

— என்பது :— உச்சியாவது மாயை: விபரம் எந்தப்படி? என்றால், தொண்ணூற்றாறு தத்துவங்களுக்கும் மாயை காரணமாயிருக்கையினாலே மாயைக்கு உச்சி என்னும் நாமம் உண்டாச்சுது. உணர்வாவது சைதன்னியமாகிய சித்து: விபரம் எந்தப்படி? என்றால், சைதன்னியமாகிய சித்தும் உச்சியாகிய மாயையும் இரண்டும் கூடிப்பொருந்தின மத்தியத்தில் சத்தனாகிய சீவாத்மாத் தோன்றிய வண்மை யாவர்க்கும் அறியப் படாதாகையினாலே 'உச்சிக்கு மேலே உணர்வுக்கும் கீழே–வைச்ச பொருளின் வகையறிவாரில்லை' என்னும் சத்தத்துக்கு விபரம். சத்தனாகிய சீவாத்மா சத்திநி பாத விவேகத்தைக்கொண்டு காரணகுரு கைகாட்டும் படியே மாயாசம்பந்தமாகிய தத்துவம் முப்பத்தாறும் பொய்யென உணர்ந்து கர்ப்பூரமும் சோதியும் கலந்தாற்போலவே நிராமய பூரணத்தில் ரகசியபதம் பெற்ற பின் சீவாத்மா என்னும் நாமம் நட்டமான படியினாலே 'வைச்ச பொருளின் வகையறி வாளர்க்கு – எச்ச எருதும் இளவெரு தாமே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ–ள்) உச்சிக்கு மேலே உணர்வுக்கும் கீழே—மாயைக்குமேலே ஞானவடிவாகிய பதிப்பொருளுக்கும் கீழே ஆகிய

நடுவிடத்திலே, வைச்ச பொருளின் வகை அறிவார் இல்லை — வைத்திருக்கப்பட்ட பொருளாகிய ஆன்மாவின் வகையை ஆராய்ந்தறிவாரிலர், வைச்ச பொருளின் வகை அறிவாளர்க்கு—அங்ஙனம் வைத்த பொருளாகிய ஆன்மநிலையை (ஞானசாரியருடைய அநுக்கிரகத்தால்)அறியுந்தன்மையைப் பெற்ற தவமுடையோருக்குத் தலைவனை அறிதல் கூடும்: ஆகையால், எச்ச எருதும் இள எருது ஆம் ஏ — அவ்விடத்தே இளைத்து ஓய்ந்த எருதுகளாகிய கருவி கரணங்களெல்லாம் சிவகரணங்களாக மாறினமையால் இளமையான எருதுகளைப்போலச் செய்தொழிற்பயனாகிய சிவபோகத்தைத்துய்க்கச் செய்வனவாம் என்றவாறு.

கருவிகளை எருதுகளாகக் கூறினமையின் சரியை முதலிய நான்கும் உழவு தொழிலாகக் கொள்க. எல்லாத் தத்துவங்களுக்கும் மேலாதல் நோக்கி மாயையை உச்சி என்றருளினர் என்ப.

97 வம்பு பழுத்த பலாப்பழம் ஒன்றுண்டு
தன்பாற் பறவை புகுந்துணத் தானொட்டா
அம்புகொண் டெய்திட் டகலத் துரத்திடில்
செம்பொற் சிவகதி சென்றெய்தலு மாமே.
—2607.

— என்பது :— வம்புபழுத்த பலாப்பழமாவது நிராமயபூரணம்: விபரம் எந்தப்படி ? என்றால், சிருட்டிக்குமுதல் காலமும் கற்பனையுமில்லாமல் சூனியமாய் இருந்தபடியினாலே நிராமயபூரணத்துக்கு 'வம்பு பழுத்த பலாப்பழம்' என்னும் நாமமுண்டாச்சுது.

பொறிகள் ஐந்தும் சீவாத்மாவைத் தொடர்ந்து பலாப் பழமாகிய நிராமயபூரணத்தைத்தேற வொட்டாமை யினாலே 'தன்பாற் பறவை புகுந்துணத் தானொட்டா' என்னும் சத்தத்துக்கு விபரம். சத்திநிபாத விவேகத் தைக்கொண்டு பொறிகள் ஐந்தும் பொய் எனத்தேர்ந்த படியினாலே 'அம்புகொண் டெய்திட் டகலத் தூரத்தி டில்' என்னும் சத்தத்துக்கு விபரம் தேர்ந்தபின் பலாப்பழமாகிய பூரணம் வெளிப்படும் ஆகையினாலே 'செம்பொற் சிவகதி சென்றெய்தலு மாமே." என்னும் சத்த துக்கு விபரம் என்க.

(இ-ள்) வம்பு பழுத்த பலா பழம் ஒன்று உண்டு — புதுமையாகப் பழுத்த சிவகதியாகிய பலாக்கனி ஒன்று உள் ளது, தன்பால் பறவை புகுந்து உண்ண தான் ஒட்டா—அப் பலாப்பழத்தைச் சென்று நுகரவொட்டாமல் பஞ்சேந்திரியங் களாகிய பறவைகள் (செல்வோரைத்)தம்வசமாகச் செய்து கொண்டு தடுத்து நிற்பன ஆம், அம்பு கொண்டு எய்திட்டு அகல தூரத்திடில் — (ஞானாசாரியர் அநுக்கிரகம் செய்த சிவஞானமாகிய) அம்பைக் கைக்கொண்டு எய்து அப்பஞ்சேந் திரியப்பறவைகளைத் தூரத்தே தூரத்திவிடின், செம்பொன் சிவகதி சென்று எய்தலும் ஆம் ஏ—செம்மையுடைய அழகிய சிவகதியாகிய அப்பலாப்பழத்தை அடைந்து துய்த்து வாழ் தலுமாகும் என்றவாறு.

கிடைத்தற்கரியதாகக் கிடைத்த ஒரு திப்பியக்கனி அதுவாகலின் 'வம்பு பழுத்த பலாப்பழம் ஒன்றுண்டு' என அருளினர். பஞ்சேந்திரிய நிக்கிரகம் செய்த சிவஞானிகளுக் கன்றி அத்திப்பியக்கனி கிடைத்தல் பெரிதும் அரிதாகலின்

'அகலத்தூரத்திடின் சென்று எய்தலும் ஆம்' என வற்புறுத்தியருளியமை சிந்தித்துணரத்தக்கது: பஞ்சேந்திரிய அநுக்கிரகமே செய்துதிரியும் பெரியோர்களால் அது சிறிதும் கூடாது என்பது 'தன்பாற் பறவை புகுந்துணத் தானொட்டா' என்றமையால் நன்கு விளங்கும். எளிதில் அப்பறவைகளை விலக்கிவிட்டுப் புகுதல் இயலாது என்பார், 'அம்பு கொண்டு எய்திட்டு அகலத்தூரத்திடில்' என அருளினர். "உயிர் பஞ்சேந்திரியங்களிலே பற்றற்றால் தன்னையும் அறியும்" "உயிர் பஞ்சேந்திரியங்களைப் பற்றுகையினாலே தன்னையும் அறிய மாட்டாது" என்னும் சூர்ணிக்கொத்தும் நோக்கியறிக. இதில் ஓரின எதுகை வந்தவாறு காண்க.

98 பார்ப்பா னகத்திற் பாற்பசு வைந்துண்டு
மேய்ப்பாரு மின்றி வெறித்துத் திரிவன
மேய்ப்பாரு முண்டாய் வெறியு மடங்கினால்
பார்ப்பான் பசுவைந்தும் பாலாச் சொரியுமே.
—2883.

— என்பது :— பார்ப்பானாவது சீவாத்மா. அகமாவது காயம். பாற்பசுவாவது ஞானேந்திரியம். விபரம் எந்தப்படி ? என்றால், சாக்கிர அவத்தையில் நேத்திரத் தானத்தைக்கொண்டு உருவத்தைக் கண்டிருந்தபடியினாலே சீவாத்மாவுக்குப் பார்ப்பான் என்னும் நாமமுண்டாச்சுது. ஞான இந்திரியம் அஞ்சும் பார்ப்பான் அகமாகிய காயத்தை மெய்க்கொண்டிருந்தபடியினாலே 'பார்ப்பா னகத்தில் பாற்பசு வைந்துண்டு' என்னும் சத்தத்துக்கு விபரம். ஞான இந்திரியம்

அஞ்சும் விசாரமில்லாமல் மாயா சம்பந்தமாகிய தன் மாத்திரை விடய சுகத்தை மருவியிருந்தபடியினலே 'மேய்ப்பாரு மின்றி வெறித்துத் திரிவன' என்னும் சத்தத்துக்கு விபரம். காரண குரு பார்ப்பானகிய சீவாத்மாவுக்குக் காயசம்பந்தமான தத்துவம் முப்பத் தாறும் பொய்யெனப்படுத்திக் கர்ப்பூரமும் சோதி யும் கலந்தாற்போலவே நிராமய பூரணத்தில் ரகசிய பதம் கொடுத்தபின் ஞான இந்திரியங்கள் ஐந்தும் சிவ இந்திரியமானபடியினலே 'மேய்ப்பாரு முண் டாய் வெறியுமடங்கினல் பார்ப்பான் பசுவைந்தும் பாலாச் சொரியுமே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

99 சூரிய காந்தமும் சூழ்பஞ்சும் போலவே
சூரிய காந்தம் சூழ்பஞ்சைச் சுட்டிடா
சூரியன் சந்நிதி யிற்சுடு மாறுபோல்
ஆரியன் தோற்றமுன் அற்ற மலங்களே.
—117.

— என்பது: காயத்துட் சீவாத்மாவும் காய மும் சூரிய காந்தமும் சூழ்பஞ்சும் போல: ஆகையினலே 'சூரியகாந்தமும் சூழ்பஞ்சும் போலவே' என்னும் சத் தத்துக்கு விபரம். சூரியகாந்தம் சூழ்பஞ்சைச் சுட் டிடாதது போலவே காயத்துட் சீவாத்மாவும் காயத்தை வேற்றுமைப் படுத்தமாட்டாமையினலே 'சூரியகாந்த மும் சூழ்பஞ்சைச் சுட்டிடா' என்னும் சத்தத்துக்கு

விபரம். காரணகுரு சீவாத்மாவுக்குக் காய சம்பந்த மாகிய தத்துவம் முப்பத்தாறும் பொய் எனப்படுத்தித் தலைவனைக் கைகாட்டுகையினாலே 'சூரியன் சந்நிதியில் சுடுமாறுபோல் ஆரியன் தோற்றமுன் அற்ற மலங்களே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

**100 வாசலின் கீழே படுகுழி மூன்றுள**
**ஊசி யிருக்கும் பழஞ்சோற் றிருங்குழி**
**ஊசி யிருக்கும் பழஞ்சோற்றை நாய்தின்ன**
**வாச லிருந்தவர் வாய்திற வாரே.**

—......

— என்பது:— வாசலாவது சத்திநிபாத விவேகம்; விபரம் எந்தப்படி? என்றால், பஞ்சபூத வடிவாகிய தூலதனுவும் சூக்குமபுரியட்ட காயமும் சுழுத்தியாகிய காரணதனுவும் சத்திநிபாத விவேகத்துக்குக் கீழ்ப்பட்டதியாகையினாலே 'வாசலின்கீழே படுகுழி மூன்றுள' என்னும் சத்தத்துக்கு விபரம். ஊசியிருக்கும் பழஞ்சோறாவது புண்ணிய பாவ மான படியினாலே தனுத்திரயம் புண்ணிய பாவத்துக்கு இருப்பிடம்: ஆகையினாலே 'ஊசியிருக்கும் பழஞ்சோற் றிருங்குழி' என்னும் சத்தத்துக்கு விபரம். நாயாவது ஆசை விபரம் எந்தப்படி? என்றால், அந்தப் புண்ணிய பாவத்தை அநுபவிப்பது ஆசை ஆகையினாலே 'ஊசியிருக்கும் பழஞ்சோற்றை நாய் தின்ன' என்னும் சத்தத்துக்கு விபரம். தனுத்திரய சம்பந்தியாகிய சீவாத்மா வாசலாகிய சத்திநிபாதவிவேகத்தைக்கொண்டு ஆசை

யாகிய நாயை அகற்றிக் காரணகுரு கைகாட்டின பொருளை மெய்க்கொண்டபின் யாவையும் விரும்ப வேண்டியதில்லை. ஆகையினாலே 'வாசலிருந்தவர் வாய் திற வாரே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

101 **பள்ளச்செய் ஒன்றுண்டு பாடச்செய் இரண்டுள**
**கள்ளச்செய் யங்கே கலந்து கிடந்தது**
**உள்ளச்செய் யாங்கே உழவுசெய் வார்க்கு**
**வெள்ளச்செய் யங்கே விளைந்தது தானே.**

2871.

— என்பது :— பள்ளச்செய் ஒன்று உண்டு, பாடச்செய் இரண்டாவது தூலதனு சூக்குமதனு காரணதனு; விபரம் எந்தப்படி? என்றால், ஐம்பூத வடிவே தூலதனு, புரியட்ட காயமே சூக்குமதனு, சுழுத்தியே காரணதனு. விபரம் எந்தப்படி? என்றால் சுழுத்தியாகிய காரணதனு முன்னம் இரண்டு தனுவை யும் தன்னிடமாகக் கொண்டிருந்தபடியினாலே 'பள் ளச்செய் ஒன்று பாடச்செய் இரண்டுள' என்னும் சத் தத்துக்கு விபரம். மாயை அந்தத் தனுத்திரயத்தை உட்கொண்டிருந்தபடியினாலே 'கள்ளச் செய் யங்கே கலந்து கிடந்தது' என்னும் சத்தத்துக்கு விபரம். உள்ளச்செய்யாவது சத்திநிபாத விவேகம்: விபரம் எந்தப்படி? என்றால், சீவாத்மா சத்திநிபாத விவேகத் தைக்கொண்டு காரணகுரு கைகாட்டும்படியே தனுத் திரயம் பொய்யென உணர்ந்தபின் வெள்ளச் செய்யா

கிய தலைவன் வெளிப்படுமாகையினாலே 'உள்ளச்செய் யங்கே உழவுசெய்வார்க்கு வெள்ளச்செய்யங்கே விளைந்ததுதானே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ-ள்) பள்ளம் செய் ஒன்று உண்டு—(தூலதனு சூக்குமதனு காரணதனு என்னும் மூன்றனுள்ளே) உள்ளிருக்கின்ற காரணதனு ஒன்றுள்ளது பாடச்செய் இரண்டு உள—காரணதனுவினின்றும் தோற்றுவிக்கப்பட்ட சூக்குமதனு தூலதனுக்கள் ஆகிய தனுக்கள் இரண்டும் உள்ளன. கள்ளச் செய் அங்கே கலந்து கிடந்தது—மாயையாகிய கள்ளச்செய் மூவகைத் தனுக்களையும் பொருந்திக் கலந்துள்ளது, உள் அ செய் அங்கே உழவு செய்வார்க்கு — உள்ளுகின்ற அச் செய்களினிடத்து (இவைகளெல்லாம் நிலையுதலுடையவல்ல என்று ஞானாசாரியாருடைய அநுக்கிரகத்தால் ஆராய்ந்தறிந்து களைதலாகிய) உழவு தொழிலைச் செய்யும் சிவஞானிகளாகிய உழவர்களுக்கு, வெள்ளச்செய் அங்கே விளைந்தது தான் ஏ—(அவ்வுழவர்களின் முயற்சிக்குத்தக) சிவபோகமாகிய விளைவு அச்செய்யினிடத்து மிகுதியாக விளைந்தது என்றவாறு.

இத்திருமந்திரக் கருத்து "மெய்ம்மையாம் உழவைச் செய்து விருப்பெனும் வித்தை வித்திப் — பொய்ம்மையாம் களையை வாங்கிப் பொறையெனும் நீரைப்பாய்ச்சித்—தம்மையும் நோக்கிக்கண்டு தகவெனும் வேலியிட்டுச்—**செம்மையுள் நிற்பராகிற் சிவகதி விளையுமன்றே"** எனத் திருநாவுக்கரசு சுவாமிகளால் தேவாரத்தில்வைத்து வேறுவிதமாகப் போற்றப்படுதல் காண்க. இத்தகைய கருத்துக்களை ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள், ஸ்ரீ பட்டினத்துப்பிள்ளையார், ஸ்ரீ தாயுமானவ சுவாமிகள், ஸ்ரீ குமாரகுருபர சுவாமிகள்

முதலிய பெரியோர்கள் தாமருளிச்செய்த நூல்களில் வைத்துப் போற்றியருளுதல் நோக்கி யுணர்க. விரிப்பிற்பெருகும்.

102 அன்னம் இரண்டுள ஆற்றங் கரையினில்
துன்னி யிரண்டும் துணைபிரி யாதென்க
அந்நிலை யன்னம் தனியொன்று போனக்கால்
பின்னை முடவன்னம் கூடுகி லாவே.
—2006.

— என்பது:—அன்னம் இரண்டாவது இடைகலை பிங்கலை ஆறுவது ஓங்காரம்: விபரம் எந்தப்படி? என்றால், இடைபிங்கலை இரண்டுக்கும் ஓங்காரம் ஆகையினாலே 'அன்னம் இரண்டுள ஆற்றங்கரையினில்' என்னும் சத்தத்துக்கு விபரம். இடை பிங்கலை இரண்டுக்கும் சுழுமுனை பொது ஆகையினாலே 'துன்னி இரண்டும் துணைபிரியாதென்க' என்னும் சத்தத்துக்கு விபரம். பொதுவாகிய சுழுமுனை துணைவிட்டுப் போன பின் இடை பிங்கலை இவை இரண்டுக்கும் நடை அற்ற படியினாலே 'அந்நிலை அன்னம் தனியொன்று போனக்கால் பின்னை முடவன்னம் கூடுகிலாவே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ—ள்) அன்னம் இரண்டு உள ஆற்றங்கரையினில் — (வசித்தற்கிடமாகிய ஆற்றங்கரையைவிட்டு அகலாமல் இரண்டு அன்னங்கள் வசிப்பதைப்போல) இடைகலை பிங்கலை ஆகிய இரண்டு அன்னங்களும் (தமக்குச் சார்பாகிய) சுழுமுனையாகிய கரையை விட்டு நீங்காமல் உள்ளன, துன்னி இரண்டும் துணைபிரியாது என்க—அவ்விரண்டும் பிரியாமல்

பொருந்தியிருந்து வாழ்வனவாம், அந்நிலை அன்னம் தனி ஒன்று போன கால்—அந்நிலையிலுள்ள அன்னங்களை விட்டுப் பிரிந்து தனியாகச் சுழுமுனை மார்க்கத்திலே பிராணவாயு சென்று அடங்கினுல், பின்னை முட அன்னம் கூடுகிலா ஏ— பின்பு அவ்வன்னங்களிரண்டும் நடையில்லாமையாலே முட அன்னம்போலாகிச் சேரமாட்டா என்றவாறு.

103 மலமில்லை மாசில்லை மானுபி மானக்
குலமில்லை கொள்ளும் குணங்களு மில்லை
நலமில்லை நந்தி ஞானத்தி னுலே
பலமன்னி யாங்கே மதித்துவைப் பார்க்கே.
—2957.

— என்பது: - காரணகுரு கைகாட்டிய பொருள் காலமும் கற்பனையும் கடந்திருந்தபடியினுலே மலமில்லை மாசில்லை மானுபிமானக் குலமில்லை கொள்ளும் குணங்களுமில்லை நலமில்லை நந்திஞானத்தினுலே பலமன்னியாங்கே மதித்துவைப் பார்க்கே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ—ள்) திருநந்திதேவராகிய ஞானுசாரிய மூர்த்திகள் அருளிய சிவஞானத்தினுலே (கண்டபொருளை) நிலைபெற ஆங்கே விளங்கக் கண்டவிடத்தே சிந்தித்திருக்கும் சிவஞானி களுக்கு, ஆணவம் முதலிய மும்மலமில்லை. அவையடுத்து வரும் கருவிகளுடன் அஞ்ஞானக் குற்றமுமில்லை. அஃது இல்லையாகவே அதுகாரணமாகவரும் மானுபிமானங்களுடன் கூடிய குல வேற்றுமையும் இல்லை, மாறிமாறிக்கொள்ளும்

குணங்களுமில்லை, அம்முக்குணங்கள் நீங்கவே விடய சுகங்களும் இல்லை என்றவாறு.

கண்டபொருளை என்பது இசை யெச்சம். மன்னி மன்ன எனத் திரித்துரைக்க. நலம்—விடயசுகம். இதனை, சிவஞானசித்தியார் (சூத்தி–8; செய்யுள் 30, 31) திருவிருத்தங்களினுணர்க. இனி, "உள்ளும் புறமு மொருதன்மைக் காட்சியருக்—கெள்ளும் திறமேது மில்" என்னும் திருவருட்பயன் சிந்தித்தறிக.

104 பழுத்தன வைந்தும் பழமறை யுள்ளே
விழித்தங் குறங்கும் விளைவை அறியார்
எழுத்தறி வோமென் றுரைப்பர்க ளேதாம்
எழுத்தை யழுத்தும் எழுத்தறி யாரே.
—2721.

— என்பது:— பழுத்தன ஐந்தாவது அஞ்செழுத்து: விபரம் எந்தப்படி? என்றால் அஞ்செழுத்து வேதாகமத்தில் பிரசித்தமாகையினாலே 'பழுத்தன ஐந்தும் பழமறை யுள்ளே' என்னும் சத்தத்துக்கு விபரம். ஆகையினாலே அஞ்செழுத்தின் தோற்றம் ஒடுக்கம் அறியாமையினாலே 'விழித்தங் குறங்கும் விளைவை அறியாமல் தாம் ஆசாரியரென்று அடிமையானவர்க்கு அஞ்செழுத்தின் பயன் அறியாமல் உணர்த்துகையினாலே 'எழுத்தறிவோம் என்றுரைப்பர்கள் ஏதாம்' என்னும் சத்தத்துக்கு விபரம். எழுத்தை அழுத்தும் எழுத்தாவது ஊமையெழுத்து: எந்தப்படி? என்றால்,

அந்த ஊமை எழுத்தின் நிலைமைக் காரணகுரு கைகாட்டும்படி யல்லாமல் அறியாதார்க்கு அறியப்படாதாகை யினாலே 'எழுத்தை அழுக்கும் எழுத்தறியாரே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ-ள்) பழுத்தன ஐந்தும் பழமறை உள்ளே—பழைய வேதாகமத்துள்ளே ஐந்தெழுத்தும் மேலோங்கியிருக்கின்றன. (ஆகலின்) விழித்து அங்கு உறங்கும் விளைவை அறியார்—(அவைகளை ஐந்தவத்தையினும் நிற்கும் முறை ஓதும் முறைகளை ஞானாசாரியரால் அநுக்கிரகிக்கப் பெற்று) துரியாதீதத்து உறங்கும் விளைவை அறியமாட்டாதார், எழுத்து அறிவோம் என்று உரைப்பார்கள் ஏது ஆம்—அவ்வெழுத்துக்களை யாமும் அறிவோம் என்று விவகரித்துரைப்பார்கள் அந்தோ! அவர்நிலை என்னும்? எழுத்தை அழுத்தும் எழுத்து அறியார்—எனை யெழுத்துக்களையெல்லாம் தன்னுள்ளே அமைப்பதாகிய ஸ்ரீமுத்தி பஞ்சாக்கர நிலைமையை அவர் உணரமாட்டார் என்றவாறு.

பழுத்தலாவது எல்லாச் சமயங்களுள்ளும் கூறப்படும் பொருள்களெல்லாம் தம்முள் அடக்கி மேலோங்கியிருத்தல். ஐந்தவத்தையினும் கணிக்கும் முறையை ஸ்ரீ மெய்கண்ட சந்தான பாம்பரையிலே அடிமைப்பட்டு உபதேச முறையால் கேட்டுணர்க. "எவ்வெவகோட் படுபொருளும் அஞ்செழுத்தி னடக்கியவற் றியல்பு காட்டி—மெய்வகையஞ்சவத்தையினும் நிற்குமுறை யோதுமுறை விளங்கத்தேற்றி—அவ்வெழுத்தி னுள்ளீடும் அறிவித்துச் சிவபோகத் தழுத்தி நாயேன்—செய்வினையும் கைக்கொண்ட வேலப்ப தேசிகன்றாள் சென்னி சேர்ப்பாம்" எனத் திராவிட மாபாடிய கர்த்தராகிய

ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள் தாமருளிய ஸ்ரீ காஞ்சிப் புராணத்துக் கடவுள் வாழ்த்தில் தமது ஞானசாரிய வணக்கம் கூறியமைபற்றிக் காண்க: இதனை முன்னரும் கூறப்பட்டது. மற்றும், "இருவினை தாமிவை மும்மல மீங்கிவை யீது சிவம், கருவுறு மாருயி ருண்மை யிது வென்று காட்டவல்ல, குருபான் நீயன்றி வேறறி யேனிக் குவலயத்தில், திருவெண்ணை மெய்கண்ட தேவே பஞ்சாக்கர தேசிகனே" என அவ்வாசிரியரே பிறிதோரிடத்தில் அருளிச்செய்தமையும் அறிக.

105 முத்துப் பவளம் பச்சையென் றிவைமூன்றும்
ஒத்துப் புணரு முணர்வை யறியார்
ஒத்துப் புணரு முணர்வை யறிந்தபின்
கொத்துப் படுங்கொக்குப் போற்குரு வாமே.

—......

— என்பது : முத்தாவது அகாரம், பவளமாவது உகாரம், பச்சையாவது மகாரம்: விபரம் எந்தப்படி? என்றால், அகார உகார மகாரம் கூடி ஓங்காரமாகையினாலே அந்த ஓங்காரத்துக்குக் கொக்கு என்னும் நாமம் உண்டாச்சுது. விபரம் எந்தப்படி' என்றால், கொக்காகிய ஓங்காரத்தில் அகாரமாகிய சீவாத்மா பாலின்கண் நெய்யிருந்தாற் போலவே தன்னிடமாக இருந்த உணர்வாகிய பொருளைத்தான் அறியாமலிருந்தபடியினாலே 'முத்து பவளம் பச்சை யென்றிவை மூன்றும் ஒத்துப் புணரும் உணர்வை அறியார்' என்னும் சத்தத்துக்கு விபரம். அகாரமாகிய சீவசாத்மாத்

திரிபாத விவேகத்தைக்கொண்டு ஓங்கார பாசத்தைப் பொய்யென உணர்ந்து காரணகுரு கைகாட்டும்படியே கர்ப்பூரமும் சோதியும் கலந்தாற்போலவே உணர்வாகிய பூரணத்தில் ரகசியபதம் பெற்றபடியினாலே 'ஒத்துப் புணரும் உணர்வை அறிந்தபின் கொத்துப்படும் கொக்குப் போற்குரு வாமே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ-ள்) முத்து பவளம் பச்சை என்ற இவை மூன்றும் ஒத்து புணரும் உணர்வை அறியார்—அகாரம் உகாரம் மகாரம் என்னும் இவை மூன்றும் ஓங்காரமாகப் பொருந்த அவற்றின் மேலாகப்பொருந்தியிருக்கும்உணர்வாகியபதிப்பொருளை அறியமாட்டார்கள், ஒத்து புணரும் உணர்வை அறிந்தபின் — அங்ஙனமாகப் பொருந்தும் உணர்வாகிய பதிப்பொருளை அறிந்தபின்பு, கொத்துப்படும் கொக்கு போல் குரு ஆமே — தான் கருதியிருந்ததை அகப்படக் கொத்துதல் பொருந்தும் கொக்குப்போல ஆசாரியராவார் என்றவாறு.

முத்து உருத்திர வடிவம், பச்சை திருமால் வடிவம், பவளம் பிரமன் வடிவம் ஆம். ஆதலால் அவைகளை எடுத்துக் கூறினர். செய்யுளாகலின் முறை பிறழ்ந்தன. அகாரம் பிரமன், உகாரம் திருமால், மகாரம் உருத்திரன் என்பர். என்ற இவை என்றிவை தொகுத்தல். ஒத்து—ஒக்க என்க: திரிந்தது.

106 பண்ணுத பேரொளிக் கப்புறத் தப்புறம்
எண்ணு யகனு ரிசைந்தங் கிருந்திடம்

**உன்ன வெளிய துரைசெயா மந்திரம்**
**சொன்னன் கழல்முன் னறிந்தமர்ந் தோமே.**

—......

— என்பது :— பண்ணாத பேரொளியாவது சித்து விபரம் எந்தப்படி? என்றால், சித்திரவடிவு எழுதப்படும் உயிர் எழுதப்படாதது போலவும், ஆதித்தரூபம் எழுதப்படும் ஒளி எழுதப்படாதது போலவும் பேரொளியாகிய சித்தை எழுதப்படாது ஆகையினாலே சித்துக்குப் பண்ணாதபேரொளி என்னும் நாமம் உண்டாச்சுது: ஆனபடியினாலே, சத்திநிபாத விவேகம் அந்தச் சித்துக்கு மேற்பத்தியாகையினாலே 'பண்ணாத பேரொளிக் கப்புறத் தப்புறம்' என்னும் சத்தத்துக்கு விபரம். பாலின்கண் நெய்யிருந்தாற் போலவும் சத்திநிபாத விவேகத்தைமருவித் தலைவன் இருந்தபடியினாலே 'எண்ணாயகனார் இசைந்தங்கிருந்திடம்' என்னும் சத்தத்துக்கு விபரம் நினைவினாலே நினைந்து வைகரி வாக்கினால் சொல்லப்பட்டதாகையினாலே 'உன்ன வெளியது உரைசெயா மந்திரம்' என்னும் சத்தத்துக்கு விபரம். காரணகுரு தத்துவம் முப்பத்தாறும் சீவாத்மாவுக்குப் பொய்யெனப்படுத்தி மெய்ப்பொருள் இது எனக் கைகாட்டினபடியினாலே 'சொன்னன் கழல்முன் அறிந்தமர்ந்தோமே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ—ள்) எண் நாயகனார் இசைந்து அங்கு இருந்திடம் —சன்மார்க்கர் ஆகிய சிவஞானிகள் சிந்தையில் விளங்கித்

தோன்றும் பதிப்பொருளாகிய தலைவர் இசைந்திருந்த அவ்விடம், பண்ணுத பேர் ஒளிக்கு அப்புறத்து அப்புறம் — பிறராற் பண்ணப்படாத பெரியசோதியின் மேலாகிய இடம் ஆம், உன்னு வெளி அது உரை செயா மந்திரம் — (மற்றும்) அப்பதிப்பொருள் உன்னுதற்கரியபரமாகாசமாம் சொல்லுதற்கரிய இரகசியப் பொருளாம் என்று, சொன்னுன் கழல் முன் — உபதேசித்தருளிய ஞானசாரியாராகிய திருநந்திதேவருடைய திருவடி, அறிந்து அமர்ந்தோம் ஏ — (அவ்வாறிருப்பதை) அறிந்து அதனுள்ளே பிரிப்பின்றி அத்துவிதமாய் அடங்கினேம் என்றவாறு.

இனிப் பெறும்பேறு இதனினும் வேறில்லை என்பது எஞ்சிநின்றது. வாக்குமனாதீதம் ஆகலின் 'உன்னுவெளியது உரைசெயாமந்திரம்' என்றருளிச்செய்தார். இருந்திடம் பெயரெச்சஈறு தொக்கது. உரைசெயா மந்திரம் அசபா மந்திரம் எனினும் ஆம் அதனை, அஞ்சமந்திரம் அன்னப்பெயர்மந்திரம் எனக்கூறுவர். ஹம்ஸ: என்பது அது; நான் அவன் எனப்பொருள்படும். ஸோஹம் என்பது ஹம்ஸ: என எழுத்து நிலைமாறியது. இதனை, 'காயத்திரிய தனிலதிகம் அஞ்சமா மந்திரம்'' (காஞ்சிப்புரா—திருவேகம்பப்பட—) எனவும், "அறிவோர் சிறிதுஞ் சலியாமல் அன்னப்பெயர் மந்திரமாறி'' (பிரபுலிங்க) எனவும் கூறுதல் காண்க.

**107 பாருக்குக் கீழே பகலோன் வரும்வழி**
**யாருக்கு மெட்டா வகல முடையவன்**
**நீருக்குந் தீக்கும் நடுவே யுதித்தவன்**
**ஊருக்கு மேற்கே யொடுங்குகின் றனே.**

—1982.

— என்பது :— பகலோனாவது சீவாத்மா. விபரம் எந்தப்படியென்றால், சீவாத்மா அகத்திற் கண்கொண்டு அஞ்ஞான இருளை அகற்றுகையினாலே சீவாத்மாவுக்குப் பகலோன் என்னும் பேருண்டாச்சுது. ஆகையினாலே சீவாத்மா பார்முதல் பஞ்சபூத காயத்தைக் கொண்டு எண்பத்துநான்கு நூறாயிரம் செனனங்கள் தோறும் செனனமெடுத்து வருகையினாலே 'பாருக்குக்கீழே பகலோன் வரும்வழி' என்னும் சத்தத்துக்கு விபரம். அந்தச் சீவாத்மா செனனத்துக்குச் சுக்கில சுரோணிதம் பொதுவாகையினாலே 'நீருக்கும் தீக்கும் நடுவே யுதித்தவன்' என்னும் சத்தத்துக்கு விபரம். ஊராவது முன் சொன்ன பார்முதல் பஞ்சபூத காயம் ஆகையினாலே சீவாத்மா பஞ்சபூதகாயம் பொய்யெனத் தேர்ந்து காரணகுரு கைகாட்டும்படியே நீரும் நீர்க்குமிழியும் கலந்தாற்போலவே நிராமய பூரணத்தில் ஐக்கியபதம் பெற்றபடியினாலே 'ஊருக்கு மேற்கே ஒடுங்குகின்றானே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ—ள்) பாருக்கு கீழே பகலோன் வரும் வழி — ஆன்மாத்தோன்றும் வழியாவது பிருதிவியின் கீழாகிய மாயையே ஆம், யாருக்கும் எட்டா அகலம் உடையவன் - (ஈசுவரன் அரிய காட்சியன் ஆகலின்) பெத்தான்மாக்கள் யாவருக்கும் அணுக வொண்ணாத தூரத்தை உடையவன், (அவ்வாறாக ஆன்மாத்தோன்றியவாறு எவ்வாறென்னில்) நீருக்கும் தீக்கும் நடுவே உதித்தவன்—சுக்கில சுரோணித சேர்க்கையின் இடையிலே தோன்றினவன் ஆவான், (அவ்வான்மா முத்தி

நிலையில் எங்கே ஒடுங்குகின்றான் என்னில்) ஊருக்கு மேற்கே ஒடுங்குகின்றான் எ — மாயையாகிய ஊருக்கு மேலிடமாகிய ஈசானிடத்திலே அத்துவிதமாய் ஒடுங்குகின்றான் என்றவாறு.

அகக்காட்சியில் ஞானத்தால் அஞ்ஞான இருளை நீக்கலால் ஆன்மாவைப் 'பகலோன்' எனக்குறித்தருளினர். நீர் வெண்ணிறமும் தீச் செந்நிறமுமுடைமையால் சுக்கில சுரோணிதங்கள் நீரும் தீயுமாக உருவகம் செய்யப்பட்டன. "மாயா தனுவிளக்கா மற்றுள்ளம் காணுதேதல்—ஆயாதா மொன்றை" (சிவஞானபோத சூத்தி—4 அதிகா—2) என்றமையால் மாயையை வரும் வழி என்றருளினர்.

**108 ஆரை பழுத்துக் கிடக்குது வையகம்**
**ஆரையைச் சூழ நீர்கோத்து நிற்குது**
**ஆரை பறித்துக் கறியுண்ண மாட்டாமல்**
**கீரைக்கு நெல்லிட்டுக் கெடுகின்ற வாறே.**

—......

— என்பது :— ஆகைபாவது சித்து. விபரம் எந்தப்படி? என்றால், நீரைமருவி ஆரையிருந்தாற் போலவே சித்தும் சிவமென்னும் பொருளைமருவிப் பொன்னும் மாற்றும் போலவேயிருந்தபடியினாலே சித்துக்கு ஆரை என்னும் நாமமுண்டாச்சுது, ஆகையினாலே சித்து எண்பத்துநான்கு நூறாயிரம் கடங்கள் தோறும் சீவாத்மாவென வேற்றுமைப்பேர் கொண்டு தனுகரணபுவன போகம் சிறந்திருக்கையினாலே 'ஆரை பழுத்துக்கிடக்குது வையகம்' என்னும் சத்தத்துக்கு விபரம். அந்தச் சித்துக்குச் சிவமென்னும் பொருள்

ஆதாரமானபடியினுலே 'ஆரையைச்சூழ நீர்கோத்து நிற்குது' என்னும் சத்தத்துக்கு விபரம். சித்தினுடைய கிரகம் நிச்சய புத்தியைக்கொண்டு சீவாத்மா தன்னையும் முன் சொன்ன பொருளாகிய தலைவனையும் தோய்ந்து சீவன் முத்தியடையாமல் மானசாதி கிரியா விதியை மெய்க்கொண்டு பலபதம் பெறுகையினுலே 'ஆரைபறித்துக்கறியுண்ணமாட்டாமல் கீரைக்கு நெல் லிட்டுக் கெடுகின்றவாறே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ—ள்) ஆரை பழுத்து கிடக்குது வையகம்—உலகத்திலே சிவமாகிய ஆரைக்கீரை பறிப்பாரில்லாமல் முதிர்ந்து கிடக்கின்றது, ஆரையை சூழ நீர் கோத்து நிற்குது — அவ்வாரைக்கீரைக்குக் கருணையாகிய நீர் என்றும் சூழ்ந்துள்ளது, ஆரை பறித்து கறி உண்ணமாட்டாது — அவ்வாரைக்கீரையாகிய சிவத்தை (ஞானசாரியருடைய அநுக்கிரகத்தாலே) தன்னுட்கொண்டு அமைத்துச் சிவஞானத்தாலே அத்துவித நிலையிலிருந்து துய்க்க அறியாமல், கீரைக்கு நெல் இட்டு கெடுகின்ற ஆறு எ—(உயர்ந்த ஆரையாகிய சிவத்தை விட்டு மிக இழிந்த) உலக காரியங்களாகிய கீரைக்கு நல்லமுயற்சிகளாகிய செந்நெல்லைக் கொட்டிப் பயனில்லாமல் கெடுகின்றவாறு எவன்? என்றவாறு.

பிறவிக்கு மேலும் மேலும் காரணமாகின்ற உலக காரியங்களில் வீண்முயற்சிகள் செய்து, மக்களுடம்பைப்பெற்றும் பயனில்லாமல் காலங்கழிக்கின்றனரே! என இரங்கி அருளியபடி. ''மானுடப்பிறவிதானும் வகுத்தது மனம் வாக்

காய ஆனிடத் தைந்து மாடும் அரன்பணிக் காக அன்றே!" என ஸ்ரீ அருணந்திதேவநாயனுர் அருளியதும் காண்க.

109 ஐவர்க் கொருசெய் விளைந்து கிடந்தது
ஐவரும் அச்செய்யைக் காத்து வருவார்கள்
ஐவர்க்கு நாயகன் ஓலை வருதலால்
ஐவரும் அச்செய்யைக் காவல்விட் டாரே.
—......

— என்பது :— ஐவராவது ஐம்புலாதிகள். செய்பாவது சீவாத்மா. விபரம் எந்தப்படி? என்றால், சீவாத்மா மயங்கி விசாரமில்லாமல் சமுசார விஷய சுகத்தை ஐம்புலாதிகளுக்கு நாள்தோறும் நடத்துகிற தானபடியினலே சீவாத்மாவுக்குச் 'செய்' என்னும் நாமம் உண்டாச்சுது. ஆகையினலே, ஐவராகிய ஐம் புலாதிகளுக்கு அந்தச் சீவாத்மா பொதுவாகையி னலே ஐவர்க்கொரு செய் விளைந்து கிடந்தது என் னும் சத்தத்துக்கு விபரம். ஆகையினலே ஐம்புலா திகள் அந்தச் சீவாத்மாவைத் தொடர்ந்திருக்கையி னலே 'ஐவரும் அச்செய்யைக் காத்துவருவார்கள்' என்னும் சத்தத்துக்கு விபரம். சிவாங்கிசமாகிய சத் திநிபாத விவேகம் அந்த சிவாத்மாவுக்குத் தோற்றின பின் ஐம்புலாதிகள் மித்தைபாகையினலே 'ஐவர்க்கும் நாயகன் ஓலைவருதலால் ஐவரும் அச்செய்யைக் காவல் விட்டாரே' என்னும் சத்தத்துக்கு விபரம் என்க.

(இ-ள்) ஐவர்க்கு ஒருசெய் விளைந்து கிடந்தது—பஞ் சேந்திரியங்கள் நுகர்தற்கு இடமாக அமைந்த வினைப்போக

மாகிய தேகம் என்னும் ஒருசெய் தோன்றிக் கிடந்தது, ஐவரும் அ செய்யை காத்து வருவார்கள்—பஞ்சேந்திரியங்களாகிய ஐவரும் (விஷயாந்தரங்களாகிய எரு முதலியன பெய்து) மேலும் செய் நன்றாக விளையுமாறு காத்திருப்பார்கள், (எனவே, அவ்வினையை வேறொருவர் நுகராதபடி நியதியின்படி தாங்களே நுகரப்பார்த்திருத்தல்) ஐவர்க்கு நாயகன் ஓலை வருதலால்—பஞ்சேந்திரியங்களையும் சேட்டிப்பிக்கும் பதியாகிய தலைவனுடைய ஓலை என்று சொல்லப்படும் ஆணைவருங்காரணத்தால், ஐவரும் அ செய்யை காவல் விட்டார் ஏ—(இச் சரீரத்தால் நுகரக்கிடக்கும் வினைப்பயன் அற்றபடியால் எஞ்சிய வினைப்பயன் நுகர்தற்கு வேறு உடம்பு முதலியவைகளைக்கொள்ளுமாறு இறைவன் ஆணைகிடைத்தபடியால்) பஞ்சேந்திரியங்களாகிய ஐவரும்தாம் அவ்வினையை நுகராமல் விட்டுவிட்டார்கள் என்றவாறு.

இம்மந்திரக் கருத்து—இத்தேகம் உள்ளபோதே பதிப்பொருளுடன் அத்துவிதக் கலப்பெய்தி ஆன்மா இன்புற்றிருத்தல் வேண்டும் என்பதாயிற்று. இனி, 'வினைப்போகமே யொரு தேகங் கண்டாய்வினை தானொழிந்தால் — தினைப்போது நில்லாது கண்டாய்'' என்னும் பட்டினத்துப்பிள்ளையார் திருவாக்கு இதனை வலியுறுத்தும் என்க.

110 கரும்புந் தேனும் கலந்ததோர் காயத்தில்
அரும்பும் கந்தமும் ஆகிய ஆனந்தம்
விரும்பியே யுள்ளம் வெளியுறக் கண்டபின்
கரும்பும் கைத்தது தேனும் புளித்ததே.
—2976.

(இ-ள்) ஆன்மாவானது கரும்பும் அதன் இரதமாகிய தேனும் அரும்பும் அதன் மணமும் பொருந்தியிருப்பதை யொத்திருக்கின்ற சிவானந்தத்தை ஒரு உடம்பிலே பர வெளியிலே சிவஞானத்தால் விரும்பி அத்துவிதமாகப் பொருந்தியனுபவிக்கத் தொடங்கியபின் கரும்பும் கசந்து விட்டது, தேனும் புளித்துவிட்டது என்றவாறு. இத்திரு மந்திரம் அணைந்தோர் தன்மை கூறியது.

உள்ளம்—ஆன்மா. பரமானந்தத் தேனமுதை யுண்ணும் சிவஞானிகள் ஒருக்காலும் உலக இன்பத்தை விரும்பார் என்றபடி, ஆகிய—போன்ற ஒப்புப் பொருட்டு என்க.

111 **நினைப்பும் மறப்பும் இலாதவர் நெஞ்சம்**
**வினைப்பற் றறுக்கும் விமல னிருக்கும்**
**வினைப்பற் றறுக்கும் விமலனைத் தேடி**
**நினைக்கப் பெறிலவன் நீளிய னாமே.**
—2970.

(இ-ள்) வினைப்பற்று அறுக்கும் விமலன் நினைப்பும் மறப்பும் இலாதவர் நெஞ்சம் இருக்கும்—தன்னை அணைந்தோர் வினைப்பற்றை முற்றும் நீக்கும் அநாதிமலமுத்தனாகிய பதி அறிவும் அறியாமையுமாகிய நினைப்பு மறப்புக்கள் அற்ற சிவஞானிகளது இதய கமலத்தில் (பரம ஞானாகாசமாகிய சோதியாய்) விளங்கியிருப்பன், வினைப்பற்று அறுக்கும் விமலனை தேடி நினைக்கப்பெறில் அவன் நீளியன் ஆம் ஏ— அவ்வாறு வினைப்பற்றை நீக்கும் மலமுத்தனை நினைப்பும் மறப்பும் அறாமல் தேடிச் சிந்திக்கப் பெறில் அவர்

நினைவில் அகப்படானுகிச் சேய்மைகண் உள்ளவனுவான் என்றவாறு,

மாயாகருவிகாணங்களால் பதிப்பொருள் அறியப்படாது என்பதும், நின்மலமாகிய சிவகரணங்களால் சிவஞானமே கண்ணுகக்கொண்டு அஃது அறியப்படும் என்பதும் கருத்தாகக்கொள்க. இதனை, "அறியாமை அறிவகற்றி" என்னும் சிவஞான சித்தித் திருவிருத்தத்தா னுணர்க.

112 பூதக்கண் ணாடியிற் புகுந்திலன் போதுளன்
வேதக்கண் ணாடியில் வேறே வெளிப்படும்
நீதிக்கண் ணாடி நினைவார் மனத்துளன்
கீதக்கண் ணாடியிற் கேட்டுநின் றேனே.
—2986.

(இ—ள்) பூதக்கண்ணாடியில் புகுந்திலன் போதுளன் வேதம் கண்ணாடியில் வேறே வெளிப்படும்—பூதவிகாரமாகிய உலோகங்களினுய கண்ணாடியிலே (முகம் முதலிய பெரிய வடிவங்களின் சாயை உள்ளடங்கி) விளங்குமாறு போல வேதமாகிய கண்ணாடியினுட் புகுந்து தோன்றுனுய் வேதாந்தப் பொருளாய்த் தனியே வெளிப்பட்டுத் தோன்றுவன், அவன் எக்காலத்து முள்ளான்; (ஆயினும்) நீதிக்கண்ணாடி நினைவார் மனத்து உளன்—அவ்வேத சிவாகமங்களிலே கூறப்பட்ட விதிகளை ஆராய்ந்தறிந்து அம்முறைப்படி (ஞானசாரியனை அடுத்து அநுக்கிரகம்பெற்றுச்) சிந்தித்துத் தெளிந்து தியானிப்பார் இதயகமலத்து விளங்கித் தோன்றுவன், (இவ்வியல்புகளை யெல்லாம்) கீதம் கண்ணாடி

யில் கேட்டு நின்றேன் ஏ—இசையையுடைய வேதமாகிய கண்ணாடியில் கண்டறிந்து நின்றேன் என்றவாறு.

"அல்லையீது அல்லையீதென மறைகளும் அன்மைச் சொல்லினால் துதித்து இளைப்பன" ஆகலின் இதுவே பரம் பொருள் எனச் சுட்டிக்காட்டா தொழிந்தன; அதனால், அதனுட் புகுந்திலன்; வேதாந்தப் பொருளாயிருத்தலின் வேறே வெளிப்பட்டருளும் எனக்குறித்தபடி காண்க. கீதம்—ஆகு பெயராய் வேதத்தை யுணர்த்தியது.

**113 மண்ணிற் கலங்கிய நீர்போல் மனிதர்கள்**
**எண்ணிற் கலங்கி இறைவன் இவனெனார்**
**உண்ணிற் குளத்தின் முகந்தொரு பால்வைத்**
**தெண்ணிற் படுத்தச் சிவனவ னாமே. [துத்**
**—2991.**

(இ-ள்) மனிதர்கள்—மக்களுடம்பு பெற்ற (ிறப்பல)ர், மண்ணில் கலங்கிய நீர்போல் — நிலத்தியல்பால் திரிந்த நீர்போல, எண்ணில் கலங்கி—மாயா சம்பந்தத்தால் எண்ணத்தில் கலக்கமுற்று, இறைவன் இவன் எனார்—(உண்மை விளங்காமையால்) இறைவன் இவன் என்று அறியமாட்டார், உள் நிற்கு உளத்தின் — உள்ளே நிற்கும் இருதய கமலத்திலே, ஒருபால் முகந்து வைத்து — ஞானசாரியருடைய அநுக்கிரகத்தால் ஒருபாலாகிப் பரம்பொருளை முகந்து வைத்து (க் கேட்டுச் சிந்தித்தபடி) தெண்ணிற்படுத்த — தெளிந்துநிற்க, சிவன் அவன் ஆம்—(சிவானந்த நிட்டை கூடிச் சிவப்பொருளுடன் அத்துவிதக் கலப்பெய்தி) சிவமாந்தன்மைப் பெருவாழ்வடைவான் என்றவாறு.

"நிலத்தியல்பா னீர்திரிந் தற்றாகும்" என்பது திருக்குறள்—452. "அப்பென்றும் வெண்மைய தாயினு மாங்கந் நிலத்தியல்பால்—தப்பின்றி யேகுண வேற்றுமை தான்பல சார்தலினுல்" என்ற பட்டினத்துப் பிள்ளையார் திருவாக்கும் காண்க. பால்—இயல்பு: முகத்தல்—அபேத பாவனையைக் குறித்து நிற்ற லென்பர்.

திருச்சிற்றம்பலம்.

---

திருமூலதேவர் திருவுளம்பற்றின திருமந்திரத்துக்குப் பயன் உள்ளபடியே கம்பளச்சட்டை கயிலாய சித்தர் சாதகர் அறிந்து ஆத்மலாபம் பெறும்படிக்கு இட்டவுரை சம்பூரணம்.

திருமூலதேவநாயனுர் திருவடிவாழ்க.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருமந்திரம்.

## திருப்பாட்டு முதற்குறிப்பகராதி.


| | | |
|---|---|---|
| அஞ்சுள | 2026 | 90 |
| அத்திப்பழமு | 160 | 25 |
| அநாதிசொரூ | | 83 |
| அப்பினிற் | 136 | 67 |
| அற்றவெளி | 128 | 75 |
| அன்னம் | 2006 | 102 |
| ஆடம்பரங் | 1655 | 5 |
| ஆதாரம் | | 57 |
| ஆதித்தனே | 1986 | 48 |
| ஆமாறறி | 2846 | 31 |
| ஆயத்துள் | 1530 | 76 |
| ஆரைபழுத் | | 108 |
| இருட்டறை | 1514 | 30 |
| இருவரிருந் | | 52 |
| ஈசனிருப்ப | | 62 |
| உச்சிக்கு | | 96 |
| உடம்புமுடம் | 2148 | 12 |
| உந்திக்கமல | 869 | 46 |
| உருகிப்புறப் | | 60 |
| உருவிலி | 2941 | 50 |
| உரையற்ற | 2955 | 15 |
| உலையொக்க | | 33 |
| உள்ளத் | 431 | 22 |
| உள்ளம்பெ | 1823 | 19 |
| ஊமையெழு | 2158 | 45 |
| ஊறும்அரு | | 37 |
| எட்டினிலெ | | 61 |
| எட்டும்இரண் | | 21 |
| எண்ணுயிர | 603 | 89 |
| எழுதாத | 2885 | 29 |
| என்னைஅறி | 2366 | 17 |
| ஏற்றம்இர | 2873 | 59 |
| ஐவர்க்கொ | | 109 |
| ஒடுங்கிநிலை | 1624 | 20 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஒன்றேகலப் | | 36 | தோட்டத்தின் | 2933 | 87 |
| கண்டறியா | 2942 | 13 | நாதனிருக்கு | | 69 |
| கண்ணுக்கு | 599 | 70 | நினைப்புமற | 2970 | 111 |
| கத்தும்கழு | 1538 | 77 | பண்ணுதபே | | 106 |
| கரடிகளைங் | | 94 | பத்துப்பரும் | 2888 | 81 |
| கரும்புந்தே | 2976 | 110 | பதிபசுபாசம் | 115 | 1 |
| கள்ளவழி | | 28 | பழுத்தன | 2721 | 104 |
| காட்டுங்குறி | 2937 | 14 | பள்ளச்செய் | 2871 | 101 |
| காணிப்பொன் | | 10 | பன்றியும்பா | 2918 | 86 |
| காயம்பலகை | 2866 | 85 | பாம்புமதியை | 871 | 78 |
| குருட்டினை | 1680 | 3 | பார்ப்பானக | 2883 | 98 |
| கூகையும் | 2891 | 74 | பாருக்குக் | 1982 | 107 |
| கொட்டியும் | 2901 | 72 | பிட்டடித் | 1781 | 11 |
| கொல்லைமுக் | 2912 | 88 | புலமைந்து | 2025 | 91 |
| கோத்தகோ | | 54 | பூதக்கண் | 2986 | 112 |
| கோயிலும் | | 68 | பெண்ணல்ல | 1872 | 63 |
| சூரியகாங் | 117 | 99 | போக்குவர | | 84 |
| சொன்னம்கு | | 42 | மண்டலத்துள் | 1999 | 47 |
| ஞானமில்லா | 242 | 8 | மண்ணிற்கல | 2991 | 113 |
| ஞானமிலார் | 1656 | 4 | மண்ணையிட | 1983 | 71 |
| தஞ்சாவூர்த் | | 39 | மத்தகமொத் | | 40 |
| தண்டுடனே | 752 | 80 | மலமில்லை | 2957 | 103 |
| தன்னைப்பர | 1432 | 2 | மனத்திலிரு | 1638 | 32 |
| தன்னையறிய | 2355 | 9 | மனத்திலெழு | 1681 | 24 |
| தான்வரை | 2954 | 55 | மாணிக்கமாலை | 2064 | 35 |
| திகைக்கின்ற | 2214 | 79 | மாயனைநாடி | 2982 | 44 |
| துரியமிருப் | 2159 | 34 | முக்காத | 2916 | 73 |

| | | |
|---|---|---|
| முத்துப்பவள | | 105 |
| முப்பதும்முப்ப | 154 | 58 |
| முற்பதினெங் | | 49 |
| முன்னிக்கொ | 2152 | 82 |
| மூடங்கெடா | 241 | 7 |
| மூலநாடி | 622 | 66 |
| மூன்றுளமாளி | 2479 | 92 |
| மொட்டித் | 2919 | 93 |
| யான்பெற்ற | 85 | 18 |
| வண்ணுன் | 800 | 65 |
| வம்புபழுத்த, | 2607 | 97 |
| வழுதலைவித் | 2869 | 26 |
| வாசலின் | | 100 |
| வாசித்துப்பூ | 1506 | 23 |
| வாழைபழுத் | | 27 |
| வாழையைச் | 2922 | 53 |
| வாயுமனமு | 1178 | 51 |
| வானுக்குளீ | | 16 |
| விச்சுக்கல | | 95 |
| விண்ணின்றி | 113 | 64 |
| வெளியில்இரே | | 43 |
| வெளியில்வெளி | 124 | 41 |
| வேடநெறி | 240 | 6 |
| வேதாந்தம்சித் | | 56 |
| வேராணியற் | | 38 |




ஸ்ரீ வெங்கடேஸ்வர் பிரஸ், கும்பகோணம்.